## அராத்துரை

மின்னம்பலத்தில் இருந்து இன்றைய நவீன இளைஞர்களின் வாழ்கை முறை பற்றி தினமும் வரும் வகையில் ஒரு தொடர் எழுத முடியுமா என என்னிடம் ஆலோசித்தனர். முதலில் இதை கட்டுரையாகத்தான் எழுத நினைத்தேன். திரு.காமராஜ் அவர்கள் கட்டுரையாக வந்தால் சுவாரசியம் இருக்காது. கதை போலவே எழுதுங்கள் என்றார். இந்த வாக்கியத்தில் ‘‘போலவே’’ என்பது முக்கியமானது. அதாவது கதையாக எழுதக்கூடாது, கதை போல இருக்க வேண்டும்.

இந்த சுவாரசியமான விளையாட்டு ஆரம்பமானது.கதை போல ஆரம்பித்து , கட்டுரையின் நடையையும் ஆங்காங்கே நுழைத்து எழுத ஆரம்பித்தேன். பிறகு இது தானே தனக்கான நடையை உருவாக்கிக்கொண்டு , இன்றைய இளைஞர்களின் லைஃப் ஸ்டைல் தொடராக ஓட ஆரம்பித்தது.இந்த தொடரில் கதை எங்கும் ஜம்ப் ஆகாது. திடீரென்று , ‘‘ஒரு மாதம் கழித்து‘‘ என்றெல்லாம் எழுதி போங்காட்டம் ஆடவில்லை. அன்றாட வாழ்கை எப்படி போகுமோ அப்படியே காலை , மாலை , இரவு என நகர்ந்தது தொடர். அதனால் திடுக்கிடும் திருப்பங்களோ , பகீர் சஸ்பென்ஸோ இந்த தொடரில் இல்லை. ஆனாலும் இந்த தொடரை மக்கள் கொண்டாடினார்கள். ஷமித்ராவை காதலிப்பதாக சிலர் எனக்கு மெசேஜ் அனுப்பினார்கள்.

எழுந்த வுடன் இதைப் படித்துவிட்டுத்தான் அடுத்த வேலை என்று சிலர் மெசேஜ் அனுப்ப ஆரம்பித்தார்கள். ஒரு நாள் இதற்கு லிங்க் கொடுக்க வில்லையென்றாலும் இன்பாக்ஸில் வந்து வருத்தப்பட்டார்கள்.இந்த தொடருக்கு அடிக்ட் ஆகி விட்டேன் என பலர் சொன்னார்கள். பலதரப்பட்ட மக்களும் இந்த தொடரை படித்தார்கள். மற்றவர்களையும் படிக்கச் சொன்னார்கள் என்பது தான் இதில் மகிழ்ச்சிகரமான ஆச்சர்யம். ஹானஸ்டாக சொல்லப்போனால் இந்த வரவேற்பை நான் கறபனை கூட செய்யவில்லை.

தற்போது காதலிக்கும் பெரும்பாலானோர் ஒத்த வயதுடையவர்கள். பழங்காலம் போல பெண் ஆணை விட நான்கைந்து வயது குறைவாக இருப்பதில்லை. ஆணை விட பெண்ணுக்கு குறைந்த வயதிலேயே மெச்சூரிட்டி வந்து விடுகிறது. ஒரே வயதில் காதலிப்பவர்களின் பிரச்சனை இங்குதான் தொடங்குகிறது. சம வயது என்பதால் ஈகோ அதிகம் தலையெடுத்து ஆடுகிறது. தன் வயதொத்த ஆணை முதிர்ச்சியற்றவனாக பார்க்கிறாள் பெண். இது தெரியாமல் அதிகாரம் செய்து கொண்டிருக்கிறான் ஆண்.

பெண்கள் இப்போது சம்பாதிக்கிறார்கள். பொருளாதார சுதந்திரம் கிடைத்ததும் எதற்கு எல்லாவற்றிலும் விட்டுக்கொடுத்து அடிமை வாழ்கை வாழ வேண்டும் என்ற எண்ணம் மேலோங்குகிறது. பல தரப்பட்ட மாற்று வாழ்கை வாழ்பவர்களையும் பக்கத்திலேயே சந்தித்துக்கொண்டு இருக்கிறார்கள். அதன் மீதும் ஒரு ஆர்வம் வருகிறது. ஒரு பக்கம் தோல்வியடைந்து கொண்டேயிருக்கும் திருமண வாழ்கை , அதிகமாகும் விவாகரத்துக்கள்.

இன்னொரு பக்கம் தங்களது தாய் தந்தையரின் போலியான தாம்பத்திய வாழ்கை. இவை இரண்டையும் பார்த்து வேறு விதமான மாற்று வாழ்கையை முயற்சி செய்து பார்க்கிறார்கள் இன்றைய இளைஞர்கள். அதிலும் தன் தாய் வீட்டு வேலை மட்டுமே செய்து அடிமை போல வாழ்ந்து கொண்டிருபப்தை காணும் ஒரு பெண்ணுக்கு திருமண வாழ்வின் மீது கடும் எரிச்சல் வருகிறது.

இதில் தன் தந்தையும் மகிழ்ச்சியாக இல்லை என்பதையும் அவள் கவனிக்கிறாள். பிள்ளைங்களுக்காக விட்டுக்கொடுத்து வாழறோம் என்பதுதான் கணவன் – மனைவி இருவரும் விடுக்கும் ஸ்டேட்மெண்ட். இதைக்கண்ட , இன்றைய இளைஞர்கள் ஏன் குழந்தைகளுக்காக தங்கள் வாழ்கையை பலி கொடுக்க வேண்டும்? தங்கள் வாழ்கையே பிரதானமானது . வாழ்கை ஒரு முறைதான்.அதை தனக்காக வாழ்ந்து பார்ப்போம் என முடிவெடுக்கிறார்கள்.

நியாயம் , தர்மம் , கலாச்சாரம் , சமூகம் , சட்டம் , எத்திக்ஸ் , பழக்க வழக்கங்கள் எல்லாம் இரண்டாம் பட்சமே. தான் என்பதுதான் இதில் பிரதானமானது. சரியோ , தவறோ , எனக்குப் பிடித்ததை நான் செய்வேன். என் விருப்பங்களை எதற்காகவும் விட்டுக்கொடுக்க மாட்டேன் என்ற மனப்பான்மையில் வாழ் ஆரம்பிக்கிறார்கள். இதில் பாஸிடிவ் , நெகடிவ் இரண்டும் இருக்கிறது. இந்த மெண்டாலிட்டியில் வாழும் போது என்ன மாதிரியான தாக்கங்களை ஏற்படுத்துகிறது என்பதைத்தான் இந்த கதை ஓட்டத்தில் பார்க்கலாம். இந்த ஸ்டைல் வாழ்கையில் விஷயங்களும் மாற்றி எழுதப்படும் . காதலுக்கு புது டெஃபனிஷன் கொடுக்கப்படும். கேரிங்க் என்ற வார்த்தை அதிகம் பேசப்படும். செக்ஸ் என்பது எட்டாக்கனியாக இருக்காது. சுதந்திரம் முதன்மையாகும். சமூகம் டாபூ என நினைக்கும் அனைத்தும் அடித்து நொறுக்கப்பட்டு , புதுப்புது வாழ்வியல் நெறிமுறைகள் உருவாக்கப்படும். பெண்ணே அனைத்து வேலைகளையும் செய்ய மாட்டாள். அனைத்து வேலைகளையும் ஆணும் பகிர்ந்து கொள்ள வேண்டும். பாசம் , நேசம் , காதல் என்ற போர்வையில் சும்மா அமர்ந்து கொண்டு சுகம் காண முடியாது. செய்யும் வேலைகள் அனைத்தும் கவனத்தில் கொள்ளப்படும், கணக்கு வைத்துக்கொள்ளப்படும். இன்று நீ எனக்கு ஒன்று செய்தால் , நாளை நான் உனக்கு ஒன்று செய்வேன் என்பது மறைமுகமாக அமலில் இருக்கும். பணத்தை இருவரும் சரிசமமாக பங்கிட்டு செலவு செய்வார்கள். பிரிவும் வெகு சுலபம்.

இந்த தொடர் புத்தகமாக வந்தது. இத்தோடு வந்தத இந்த தொடரை சுதந்திரமாக எழுத அனுமதித்த ஆசிரியர் காமராஜுக்கும் , ஒருங்கிணைப்பில் ஈடுபாட்டுடன் செயல்பட்ட சுகந்திக்கும் , தினமும் அயராமல் படம் போட்டு கொடுத்த சசி மாரீஸுக்கும் , அவ்வப்போது அருமையான ஆலோசனைகளை சொன்ன அந்திமழை அசோகனுக்கும் நன்றிகளும் , அன்பும். ஃபேஸ்புக்கில் தொடர்ந்து படித்து பாராட்டி , உற்சாகமளித்த அனைத்து நண்பர்களுக்கும் நன்றியும் சியர்ஸும் !

புத்தகம் வெளிவந்து விற்றுத் தீர்ந்தது. அவ்வப்போது , சிலர் உயிர் மெய் எங்கே கிடைக்கும் என்று கேட்டுக்கொண்டேயிருந்தனர். இதுவரை வேறு எந்த புத்தகத்தையும் படித்திராத சிலர் இதைத்தான் முதன்முதலாக படித்ததாக சொன்னார்கள். இதற்கான வாசகர் பரப்பு பெருத்த ஆச்சர்யம். நகரத்து யுவதி முதல் , கிராமத்தில் இழைப்புளி தேய்த்துக்கொண்டிருக்கும் ஆசாரி வரை இதன் வாசகர்கள். என் நண்பர் ஒருவர் இந்த புத்தகத்தை , இதுவரை எதையும் வாசிக்காத ஒரு பெண்பணியிடம் கொடுத்து இருக்கிறார். அவர் மலேஷியாவில் ஒரு சாப்பாட்டுக்கடையில் வேலை செய்து கொண்டிருப்பவர். படித்து விட்டு , அராத்தோட மத்த புத்தகங்கள் வேண்டும் என தொந்தரவு செய்ய ஆரம்பித்து விட்டதாக கூறினார்.

உண்மையில் சொல்லப்போனால் , இந்தக் கதையை எழுத நான் மெனக்கெடவில்லை. என்னுடைய லெஃப்ட் ஹேண்ட் ரைட்டிங்க் என்று சொல்லலாம். தினமும் எழுத வேண்டும். விமாஅன நிலையத்தில் , ரயில் பயணத்தின் போது , காரை ஓரங்கட்டி நிறுத்தி விட்டு , விஷ்ணுபுரம் விழா நடந்து கொண்டு இருக்கையில் என எங்கு நேரம் கிடைக்கிறதோ , அங்கே அமர்ந்து 30 நிமிடத்தில் டைப் செய்து அனுப்பி விடுவேன்.

பலரும் விரும்புவதால் , இப்போது கிண்டில் வெர்ஷனாக வெளிவருகிறது. உங்கள் பாய் ஃபிரண்டு , கேர்ள் ஃபிரண்டுக்கு பரிசளிக்கலாம்.

பிழை திருத்தம் செய்து கொடுத்தவர் என் அன்பிற்குரிய சசிகலா ! பிழைகள் இருப்பின் அவரை ஃபேஸ்புக்கில் போய் கலாய்க்கலாம். விஷயத்தை சொன்னவுடன் , மரண வேகத்தில் அட்டகாசமான படம் வரைந்து கொடுத்து அசத்தியது என் அன்புத்தம்பி பிரேம் டாவின்ஸி ! கிண்டிலுக்காக பேஜ் செட் செய்து கொடுத்தது என் நண்பன் கோபால கிருஷ்ணன்.

எந்த முன்முடிவும் இல்லாமல் கதைக்குள் குதிக்கலாம். ரைட் ஸ்டார்ட்ஸ் நௌ ....சியர்ஸ் !

அராத்து

araathu@outlook.com

# 1

நண்பன்  பர்த்டே பார்ட்டிக்கு அழைத்த போது போக வேண்டாம் என்றுதான் தோன்றியது. பெரும்பாலும் அவனது அலுவலக நண்பர்கள் இருப்பார்கள், மொக்கையாக இருக்கும் என்று யோசித்தான். அதை நண்பனிடம் சொல்லவும் செய்தான்.

"இல்ல மச்சி, இது சும்மா ஃபார்மல் பார்ட்டிதான். கூட வேலை செய்யறவங்க எல்லாரும் வருவாங்க. தண்ணி பார்ட்டி இல்லை. லாவிஷான டின்னர் பஃபே மட்டும்தான். அதுவும் 9 மணிக்கெல்லாம் முடிஞ்சுடும். அப்புறம் தனியா ஈசிஆர்ல நாம் நம்ம ஃப்ரெண்ட்ஸுங்கக் கூட ஜமாய்க்கலாம். இந்த டின்னர் அப்ப நீ இருந்தா வசதியா இருக்கும்," என்றான் நண்பன்.

"சரி மாப்ள," என சம்மதித்து கேஷுவலாக டிரஸ் செய்து கொண்டு அந்த 3 * விடுதிக்கு சென்றான்.

நண்பனுக்காகச் சுழன்று, சின்னச் சின்ன வேலைகளைச் செய்யும்போதுதான் கவனித்தான், இன்னொரு பெண்ணும் சுறுசுறுப்பாக ஆர்கனைஸ் செய்து கொண்டு இருந்தாள்.

"இவ யார் மச்சி, உன் ரிலேட்டிவா ?" என நண்பனிடம் கேட்டான்.

"ஷமி, ஷமி, இங்க ஒரு நிமிஷம் வாயேன்," என்று நண்பன் அழைக்க, எஸ்கலேட்டரில் ஓடி வரும் புள்ளிமான் போல எக்ஸ்ட்ரா ஸ்பீடில் நண்பனிடம் வந்த ஷமி என்கிற ஷமித்ரா, "என்னடா பர்த்டே பேபி" என்றாள், கடையோரக் கண்ணால் இந்த கதையின் ஹீரோ சந்தனை பார்த்துக்கொண்டே !

"ஷமி, இவன் தான் சந்தன், என் க்ளோஸ் ஃப்ரெண்ட், யாரு இந்தப் பொண்ணுன்னு இந்த கூட்டத்துல உன்னை மட்டும்தான் கேட்டான், அதான் இண்ட்ரோ குடுத்துடலாம்னு கூப்பிட்டேன்."

"ஹாய் சந்தன்"

"ஹாய் ஷமி"

இருவரும் கை குலுக்கிக்கொண்டனர்.

ஏதோ ஒரு ஈர்ப்பு இருவருக்குள்ளும் இருந்திருக்கும் போல, இருவரும் சேர்ந்தே பர்த்டே வேலைகளை செய்தனர். அந்தப் பார்ட்டிக்கு இடையிலே, ஃபேஸ்புக் ஐடியை வாங்கி ஃப்ரெண்ட் ஆகிக்கொண்டனர். வாட்ஸ் அப்பில் ஸ்மைலி போட்டு ஹாய் சொல்லிக்கொண்டனர். அன்று பிரிவதற்குள் ஷமித்ராவின் சில ஃபோட்டோக்களுக்கு லைக் போட்டு, சில ஃபோட்டோக்களுக்கு குறும்பான கமெண்ட் போட்டு சந்தன் விளையாடிக் கொண்டிருக்க, ஷமி ரசித்த படி இருந்தாள்.

அன்று இரவு நடந்த குடி பார்ட்டியில் வழக்கமாக அதிகம் குடிக்கும் சந்தன் மெதுவாகச் சிப்பிக்கொண்டு இருந்தான். அனைத்து நிகழ்வுகளையும் ஃபோட்டோ எடுத்து அனுப்பிக் கொண்டிருந்தான். நடுநடுவே சில செல்ஃபிக்கள்.

அளவாக குடிக்கும்படி அறிவுறுத்தல் ஷமியிடம் இருந்து.

குடியின் அளவு குறைவுதான் என காட்டும் விதமாக வாட்ஸப்பில் ஆடியோ ரெக்கார்ட் செய்து அனுப்பினான். 'குழறுதா என செக் செய்து கொள்' எனும் வாசகத்தோடு.

ஆடியோ ஓப்பன் செய்தாள்.

'ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி ஷமி'

'குரல் குழறல .... ஆனா நல்லா குடிச்சிருக்க ....தெளிவா தெரியுது' என மெசேஜ் அனுப்பினாள்.

அன்று இரவு படுக்கையில் "ஷமி... ஷமி...." என்று சொல்லிக்கொண்டே படுத்தான். மணி அதிகாலை 4.

இரவு ஒன்பது மணிக்கு அறிமுகமாகி, அதிகாலை 4 மணிக்குள் குடும்பமே நடத்தி முடித்து விட்டது போல் ஒரு ஃபீல். அதற்குள் இருவருக்கும் நடந்த டேட்டா டிரான்ஸாக்ஷன் 700 எம்பியை தாண்டியிருக்கும். எவ்வளவு விரைவாக உறவு மலர்ந்து வளர்ந்து கனிந்தும் விடுகிறது ?

காலையில் குட்மார்னிங் வரும் என்று இருவருக்குமே தெரியும். அதை எதிர்பார்த்தே இருவரும் தூங்கினார்கள்.

எதிர்பார்த்தது போலவே குட்மார்னிங்கில் தொடர்ந்து, டேட்டா பேலன்ஸை தேய்த்துத் தேய்த்து காஃபி ஷாப், மால், சினிமா, டின்னர், வீக் எண்ட் கெட்அவே, லாங் ட்ரைவ் என தொடர்ந்து விரைந்து முன்னேறினார்கள்.

முதல் முத்தம் டின்னர் முடிந்து ஷமியை அவளது வீட்டின் முன்னே இறக்கி விடும்போது நடுத்தெருவில் கொடுக்கப்பட்டது. லாங் டிரைவின் போதும், வீக் எண்ட் செலிப்பரேஷன் போதும் இறுக்கிக் கட்டியணைத்தல், உதட்டுத் துப்புரவு என பசித்த நாகம் போலச் சீறிக்கொண்டு சென்றது.

சந்தன், சந்திரசேகரைத்தான் செல்லமாகச் சந்தன் என ஆக்கிக்கொண்டான். திருச்சிப் பையன். கல்லூரிக்காக சென்னை வந்து, சென்னையிலேயே செட்டில் ஆகியாகி விட்டது. பேங்கிங் ப்ரொஃபஷனல். தனியாக பேங்க் ஆரம்பிக்க வேண்டும் என்பது லட்சியம் அல்ல. ஆனால் தனியாக பக்காவான ஒரு ஃபினான்ஷியல் கன்ஸல்ட்டிங் கம்பெனி ஆரம்பிக்க வேண்டும் என்பது தீராத் தாகம்.

ஷமி கோவைப்பெண். வேலைக்காக சென்னை வந்து, சென்னை மேல் காதலாகி, சென்னைப் பெண்களை விட ஒரு படி அதிகமாகவே சென்னையை அனுபவித்துக் கொண்டிருப்பவள். பெண் என்றால், வீடு பெருக்கி, சமைத்துப்போட்டு, டிப்பிக்கல் ஹவுஸ் வொய்ஃப் ஆக இருப்பதில், கொஞ்சமும் விருப்பம் இல்லாதவள். தன்னைச் சமமாக மதிக்கும் இளவரசன் கிடைப்பான் என்ற நம்பிக்கை அதிகம். கண்டண்ட் ரைட்டிங் ப்ரொஃபஷனல். தனியே நிறுவனம் ஆரம்பிக்கக் கொள்ளை ஆசை. கிரண் மஜூம்தர் ஷா ஆதர்சம்.

இவர்களின் உறவு மலர்ந்து 2 வாரம் கழித்து சனிக்கிழமை அன்று சோம்பலாக எழுந்து நெட்டி முறித்துக் கொண்டிருந்தபோது, மெசேஜ் டியூன் போட எடுத்துப்பார்த்தால், 'உன் வீட்டுக்கு இன்று வரட்டுமா ?' என ஷமி கேட்டிருந்தாள்.

'இதெல்லாம் கேட்கணுமா ? வா மை டியர்' என்று மெசேஜ் அனுப்பி விட்டு அறையைப் பார்த்தான்.

சிதறிக்கிடந்தது என்று சொல்வது க்ளிஷேவாக இருக்கக்கூடும். குதறிக்கிடந்தது. உள்ளாடைகள், சிகரெட் பாக்கெட் என ஒரு காம்போ. மீந்த உணவுப் பொட்டலங்கள் மற்றும் காலி பியர் பாட்டில்கள் என இன்னொரு காம்போ. கொஞ்சமாவது சுத்தம் செய்ய வேண்டும் என நினைத்துக் கொண்டே பேஸ்ட்டை பிரஷ்ஷில் பிதுக்கிப் பல் தேய்த்து முடிப்பதற்குள் ஷமி காலிங் பெல் அடித்தாள்.

நெளிந்து கொண்டே கதவைத் திறந்தான்.

இதற்குப் பிறகு நடக்கும் சம்பவங்களையும் சம்பாஷணைகளையும் கவனமாகப் படிக்கவும். அப்பால யூஸாவும் :—)

நுழைந்ததும் கதைவைச் சாத்திக்கொண்டு கட்டிக்கொண்டாள். மௌத்வாஷ் வாசனையை முத்தத்தினூடே பெற்றாள். "என்னடா வீட்டை இப்படி வச்சிருக்க ? இரு முதல்ல உனக்கு பிரேக் ஃபாஸ்ட் ரெடி பண்றேன்," என்றாள்.

"இல்லடீ, முதல்ல டீ குடிச்சுக்கறேன். நீயும் குடிக்கிறியா ? டீ போட்டுடறேன்," என்றான்.

"க்ரோஸரீஸ் ஏதாச்சும் வச்சிருக்கியாடா ? நீ முதல்ல டிரஸ் போட்டுக்கிட்டு கிளம்பு. அதுக்குள்ள டீ போட்டுடறேன். கொஞ்சம் க்ரோஸரீஸ் வாங்கிட்டு வா....நான் பிரேக் ஃபாஸ்ட் பண்ணிடறேன்," என்றபடி பியர் பாட்டில்களை எடுத்து குப்பைக் கூடையில் போட்டாள்.

டீ போட்டாள், சமையலறையை சுத்தம் செய்தாள். ஹாலை சுத்தம் செய்து வேக்கம் க்ளீனர் போட்டாள். மாப் போட்டாள்.

க்ரோஸரீஸ் வாங்கி வந்தான்.

ஓட்ஸ் கிச்சடி செய்தாள். சிலந்தியை துரத்தி விட்டு, வெங்காயச் சட்னி அரைத்தாள். குளித்து விட்டு வந்து, சுத்தமாக ஆகி விட்டிருந்த ஹாலில், தலையணையில் சாய்ந்து கொண்டே ஒருவருக்கொருவர் ஊட்டி விட்டுக்கொண்டு காலை உணவு உண்டார்கள்.
சோயா பாலை இரு கிளாஸ்களில் ஊற்றிக்கொண்டு வந்து கொடுத்தான். சோஃபாவில் வசதியாக அமர்ந்து கொண்டு, விண்ணைத்தாண்டி வருவாயா படம் பார்த்தார்கள். படத்தை அடிக்கடி ரிவைண்ட் செய்ய வேண்டி இருந்தது. இவர்களுக்குள் ஏர்பட்ட சின்னச் சின்னக் குலாவல்கள் நீடித்ததுதான் காரணம். லன்ச்சுக்கு வெளியே சென்று சாப்பிட்டு விட்டு வந்து குட்டித் தூக்கம் போட்டார்கள்.

குட்டித் தூக்கத்துக்கு முன் படுக்கையறையை சுத்தம் செய்தாள். பெட் ஸ்ப்ரெட்டை மாற்றினாள். தலையணை உறை மாற்றப்பட்டது. ரூம் ஃப்ரஷனர் அடித்தாள். ஏசியை சுத்தம் செய்தாள்.

மாலை மீண்டும் டீ குடித்து விட்டு, கொஞ்ச நேரம் டிவி பார்த்துவிட்டு, மாகரீத்தா கலந்து குடித்துக் கொண்டே, கிம்கீடுக்கின் படம் பார்த்தார்கள்.. மெல்லிய போதையில், நினைவிருக்கும் கிறக்கத்தில் மிக மிக இயல்பாக ஒருவருக்குள் இன்னொருவர் நுழைந்து கலந்தனர்.

## 2

அடுத்த வாரம் சந்தன், ஷமி வீட்டுக்குச் சென்றான்.

எரியாத டியூப் லைட்டை ஸ்டார்ட்டர் மாற்றி எரிய வைத்தான். கீழே வைத்திருந்த நிலைக்கண்ணாடியை ட்ரில் அடித்து சுவரில் ஏற்றி வைத்தான். பவருக்கு சிரமில்லாமல் இருக்க, ரெடிமேட் ஜங்ஷன் பாக்ஸ் எலக்ட்ரிக்கல் ஷாப்பில் வாங்கி வந்து, எக்கச்சக்க பிளக் பாய்ண்ட்டுகளுடன் அடித்துக் கொடுத்தான். ஏணி வைத்து ஏறி ஒட்டடை அடித்தான். பரணில் இருக்கும் பெட்டி மற்றும் பொருட்களை எடுத்து, சுத்தம் செய்து மீண்டும் பரணில் வைத்தான். ப்ரிண்டருக்கு கேட்ரிஜ் மாற்றினான். லேப்டாப்பை சீரமைத்து வேகமாக்கிக் கொடுத்தான். இதையெல்லாம் செய்து முடித்து, "ஐயா பிரியாணி எக்ஸ்பர்ட்," எனச் சொல்லி மட்டன் பிரியாணி சமைத்தான்.

ஷமித்ராவுக்கு மனம் மகிழ்ச்சியில் குத்தாட்டம் போட்டது. மனம் ரொம்பி வழிந்தது. அதை இருவருமே அன்றைய கூடலில் உணர்ந்தனர். அன்றைய கூடலுக்குப் பின் தான், 'நாம் ஏன் இருவரும் ஒன்றாக ஒரே வீட்டில் வசிக்கக்கூடாது?' என்ற எண்ணம் தோன்றியது இருவருக்கும்.

உடனே அந்த எண்ணத்தைப் பற்றி இருவரும் பேசிக்கொள்ளவில்லை. மனசுக்குள் தமக்கு பொருத்தமான இணை இவன்தான் / இவள்தான் என இருவரும் நினைத்துக் கொண்டனர். வாழ்க்கை சொர்க்கமாக இருக்கப்போகிறது என நினைத்தபடியே எக்ஸ்ட்ராவாக கட்டிப்பிடித்தபடி உறங்கிப்போயினர்.

இப்படி உல்லாசமாகவும் உற்சாகமாகவும் சில மாதங்கள் உருண்டோடின. சில மாதங்கள் கழித்து இருவரும் ஒரே வீட்டிற்கு இடம் பெயரப் போகிறார்கள்.

அது எப்படி, என்னவாக ஆனது ?

ஒரு ஞாயிற்றுக்கிழமை முன்மாலை நேரம். ஸ்டார் மூவீஸில் படம் பார்த்தபடி இருந்தனர் இருவரும். இடம், ஷமித்ராவின் வீடு. சந்தன் தான் ஆரம்பித்தான்.

"ஷமி, இந்த வீட்டுக்கு இப்போ வாடகை எவ்வளவு குடுக்குற?"

"12 ஆயிரம் சந்த்"

"நான், 16 ஆயிரம் குடுக்கறேன். கிட்டத்தட்ட நாம சேர்ந்துதான் இருக்கறோம். நீ என் வீட்டிலயோ, நான் உன் வீட்டிலயோ. நாம ஏன் ஒரே வீட்ல இருக்கக்கூடாது ஷமி ? பணம் மிச்சமாகும் இல்ல ? எப்பவும் ரெண்டு பேரும் ஒன்னாவே இருக்கலாம் ஷமி, என்ன சொல்ற ?"

"யோசிச்சா ஜாலியாத்தான் இருக்கு. ஆனா ஏனோ கொஞ்சம் பயமா இருக்குடா !"

"ஏன் பயம் ? என் மேல நம்பிக்கை இல்லையா ?"

"நம்பிக்கை இல்லாமலா இவ்ளோ நாள் இவ்ளோ நெருக்கமா பழகிட்டு இருக்கேன்? ஒரே வீடுன்னா ஒரு மாதிரியா, எப்படி சொல்றதுன்னு தெரியலைடா, ஆனா கொஞ்சம் பயமா இருக்கு."

"சரி, உனக்கு எப்பத் தோணுதோ சொல்லு, அதுவரைக்கும் 12 ஆயிரம் வெட்டியா குடுத்துட்டு இரு."

"கோச்சுக்காதடா .......சரி ஒன்னாவே இருக்கலாம்.

ஆனா உன் வீடு வேணாம், என் வீட்டுக்கு நீ வந்துடு."

"ஏன்டீ?"

"இங்கே இருந்து என் ஆ.ஃபீஸ் பக்கம், இங்கேயே இருந்து பழகிட்டேன். என் வீடுன்னு ஒரு சுதந்திரமான .ஃபீல் இருக்கும்."

"அப்ப என் வீட்ல இருந்தா, ஜெயில்ல இருக்குற மாதிரி இருக்குமா ? என் ஆ.ஃபீஸ் தூரமா இருந்தா பரவாயில்லையா ?"

"டேய், உனக்குதான் லாங் பைக் டிரைவ் பிடிக்குமே ? இங்கேர்ந்து பைக்ல போய்க்கோ."

"இல்லடீ, என் வீடு ட்ரிப்பிள் ரூம். இது டபுள் ரூம் தான். அதுலயும் ஒரு ரூம் சின்னது."

"இந்த வீட்ல இருக்கும்போதுதான் ஜாலியா இருக்குன்னு நீதானடா சொன்ன ?"

"இல்லடீ, சொன்னேன்....ப்ராக்டிக்கலா பார்த்தா பெரிய வீடு இன்னும் வசதியா இருக்கும்."

இளமையும் வசீகரமும் கவர்ச்சியும் இன்னும் அதீதமாக இருந்ததால், இந்த ஆரம்பகட்ட கருத்து வேறுபாடு பெரிதாக வளராமல், கூடலில் முடிந்தது. கூடலுக்கு தெம்பும் ஸ்டெமினாவும் கிளர்ச்சியும் இருக்கும் வரையில் எவ்வளவு சண்டை வேண்டுமானாலும் போடலாம். அதிக பட்சம் அந்த சண்டை இரவு வரைதான் நீடிக்கும். ஒரு சிறு தீண்டலில் சண்டை முடிவுக்கு வந்து முத்தத்தில் ஆரம்பிக்கும். கிளர்ச்சி, கவர்ச்சி என்ற கனவு வாழ்க்கை முடிந்து நிஜ வாழ்க்கை ஆரம்பிக்கும்போதுதான் பேலன்ஸ் செய்வது கடினம்.

கூடலின் முடிவில் இவனுடைய வீட்டிற்கே அவள் வர ஒத்துக்கொண்டாள். ஆனால் தினமும் ஷமியை அலுவலகத்தில் டிராப் செய்ய வேண்டும் என்ற கண்டிஷனோடு. கண்டிஷனோடு ஷமி சந்தன் வீட்டுக்கு குடிபெயர கொள்கை முடிவு எடுத்தாகி விட்டது.

## 3

வீடு மாறுவதற்கு முன் ஃபோனிலும், மெசேஜிலும் இருவரும் பேசிக்கொண்டதன் சுருக்கம் :—

ஷமி : நான் உன் வீட்டுக்கு வந்துட்டா, உன் ஹவுஸ் ஓனர் ஒன்னும் சொல்ல மாட்டாரா ?

சந்தன் : ஹவுஸ் ஓனர் வருஷம் ஒருமுறைதான் வீட்டுக்கு வருவாரு. வாடகையை கரெக்ட்டா அக்கவுண்ட்ல போட்டுட்டா, ஐயா இந்தப் பக்கம் தலை வைக்கவே மாட்டாரு. எலக்ட்ரிக்கல், ப்ளம்பிங்னு எதுக்கும் அவரை இதுவரை கூப்பிட்டு தொந்தரவு பண்ணினதே இல்லை. ஸோ.. ஐயா செம ஹேப்பி. ஒன்னும் பிரச்சனை இருக்காது.

ஷமி : அக்கம் பக்கம் வீட்டுக்காரங்க ஏதும் சொல்வாங்களாடா ?

சந்தன் : எவனுக்கு பார்க்க நேரம் இருக்கு ? எவனாவது பார்த்தாலும் எனக்குக் கல்யாணம் ஆகிடுச்சுன்னு நினைச்சுக்குவான். உன்னைக் கேட்டா நீயும் அப்படியே சொல்லிடு.

ஷமி : அப்படி சொல்லலாமாடா ? ஒரு மாதிரியா இருக்குடா.

சந்தன் : சொல்றதுல என்னடீ இருக்கு ?

ஷமி : உன் பேரண்ட்ஸ் உன்னை பார்க்க வந்தா ?

சந்தன் : எப்பவாவதுதான் வருவாங்க. சொல்லிட்டுதான் வருவாங்க. அப்ப உன் திங்க்ஸையெல்லாம், ஒரு ரூம்ல வச்சி பூட்டிடலாம்.

ஷமி : நான் எங்க போறது ?

சந்தன் : உன் ஃப்ரெண்ட்ஸ் ரூம், இல்லைன்னா ஹாஸ்டல். அதான் 2 நாளைக்கெல்லாம் வாடகைக்குத் தராங்களேடீ.

ஷமி : எப்பல்லாம் உன் வீட்ல இருந்து ஆள் வராங்களோ, அப்பல்லாம் நான் தெருவுக்கு போயிடணும், இல்லையா ?

சந்தன் : உன் வீட்டுல இருந்து வந்தாலும் நீ ஹாஸ்டலுக்குதான்டீ போகணும். சின்ன அட்ஜஸ்ட்மெண்ட்தானடி குட்டிமா ? 2 நாள் அட்ஜஸ்ட் பண்ணிக்கிட்டா, மத்த நாளெல்லாம் ஜாலியா இருக்கலாம் இல்ல ?"

ஷமி : உன் ஃப்ரெண்ட்ஸ் கிட்ட சொல்லுவியா, நாம ரெண்டு பேரும் ஒன்னா இருக்குறதை ?

சந்தன் : க்ளோஸ் ஃப்ரெண்ட்ஸ் கிட்ட மட்டும் சொல்வேன்.

ஷமி : என்னைத் தப்பா நினைக்க மாட்டாங்களா?

சந்தன் : இதுல தப்பா நினைக்க என்ன இருக்கு ? அவ அவ ரெஸார்ட்ல ரூம் போட்டு வாரம் ஒருத்தன் கூட கூத்தடிக்கிறாளுங்க. நீ என் கூட மட்டும்தான்டீ இருக்க ? இதெல்லாம் அவனுங்களுக்குத் தெரியும். மரியாதையாத்தான் நினைப்பாங்க.

ஷமி : பயமா இருக்குடா ….

சந்தன் : நீ, உன் ஃப்ரெண்ட்ஸ் கிட்ட எல்லாம் சொல்லுவியா ?

ஷமி : ஆரம்பத்துல சொல்ல மாட்டேன். ஓவரா கதை கட்டுவாளுங்க. கொஞ்ச நாள் கழிச்சி, என் க்ளோஸ் ஃப்ரெண்ட் ஒருத்தி இருக்கா, அவ கிட்ட மட்டும் சொல்லலாம்னு பார்க்கறேன்.

சந்தன் : ரொம்ப லென்த்தியா இப்பவே பிளான் பண்ண வேணாம்டீ. ஷார்டா பிளான் பண்ணிக்கலாம். கேஸ் டூ கேஸ் டிசிஷன் எடுத்துக்கலாம்.

ஷமி : வீட்டுக்குப் புதுசா பெயிண்ட் அடிச்சிடறியா ?

சந்தன் : நல்லாதானே இருக்கு ?

ஷமி : ப்ளீஸ்டா

சந்தன் : சரி அடிச்சிடறேன்.

ஷமி : கொஞ்சம் கப்போர்ட்ஸ் அடிக்கணும், என் டிரஸ் வச்சிக்கிறதுக்கு வசதி இல்லை.

சந்தன் : நீ மொதல்ல வாடி, ஒன்னொன்னா செஞ்சிக்கலாம்.

ஷமி : அப்புறம் பாத்ரூமை கொஞ்சம் ரெடி பண்ணனும் .....

சந்தன் : ஏய் என்னாடி ? நீ இவ்ளோ நாள் அப்பப்ப இருந்த வீடுதானே ? எலக்ட்ரீஷியன், பிளம்பர், கார்ப்பென்ட்டர் வேலையா சொல்லிட்டு இருக்குற ?

ஷமி : ஒரு பொண்ணு வீட்டுக்குள்ள வந்தா அப்படித்தான். இதுக்கே மிரண்டா எப்படி ? உன்னை என்னமோன்னு நினைச்சேன், அதுக்குள்ள ஜகா வாங்கற ?

சந்தன் : எல்லாத்தையும் செய்யறேன், நீ மொதல்ல வாடி.

ஷமி : நீ மொதல்ல எல்லாத்தையும் செய்யி .....

ஒருவரையொருவர் சின்னச் சின்னதாக இரிட்டேட் செய்து கொண்டேதான் ஒரே வீட்டுக்கு மாறுகிறார்கள். சின்னக் கசப்பு இங்கே ஆரம்பிப்பதை இருவரும் கவனிக்கத் தவறுகிறார்கள்.

## 4

ஷமித்ரா வீட்டுக்குச் சென்று அவளுடைய பொருட்களை பேக் செய்தான் சந்தன். ஷமி எடுபிடி வேலைகள் பார்த்துக் கொண்டிருந்தாள். சந்தனுக்கு வியர்த்து ஊற்றியது. "ஷமி ஒரு கா∴பி போட்டுத் தர்றியா ?" என சந்தன் கேட்க, "போட்டுத்தரேன்டா செல்லம்," என்ற படியே ஷமி தன் சின்னச் சின்ன பொருட்களை நோண்டிக் கொண்டிருந்தாள். அதிக பட்சம் இன்னும் 3 நிமிடத்திற்குள், எழுந்து சென்று கா∴பி போட்டு விடுவாள்தான், ஆனாலும் அந்த 3 நிமிடம் 3 யுகமாக இருந்தது சந்தனுக்கு. 'இவள் வேலையைத்தானே செய்கிறோம், வேற எவனாவது இருந்தா இந்த வேலையையெல்லாமா இழுத்துப் போட்டு செய்துகிட்டிருப்பான் ? கா∴பி கேட்டவுடன் போட்டுக் கொடுத்தால்தான் என்ன ?' என்று மனதில் குமுறிக் கொண்டிருந்தான். ஷமி மும்முரமாகத் தன் பொருட்களை தரம் பிரித்து வைத்துக் கொண்டிருக்க, 90 செகண்ட்களில் பொறுமை இழந்த சந்தன், "ஷமி, ஒரு கா∴பி கேட்டேன்," என்று சற்றுக் கடுமையாகச் சொன்னான்.

"சொல்லி ஒரு நிமிஷம் கூட ஆகலை, அதுக்குள்ள கோவத்தைப் பாரு," என்று சொல்லியபடியே எழுந்து வந்து சந்தனை முத்தமிட்டாள். இந்த முத்தம் சற்றே கசந்தது சந்தனுக்கு. கசந்தாலும் கோபத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளவும் தவறவில்லை. யாரேனும் ஏதேனும் சொல்லிய அடுத்தக் கணம், அதை செய்ய ஷமிக்கு பிடிக்காது. உண்மையில் யார் எந்த வேலை சொன்னாலும் ஷமிக்குப் பிடிக்காது. செய்தே ஆக வேண்டும் என்றால், உடனே செய்யாமல் தனக்குத் தோன்றும் போது செய்ய வேண்டும் என்று நினைப்பாள்.

தன் சுதந்திரம் பறிபோவதாக நினைப்பாள். சந்தனுக்கு, இவளுக்குத்தானே வேலை செய்கிறோம், பதிலுக்கு ஏதாவது செய்கிறாளா என்று கோபம். சந்தன் ஷமிக்காக வேலை செய்து கொண்டு இருப்பதாலேயே, இயல்பாக அவனுக்கு ஒரு டாமினண்ட் பொஸிஷன் மனதிற்குள் உருவாகிறது. தான் என்ன சொன்னாலும் ஷமி உடனே கேட்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறான். வேலை கொடுக்கும் சோர்வு வேறு ஷமி மீது எரிச்சலாக மாறுகிறது.

'இப்படியா பொருட்களை பொறுப்பில்லாமல் வைத்துக்கொள்வாள் ?'

'மாதம் ஒருமுறையாவது வீட்டை சுத்தம் செய்வதில்லையா ?'

'எவ்வளவு பொருட்களை தேவையில்லாமல் வாங்கி வீணாக்குகிறாள் ?'

'ஒவ்வொரு விதமான பொருட்களையும் தரம் பிரித்து தனித்தனியாக வைக்கத்தெரியாதா ஒரு பெண்ணுக்கு ?'

'தேவையில்லாத பொருட்களைத் தூக்கி குப்பையில் போட வேண்டியதுதானே ? எதற்கு மூட்டைக் கட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்?'

இந்தக் கேள்விகளெல்லாம் மனதில் கொந்தளிப்பாக கொதித்துக் கொண்டிருந்தன. ஒரு கேர்ள் ஃப்ரெண்டாக இருந்தவரை ஷமி மேல் எந்தக் குறையும் இல்லை. காதல் காதல் காதல்தான். திகட்டத் திகட்டக் காதல். அவளுடைய உடை, நடை, அலங்காரம், மேனரிஸம் என அனைத்தையும் ரசித்து ரசித்துக் காதல்.

அவளுடைய வீட்டை காலி செய்வதற்காக காலையில் இருந்து வேலை பெண்டு நிமிர்ந்ததால், இந்த கோபமெல்லாம் மனதில் கொந்தளிப்பாக இருக்கிறது. ஆனால் வெளிக்காட்ட முடியவில்லை. இவ்வளவு நாள் காவியக் காதலியாக இருந்தவளை சடுதியில் எப்படி திட்டுவது ? எப்படி கோபத்தைக் காட்டுவது ?

அதனால், காபியை சாக்காக வைத்து, லேசாக அதிருப்தியை வெளிப்படுத்தினான். அவளுக்கும் சுர்ரென்றுதான் ஆனது. ஆனாலும் தனக்காக வேலை செய்து கொண்டிருக்கிறான் என்ற உணர்வால், ஒரு முத்தத்தோடு முற்றுப்புள்ளி வைத்தாள்.

சுடச்சுட கா.ஃபி போட்டுக்கொண்டு வந்து வைத்தாள். இருவரும் எடுத்து உறிஞ்சினர். இருவரின் சின்னக் கோபத்திற்கும் கா.ஃபி இதமாக இருந்தது. உண்மையில் இருவருக்கும் ஏற்பட்டது கோபமல்ல, மனச் சுணங்கல்! வேறுபாடுள்ள இருவர் சேர்ந்து இயங்கும் போது இதைப் போன்ற மனச் சுணங்கல்கள் வருவது இயல்புதான். இந்த சுணங்கலுக்கு யாரும் காரணமல்ல, யார் மீதும் தவறல்ல. இரு நண்பர்கள் ஒரே அறையில் இருந்தாலும் கூட இத்தகைய மனச்சுணங்கல்கள் வரவே செய்யும். ஆனால் பெரிய அளவிற்கு வளராது. காரணம், இருவரும் ஓரளவிற்கு மேல் ஒருவரை ஒருவர் சார்ந்து இருக்க மாட்டார்கள். அவரவர் வேலையை அவரவர் செய்து கொள்வார்கள். ஓவர் அட்டாச்மெண்ட்டும் செண்டிமெண்ட்டும் இல்லாததால் மனத்தாங்கலும் குறைவாகவே வரும்.

ஆண் பெண் சேர்ந்திருக்கையில் அவர்களிடையே காதல் வருகிறது. ஒருவர் உடலை இன்னொருவர் துய்க்கிறார் காமத்தின்பால். இதனால் அதிக நெருக்கம் ஏற்பட்டு இருவரும் ஈருடல் ஓருயிர் என்ற நிலைக்குப் போய், ஒருவர் வேலையை மற்றவர் செய்வது தங்களது கடமை என்று நினைக்கிறார்கள். இதில் ஆண், காலம் காலமாக ஆண்கள் செய்யும் வேலையை தனதாக்கிக் கொள்கிறான். அதை அவளுக்காக செய்யும்போது, எரிச்சலும் அடைகிறான்.

பெண்ணுக்கான வேலையை அவள் செய்ய வேண்டும் என எதிர்பார்க்கிறான். ஃபெமினிஸம் பற்றி கொஞ்சூண்டு தெரிந்த நவீன காலப் பெண்கள் கூட சமையல் செய்வது அடிமைத்தனம் என்பதாக நினைத்துக்கொண்டு முரண்டுப் பிடிக்கிறார்கள்.

ஃபெமினிஸத்தில் சுலபமான பகுதி, சமையல் செய்யாதிருத்தல். இந்த ஒரு விஷயத்திற்காகவே இதை மட்டும் தெரிந்துக் கொண்டு ஃபெமினிஸ்ட்டாக இருக்கும் பெண்கள் நிறைய. ஆண் பெண் நெகோஷியேஷன் சரி சமமான அளவில் நடந்தால் பிரச்சனை இல்லை. வேலையை பிரித்து செய்ய வேண்டும். ஒருவர் செய்யும் அதே வேலையை இன்னொருவரும் செய்வது, அல்லது பொதுவான எந்த வேலையும் செய்யாமல் இருப்பது போன்றவைகள் சிக்கல்களை உண்டாக்கும்.

காஃபி குடித்த தெம்பில் அன்பாக அவளை சின்ன அணைப்பு அணைத்தான். அவளும், 'பாவம் என் செல்லம் ரொம்ப வேலை பார்த்து வேர்த்து வழியுது,' என தன் உடையால் அவன் நெற்றி துடைத்தாள்.

அன்பெனும் மின்சாரம் இருவருக்குள்ளும் பாய்ந்து, இளம் ரத்தம் என்பதால் காதலாக மாறி சூடேறியது. 'ச்சே இவ்வளவு குழந்தைத்தனமாக இருக்கும் இவளையா கோபித்துக்கொண்டோம்' என நினைத்தவாறே, முன்னிலும் வேகமாக பேக்கிங் வேலையில் ஈடுபடத் தொடங்கினான் சந்தன்.

'இவன் காஃபி கேட்பதற்கு முன்னமே போட்டுக் கொடுத்திருக்க வேண்டும்' என்று நினைத்தபடி, வேலை செய்து கொண்டிருக்கும் அவனை காதலாக பார்த்தபடியே காஃபி கப்புகளை எடுத்துக்கொண்டு கழுவுவதற்கு சென்றாள் ஷமி.

# 5

சந்தன் வீட்டுக்கு ஷமி வந்தவுடன் முழுப்பொறுப்பையும் எடுத்துக்கொண்டு எஜமானி போல ஆகிவிட்டாள் ஷமி. வீட்டையே தலைகீழாக புரட்டிப் போட்டாள். ஒவ்வொரு பொருளையும் அடுக்கி வைக்கும்போது, "இங்க ஒரு ஸ்டேண்ட் வேணும், இங்க ஒரு கப்போர்ட் அடிக்கணும்" என்று லிஸ்ட் போட்டபடி சுழன்று கொண்டிருந்தாள்.

அவ்வப்போது சந்தனை அழைத்து, "இதைத் தூக்கி மேல வை. இதை கொஞ்சம் பிரிச்சு கொடு. இந்த இடத்தில் ஒரு ஆணி அடி," என மேஸ்த்ரி போல வேலை வாங்கிக் கொண்டிருந்தாள்.

"பொறுமையா ஒவ்வொன்னா செஞ்சிக்கலாம்டீ," என சந்தன் கெஞ்சிப்பார்த்தான்.

"ஆஃபீஸ் லீவ் போட்டுட்டு இருக்கோம். இப்பவே எல்லாத்தையும் முடுச்சுட்டாதான் நிம்மதியா இருக்கும்," என்றபடி சில ஹார்ட்வேர் பொருட்கள் வாங்கி வரும்படி சந்தனை பணித்தாள்.

"ரொம்ப டயர்டா இருக்குமா," என்ற சந்தனை, மெல்லிய கோபத்துடன் நோக்கிய ஷமி, "சரி நீ போய்த் தூங்கு. நானே பார்த்துக்கறேன்," என்றாள்.

அலுப்புடன் சட்டையை போட்டுக்கொண்டு வெறுப்புடன் வெளியேறினான் சந்தன். வேலை செய்வதில் அலுக்காதவன்தான் சந்தன், ஆனால் தனக்குத் தோன்றியபோது செய்ய வேண்டும் என்று நினைப்பவன். அலுவலகத்தில் கூட சும்மாவே ஒரு நாள் முழுக்க அமர்ந்திருந்திருக்கிறான். யாரும் கேட்டதில்லை. சந்தனைப் பற்றி பாஸுக்குத் தெரியும். மூட் வந்துவிட்டால், நான்கு யானை வேலைகளை ஒரே ஆளாக செய்து விடுவான். இப்போது ஷமி பணித்து, வலுக்கட்டாயமாக வெளியே செல்வது கசப்புணர்வாக இருந்தது சந்தனுக்கு. தான் அங்கேயே மறுத்திருக்க வேண்டும் என இப்போது நினைத்தான்.

அவள் வீட்டுக்கு வந்த உடனேயே அப்படி மறுத்துச் சொல்ல மனம் வர வில்லை. சொல்லியிருந்தால் மூஞ்சைத் தூக்கி வைத்துக் கொண்டிருப்பாள். இப்படி மனதை போட்டுக் குழப்பிய படியே பொருட்களை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

வீட்டில் இருக்கும் பெரும்பாலான கப்போர்ட்களை தனக்கென எடுத்துக்கொண்டிருந்தாள் ஷமி. இவனுடைய சட்டைகளை ஹேங்கரில் மாட்டித் தொங்க விட்டிருந்தாள். நிறைய பொருட்களை மூட்டைக் கட்டி வைத்திருந்தாள். இவன் வந்ததும் அவற்றை தூக்கி லாஃப்டில் போடச் சொன்னாள். சந்தனுக்குக் கொஞ்ச நேரம் தனிமையில் படுக்க வேண்டும் போல் இருந்தது.

"நான் வீட்டை பெருக்கறேன். நீ மாப் போட ரெடி பண்ணு," என்று சொன்னாள். ஏதும் பேசாமல் மாப் போடுவதற்கு வாளியைத் தயார் செய்தான் சந்தன். இருவரும் சேர்ந்து வீட்டைப் பெருக்கி மாப் போட்டு சுத்தம் செய்ததும், வீடே புது வீடு போல மாறி விட்டிருந்தது.

அதைப் பார்த்ததும் மனம் கொஞ்சம் மலர்ந்தது. நீண்ட நேரம் கழித்து அவளைப் பார்த்து கொஞ்சமாகப் புன்னகைத்தான்.

"அப்பா, மாப்பிள்ளைக்கு இப்பதான் சிரிப்பு வருது. இவ்ளோ நேரம் குரங்காட்டம் இருந்தாரு," என்று கேலி செய்தாள் ஷமி. "சரிடா, நீ டயர்டா இருக்க, போய் கொஞ்ச நேரம் படு," என்றாள்.

"நீ என்னடீ செய்யப்போற ?" என்றான்.

"நான் குளிக்கப் போறேன்," என்றபடி துண்டை எடுத்துக்கொண்டு பாத்ரூமுக்குள் நுழைந்தாள் ஷமி.

"நானும் குளிக்கப் போறேன்," என்றபடி அவளைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தான் சந்தன்.

ஷவர் கேப் போட்டு, ஷமி குளிக்க ஆரம்பிக்கையிலேயே பாத் ரூமை சுற்றி ஒரு பார்வை விட்டாள். சந்தனுக்கு விதுக் என்றது.

"இந்த வாட்டர் ஹீட்டர் துருப்பிடிச்சிடிச்சு, இன்ஸ்டண்ட் மாத்தணும்டா. வெஸ்டர்ன் டாய்லெட் கேப் மாத்தனும். பெயிண்ட் அடிக்கணும். டைல்ஸ் மாத்தணும்," என அடிக்கிக்கொண்டே போக, அன்பாக கட்டிப் பிடித்து முத்தமிடலாம் என்று வந்த சந்தன் தொப்பென்று பாத்ரூம் தரையிலேயே அமர்ந்தான்.

சோப்பை எடுத்து சந்தன் கையில் கொடுத்தவள், "என் பாதத்தை நல்லா அழுத்தி தேய்ச்சு விடுடா," என்றாள். தன் காலைத் தூக்கி சந்தனின் மடியில் வைத்தாள். இந்தப் பழக்கத்தை சந்தன் தான் ஆரம்பித்து வைத்தான். இதைப் போல் அடிக்கடி அவளும் காலை எடுத்து மேலே வைத்திருக்கிறாள். இவனும் ஸ்க்ரப் செய்து அழுத்தித் தேய்த்து விட்டிருக்கிறான். காதலால் கசிந்துருகி செய்த செயல்தான். இப்போது அவள் காலைத் தூக்கி மேலே வைத்ததை சந்தன் ரசிக்க வில்லை. சுர்ரென கோபம் வந்தது. ஆனால் கோபத்தை காட்டிக்கொள்ளாமல் மெதுவாகக் கடமைக்குத் தேய்த்து விட ஆரம்பித்தான். அவள் குளித்து விட்டு இவனுக்கு முதுகை தேய்த்து விட்டபோது லேசாக டென்ஷன் குறைந்து மனம் அமைதியாக ஆரம்பித்தது. அவளை இழுத்து அணைக்க முயன்றான்.

"டேய் …..ஒழுங்கா குளிச்சுட்டு வாடா," என்று சொல்லியபடி வெளியேறினாள்.

சந்தன் குளித்து முடித்து வெளியே வந்தான். ஷமி மேக்கப் போட்டுக் கொண்டே, "சீக்கிரம் கிளம்பு பேபி, ஷாப்பிங் போகலாம்," என்றாள்.

"ஷாப்பிங்கா ? இப்பவா ?"

"ஆமாடா, வீட்டுக்குத் தேவையான பொருட்கள் நிறைய இருக்கு. இன்னைக்கே போய் வாங்கிடலாம்," என்றாள்.

ஷமியைப் பார்த்தான்.

ஸ்கர்ட் போட்டுக்கொண்டு, ஒரு டாப்ஸ் போட்டிருந்தாள். டாப்ஸில் க்ளீவேஜ் தெரிந்தது. அழகாகவும் கவர்ச்சியாகவும் தெரிந்தாள். நெருங்கிப்போய், அணைத்துக்கொண்டு, தலையில் முகர்ந்துப் பார்த்து முத்தமிட்டான்.

"குட்டிமா, செம அழகா இருக்க," என்று சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, இவனுக்குத் தலைவாரி பவுடர் போட்டு விட்டாள்.

"பேபி, சீக்கிரம் டிரஸ் போட்டுக்கிட்டு வா," என்றாள்.

"ஷமி குட்டி, நீ இந்த டிரஸ்ல அழகாத்தான் இருக்க. ஆனா ……" என்று இழுத்தான்.

"என்னடா ஆனா ?"

"இல்ல, ஸ்கர்ட் வேணாம் மாத்திக்கோடீ. க்ளீவேஜ் தெரியுது, கொஞ்சம் பெட்டரான டாப்ஸ் போட்டுக்கோ."

"ஏன்டா, இதை ஏற்கனவே போட்டிருக்கேனே. உன் கூடவே இதைப்போட்டுட்டு எத்தனையோ முறை வெளியே வந்திருக்கேனே ?"

"அப்ப நாம தனித்தனிடீ. இப்ப இங்க ஒரே வீட்ல இருக்கறோமா ? இங்க இருக்குறவங்க, யாராச்சும் பார்த்தாத் தப்பா எடுத்துக்குவாங்க. நீ வீட்ல இருக்கும்போது இதை போட்டுக்கோ, இல்ல ஹாலிடேக்கு வெளியூர் போறப்பப் போட்டுக்கோ. இங்க வேணாம் குட்டிமா."

ஷமி யோசித்தாள்.

ஷமியின் அருகே சென்று கன்னத்தைப் பிடித்து, "நம்ம நல்லதுக்குதானே சொல்றேன் ?"

"சரிடா, போய் மூடிக்கிட்டு இழுத்துப் போர்த்திக்கிட்டு வரேன்," என்றபடி ரூமுக்குள் நுழைந்தாள்.

# 6

ஒரு பெரிய சூப்பர் ஸ்டோருக்குள் நுழைந்து இருவரும் இரண்டு பெரிய ட்ராலிகளை இழுத்துக் கொண்டு, பொருட்களை அள்ளி அள்ளி நிரப்ப ஆரம்பித்தனர். அவ்வப்போது ஷமி எடுக்கும் சில பொருட்களுக்கு ஆட்சேபம் தெரிவித்தான் சந்தன்.

"இது தேவையே இல்லை"

"இந்தப் பொருள் அல்ரெடி நிறைய வச்சிருக்க வீட்ல"

"இவ்ளோ வேண்டாம்டீ, கொஞ்சமா எடுத்துக்க"

"இப்பவே எல்லாத்தையும் ஏன் அள்ளி போடற? உலகம் அழியவாப் போகுது ?" என்று கிண்டல் தொனியில் கேட்க ?

"டேய், ப்ளீஸ் நிம்மதியா ஷாப்பிங் பண்ண விடுடா ! சும்மா அட்வைஸ் பண்ணி அறுக்காதே. இந்த பொருளுக்கெல்லாம் நான் பில் கட்டிக்கறேன்," என்றாள்.

கடுப்பானான் சந்தன். "நம்ம நல்லதுக்குதானே சொல்றேன் ? இதுல ஏன்டீ பணத்தை இழுக்குற ? நீ கட்டினா என்னா? நான் கட்டினா என்னா ?" என்றான்.

"நீ எடுக்குற பொருளை எதாச்சும் நான் குறை சொல்றேனா ? என்னை மட்டும் ஏன் வாட்ச் பண்ணிக்கிட்டே இருக்க ? ஏதாச்சும் சொல்லிகிட்டே இருக்க ?"

"சரிடீ, நீ என்ன வேணுமோ எடுத்துக்கோ. நான் தனியா ஷாப்பிங் பண்றேன்," என்று சொல்லியபடி தனியே டிராலியை தள்ளிக்கொண்டுச் சென்றான்.

அதற்கு மேல் ஷாப்பிங் செய்ய மனமில்லாமல் தன் பொருட்களுக்குப் பணம் செலுத்தி விட்டு, ஷமித்ராவுக்காக காத்திருக்க ஆரம்பித்தான். நேரம் சென்று கொண்டேயிருந்தது. ஷமித்ரா பில் கவுண்டருக்கு அருகே வரும் சுவடே இல்லை. எரிச்சல் அதிகமானது சந்தனுக்கு. வேண்டுமென்றே செய்கிறாள். ஏன் இப்படி எதற்கெடுத்தாலும் வம்பு செய்கிறாள் ? இவளை வீட்டுக்கு கொண்டு வந்து லிவிங் டுகெதராக வைத்தது தவறோ? தப்பு பண்ணிட்டமோ? இன்று இரவே பேசி முடித்து விடலாம். இப்படி எதற்கெடுத்தாலும் வம்பு செய்து சண்டை போட்டுக் கொண்டிருந்தால் சரியாக வராது. நிம்மதியே போய் விடுமென்று மனதிற்குள் அஞ்சினான்.

ஷமித்ரா பில் கவுண்ட்டருக்கு வருவது தெரிந்தது. இரண்டு பெரிய டிராலிகளை தள்ளிக்கொண்டு வந்தாள். சந்தன் அவசரமாக ஓடி உதவி செய்தான். கவுண்ட்டரில் பொருட்களை எடுத்து வைத்தான். எல்லாம் முடிந்ததும் தன் க்ரடிட் கார்டை எடுத்து நீட்டினான்.

"சந்தன் நான் குடுத்துக்கறேன், ப்ளீஸ்" என்றாள்.

"இல்லடீ யார் குடுத்தா என்ன ?" என்றபடி, தன் கார்டை நீட்டினான்.

அவன் கார்டை அவன் கையைப் பிடித்து மடக்கி தன் கார்டை கொடுத்தாள்.

"நான் தான் குடுக்கறேன்னு சொல்றேன்ல? இப்படி எல்லாத்துக்கும் ஏதாச்சும் வம்பு பண்ணிகிட்டே இருந்தா எப்படி ?" என்று குரல் உயர்த்தினான். "பப்ளிக் ப்ளேஸ்ல பிரச்சனை பண்ணாதே," என்றான்.

கவுண்டரில் இருக்கும் ஆள் செய்வதறியாது திகைத்தபடி பார்த்துக்கொண்டிருந்தான்.

"நீதான் பப்ளிக் ப்ளேஸ்ல கத்தற. நான் வாங்கின பொருளுக்கு நான் பணம் கட்டிக்கறேன். நீ குறுக்க வராத. சத்தம் போடாத. எதா இருந்தாலும் வீட்ல போய் பேசிக்கலாம். ப்ளீஸ் கோ ஆப்பரேட்," என்றாள்.

"ஆமாடீ, நான் தான் கத்தி பிரச்சனை பண்றேன். ஊமைக் கோட்டான் மாதிரி பேசாமலேயே எல்லா பிரச்சனையும் நீ பண்ணு. அப்புறமா நான் கத்தறேன்னு சொல்லு," என்று முணுமுணுத்தபடி வெளியேறினான்.

இருவரும் காரில் ஏறும்போது, "தோ பாருடா, எதா இருந்தாலும் ஒப்பனா பேசு. இப்படி முணுமுணுக்குறது எல்லாம் வேண்டாம். இட் ஈஸ் நாட் டீஸண்ட்," என்றாள்.

"ஆமாடீ, நான் இண்டீஸண்ட்தான். இப்பத்தான் தெரிஞ்சதா ?" என்றபடி காரை எடுத்து வேகமாக ஓட்டினான்.

அவன் வேகமாக ஓட்டியபடி இருந்ததால், வழியில் ரெஸ்டாரண்ட்டில் டின்னர் சாப்பிடலாம் என்ற பிளான் பணால் ஆனது. ஷமித்ராவால் ரெஸ்டாரண்ட்டுக்கு செல்லலாம் என சொல்ல முடியவில்லை. சொல்வதற்கு அங்கே ஸ்பேஸ் இல்லை. நேராக கார் வீட்டுக்கு வந்தது. பெரும்பாலான பொருட்களை சந்தனே தூக்கிக்கொண்டான். ஷமித்ரா மறுப்பேதும் சொல்ல வில்லை. அனைத்து பொருட்களையும் ஒரு மூலையில் போட்டான். இருவரும் ஏதும் பேசிக்கொள்ளவில்லை. ரெஸ்ட்ரூம் சென்று ரெ.்ப்ரஷ் செய்து கொண்டு, உடை மாற்றிக்கொண்டனர்.

ஹாலில் அமர்ந்து டிவியைப் போட்டான் சந்தன். ஷமித்ரா அந்த பொருட்கள் அருகே சென்றாள்.

"திரும்பவும் பொருளையெல்லாம் எடுத்து அடுக்க ஆரம்பிச்சுடாத, நாளைக்குப் பார்த்துக்கலாம்," என்றான் சந்தன்.

அதை காதில் போட்டுக் கொள்ளாமல் பார்ஸலைப் பிரித்து இரண்டு அழகிய கிளாஸ்களை எடுத்தாள்.

"பழைய டீ கிளாஸ் மாதிரி 2 வச்சிகிட்டு, சரக்கு மட்டும் இண்டர்நேஷனல் சரக்கு அடிச்சுக்கிட்டு இருக்க. அதான் இந்த கிளாஸ் வாங்கினேன்," என்றாள்.

ரெ.்ப்ரிஜிரேட்டருக்கு அருகே சென்று, "பீர் குடிக்கிறியாடா ?" என்றாள்.

சந்தனுக்கு கண்களில் ஒளி தோன்றியது. ஷமித்ராவே பியரை திறந்து நுரை பொங்கப் பொங்க புது கிளாஸில் ஊற்றி சந்தனுக்கு கொண்டு வந்து கொடுத்தாள். சந்தன் அவளை இழுத்து மடியில் உட்கார வைக்க கையைப் பிடித்து இழுத்தான்.

வர மறுத்தபடி வலுவாக நின்று கொண்டிருந்த ஷமித்ரா, "இந்தக் கொஞ்சல் எல்லாம் வேண்டாம், நீ பியர் குடி. நான் போய் சாப்பாடு வாங்கிட்டு வரேன்," என்றாள்.

"நான் போய் வாங்கிட்டு வரேன்டி," என்றான்.

"இல்ல, எனக்கு பசிக்குது இப்பவே," என்றாள் .

"வரும்போதே சொல்லி இருக்கலாம்ல. நான் காரை ரெஸ்டாரண்ட்ல நிறுத்தி இருப்பேனே"

"உனக்கே தெரியாதா, எனக்கு இப்ப பசிக்கும்னு ? ஷாப்பிங் பண்ணின டயர்ட் வேற. முன்ன எல்லாம், சாப்பிடறியா சாப்பிடறியான்னு கேட்டுகிட்டே இருப்ப. இப்ப பாரு மூஞ்சை தூக்கி வச்சிக்கிட்டு, உர்ர்ருன்னு ஓட்டிக்கிட்டு வந்துட்ட."

"சாரிடீ குட்டி. கொஞ்ச நேரம் உட்கார்ந்திரு, ஆன்லைன்ல ஃபுட் ஆர்டர் பண்ணிடலாம். அது வர்ரதுக்குள்ள, உனக்கு ஆம்லேட்டும் ஜூஸும் போட்டுடரேன்," என்று சொல்லிக்கொண்டே பியர் கிளாஸை எடுத்துக்கொண்டு கிச்சனுக்குப் பாய்ந்தான் சந்தன்.

# 7

ஷமித்ரா ஊற்றிக்கொடுத்த பியரை குடித்துக்கொண்டே, ஆம்லேட் போட்டான். ஜூஸரில் பைனாப்பிள் ஜூஸ் போட்டான். இதற்கு நடுவே உணவை ஆன்லைனில் ஆர்டர் செய்தான்.

ஆம்லேட்டையும் ஜூசையும் ஷமித்ராவுக்கு பேரர் போல பாவனை செய்தபடியே கொடுத்தான். ஷமித்ரா அதற்குள் ஹாலில் மெத்தை மற்றும் திண்டு போட்டு உட்கார வசதி செய்து வைத்திருந்தாள். ஆம்லேட்டையும் ஜூஸையும் குடித்து முடித்ததும் திடீர் தெம்பு வந்தது ஷமித்ராவுக்கு. அடுத்த கிளாஸ் பியர் ஊற்றிக்கொண்டு இருந்த சந்தனின் பின்புறம் வந்து அணைத்துக்கொண்டாள்.

"தேங்க்யூ பேபி," எனக் கொஞ்சினாள். காலிங்க் பெல் அடித்தது. ஆன்லைனில் ஆர்டர் செய்திருந்த உணவு வந்து விட்டது.

"பணம் நீ குடுக்குறியா இல்லை ரெண்டு பேரும் சண்டை போட்டுக்குவமா ?" என்று நக்கலாகக் கேட்டான் சந்தன்.

"நீயே குடு, போடா," என்றாள் ஷமித்ரா சிரித்தபடியே.

இருவரும் உணவருந்தி விட்டு, அசதியால் அடித்துப் போட்டது போல தூங்கினார்கள்.

அதிகாலையிலேயே எழுந்து குளித்து ரெடி ஆகி விட்டிருந்தாள் ஷமித்ரா. சந்தனை மூன்று முறைக்கு மேல் எழுப்பியும் எழுந்திருக்கவில்லை. கிட்டத்தட்ட உலுக்கு உலுக்கு என்று உலுக்கிய பின் புரண்டு படுத்து, "கா∴பி ப்ளீஸ்," என்றான்.

கெட்டிலில் நீர் வைத்து கா∴பி போட்டாள் ஷமித்ரா. அதைக் குடிக்க மீண்டும் அவனை எழுப்ப வேண்டியதாகிப்போனது. எழுந்து பொறுமையாகச் சிப்பிச் சிப்பிக் குடிக்க ஆரம்பித்தான்.

"டேய் எனக்கு ஆ∴பீஸுக்கு லேட் ஆகுது."

"இப்பதானடி எழுந்தேன் . கா∴பி குடிக்கக் கூட விட மாட்டியா ?"

"நீ எழுந்தது ரொம்ப லேட். இப்ப பொறுமையா கா஁ஃபி வேற குடிக்கிற. நீ எப்ப கிளம்பி எப்ப என்னை டிராப் பண்ணுவ ?"

"எனக்கு ரொம்ப டயர்டா இருக்கு. பர்மிஷன் போட்டுட்டு லேட்டா ஆ஁ஃபீஸ் போகப் போறேன். நான் வேணா உனக்கு கால் டாக்ஸி புக் பண்ணிடறேன்."

"அதெல்லாம் நானே புக் பண்ணிப்பேன். நீ ஒன்னும் கிழிக்க வேண்டாம்," என்று சொல்லிவிட்டு, மொபைலில் டாக்ஸி புக் செய்து கொண்டே வெளியேறினாள்.

மீண்டும் கொஞ்ச நேரம் படுத்துத் தூங்கினான் சந்தன்.

கால் டாக்சியில் செல்லும்போது கடுப்பாக இருந்தது ஷமித்ராவுக்கு. டிராப் செய்கிறேன் என்று சொன்னவன் முதல் நாளே சொதப்பியது ஏக எரிச்சலாக இருந்தது. அலுவலகத்தில் இந்த மூட் அவுட்டைக் காட்டக்கூடாது என நினைத்தவள், ஹெட் செட் போட்டுக் கொண்டு பாட்டு கேட்க ஆரம்பித்தாள்.

அலுவலகத்தில் இருந்து சற்றுத் தாமதமாகத் திரும்பிய சந்தன், ஷமித்ராவைத் தேடினான். அறைக்கதவைத் திறந்து பார்த்தான். ஷமித்ரா படுத்திருந்தாள்.

"ஷமி என்ன உடம்புக்கு முடியலையா ?" என்றான்.

அவள் படுத்திருந்தது சந்தனுக்குப் பிடிக்கவில்லை.

"இல்ல சும்மாதான் படுத்திருக்கேன்."

அவளுடைய கழுத்தில் கை வைத்துப் பார்த்தான். சூடும் இல்லை.

"ஜுரமாடீ ?"

"ஒன்னும் இல்ல, சும்மாதான் படுத்திருக்கேன்."

"என் மேல ஏதாச்சும் கோபமா ?"

"டேய் ப்ளீஸ், கொஞ்ச நேரம் சும்மா படுத்திருக்கக் கூடாதா ? என்னை கொஞ்சம் தனியா விடேன். கொஞ்ச நேரம் கழிச்சு நானே வரேன்."

"ஷமி, எதா இருந்தாலும் தெளிவா ஃப்ராங்க்கா சொல்லு. சும்மா எதுக்கெடுத்தாலும் மூஞ்சை தூக்கி வச்சிக்காதே. உன்னை டிராப் பண்ணலைன்னு கடுப்பா ? எனக்குத் தலைவலி. தூக்கம் பத்தலை. அதான் படுத்துட்டேன். இது ஒரு தப்பா ? நான் என்ன டிரைவரா ?"

"டேய், நான் ஒன்னுமே சொல்லலையேடா.
எனக்குக் கொஞ்சம் டயர்டா இருக்கு. அதான் படுத்திருக்கேன். எனக்குக் கொஞ்சம் தனிமை தேவைப்படுது, புரிஞ்சுக்கோ."

"என்னை வெளில போன்னு சொல்ற ?"

"ஏன்டா டார்ச்சர் பண்ற ? இந்த வீட்ல தனியா கொஞ்ச நேரம் படுத்திருக்கக் கூடாதா ? டிராப் பண்ண சொன்னா டிரைவரா ? அப்ப கா.ஃபி போட்ட நான் சமையல் காரியா ?"

"நினைச்சேன்டி, நீ கா.ஃபி போட்டதுதான் உனக்கு உறுத்துது இல்ல ? இனிமே நீ கா.ஃபி போட வேணாம். பெரிய இந்த வேலை அது. வெந்நீர் போட்டு குடுத்துட்டு, சமையலாம் சமையல். நானே இனிமே கா.ஃபி போட்டுக்கறேன்."

"சந்தன் போதும். ஸ்டாப் இட். ஐ நீட் ரெஸ்ட். ஓகே ?"

"ஓகே, எவ்ளோ நேரம் வேணாலும் தூங்கு," என்றபடி படீரென்று கதவை சாத்தி விட்டு வெளியே வந்தான்.

வந்த எரிச்சலுக்கு, பால்கனியில் நின்று சிகரெட் பிடித்தான். காலிங் பெல் அடித்தது. கதவைத் திறந்தான். அபார்ட்மெண்ட் செக்ரட்டரி நின்றிருந்தார்.

"உள்ள வாங்க சார்," என்றான்.

அவரை அமர வைத்தான். அவர் சுற்றும் முற்றும் பார்த்தார். ஷமித்ராவின் உடைகளும் பொருட்களும் ஃப்ளாட் எங்கும் நிறைந்திருந்தது. ஒரு பெண் இங்கு வசிக்கிறாள் என்பது அப்பட்டமாகத் தெரிந்தது.

அவர் செருமிக்கொண்டு ஆரம்பித்தார்.

"லக்கேஜஸ் எல்லாம் எடுத்து வரும்போதே நோட் பண்ணினேன். இப்ப நீங்க மட்டும் தங்கி இருக்கீங்களா ? இல்ல...என இழுத்தார்..."

சத்தம் கேட்டு வெளியே வந்தாள் ஷமித்ரா.

ஒரு நிக்கரும், ஸ்லீவ்லெஸ் மினி டாப்ஸும் அணிந்திருந்தாள்.

# 8

செக்ரட்டரியை எதிர்பாராத ஷமித்ரா தர்ம சங்கடமாக புன்னகைத்தாள். அவர் கட் அண்ட் ரைட்டாக தலையை ஆட்டி ஆமோதித்தார். "இதோ வந்துடறேன்," என ஷமித்ரா மீண்டும் அறைக்குள் சென்றாள்.

சந்தன் நேரடியாக பாயிண்ட்டுக்கு வந்தான். "சார், அவங்க பேரு ஷமித்ரா. நாங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கப் போறோம். இப்ப அவங்க இங்கதான், என் கூடத்தான் தங்க போறாங்க. அவங்க தங்கி இருந்த வீட்டை காலி பண்ணிட்டு வந்துட்டாங்க," என்றான்.

"அதெல்லாம் சரி சார், கல்யாணம் பண்ணிக்கத்தானே போறீங்க ? இன்னும் ஆகலை இல்ல ? உங்க ஃப்ளாட் ஓனர்கிட்ட சொல்லிட்டீங்களா ?"

"இன்னும் இல்ல சார். இதெல்லாம் ஏன் அவர்கிட்ட சொல்லிக்கிட்டு ?"

"இதுக்குத்தான் பேச்சிலருக்கு ரூம் குடுக்கக்கூடாதுன்றது. இந்த ஓனர் ஸ்பெஷல் பர்மிஷன் வாங்கி உங்களுக்குக் குடுத்தார். இப்ப இந்த மாதிரி பிரச்சனை எல்லாம் வந்து நிக்குது."

"இதுல என்ன பிரச்சனை சார் ? நாங்க ரெண்டு பேரும் இங்க ஒன்னா தங்கி இருக்கப் போறோம். கொஞ்ச நாள் கழிச்சுக் கல்யாணம் பண்ணிக்கப் போறோம். அது வரைக்கும் லிவிங் டுகெதர். இதனால உங்களுக்கோ இந்த ஃப்ளாட்ல இருக்குற வேற எந்த ஃபேமிலிக்கோ எந்த பிரச்சனையும் இல்லையே சார் ?"

"நீங்க அப்படித்தான் சார் பேசுவீங்க. இந்தப் பொண்ணு இதுக்கு முன்னால வந்துட்டு போயிட்டு இருக்கும்போதே நாங்க வார்ன் பண்ணி இருக்கணும். கெஸ்ட்டுன்னு கேக்காம விட்டுட்டோம். எல்லார் வீட்டுக்கும் யார் யார் வந்துட்டு போயிட்டு இருக்காங்கன்னு பாத்துக்கிட்டு இருக்குறதா செக்ரட்டரி வேலை? அதுக்குத்தான் ஒழுங்கான குடும்பமா பார்த்து வாடகைக்கு வைக்கணும்."

"சார், திஸ் ஈஸ் தி லிமிட். அப்ப எங்களை ஒழுங்கு இல்லைன்னு சொல்றீங்களா? குடும்பம் வச்சிருக்குறவன் வேற பொண்ணை கூட்டிட்டு வந்து தங்கச்சின்னு சொன்னா என்னா பண்ணுவீங்க ? இங்க ஃப்ளாட்ல இருக்குற குடும்பத்துக்கு நடுவுலயே ஏதேதோ கசமுசா ஓடுதுன்னு வாட்ச்மேன் சொல்றாரு. அதெல்லாம் போய் பாருங்க சார். நாங்க ஒழுங்கா டிக்ளேர் பண்ணிட்டு லிவிங் டுகெதரா இருக்கோம்."

"இப்ப இவகூட லிவிங் டுகெதர்னு சொல்வீங்க சார். அப்புறம் கொஞ்ச நாள் கழிச்சி, இவளை துரத்தி விட்டுட்டு இன்னொருத்தியை கூட்டிட்டு வந்து அவ கூட லிவிங் டுகெதர்னு கூத்தடிப்பீங்க சார். இங்க குடும்பங்கள்ல சின்னப் பசங்க இருக்காங்க. அவங்கள்ளாம் உங்களைப் பார்த்து கெட்டுப் போயிடுவாங்க," என்று காரசாரமாக சொல்லிக் கொண்டு இருக்கையிலேயே, உடை மாற்றிக்கொண்டு வெளியே வந்த ஷமித்ரா கத்த ஆரம்பித்தாள்.

"ஹலோ, அவ இவன்னு மரியாதை இல்லாம பேசாதீங்க. மரியாதை குடுத்து மரியாதை வாங்குங்க. எங்க வீட்டுக்குள்ளயே வந்து உட்கார்ந்துகிட்டு எங்களையே மரியாதை இல்லாம பேசறீங்களா ? மொதல்ல வெளியில போங்க. எதா இருந்தாலும் எங்க ஓனர்கிட்ட பேசுங்க. நாங்க லீகலா பார்த்துக்கறோம்," என்றாள்.

சந்தன் ஸ்தம்பித்து விட்டான். பேசி சமாளித்து சமாதானமாகப் போகலாம் எனப் பார்த்தால், இவள் வீறு கொண்டு எழுந்து கதையை கந்தலாக்கி விட்டாளே என நொந்து கொண்டு, "ஷமி கொஞ்சம் சும்மா இரு," என்றான்.

செக்ரட்டரி அடி பட்டவர் போல், ஸ்லோமோஷனில் எழுந்தார். "சார் ஒரு நிமிஷம் உட்காருங்க," என்றான்.

"வேணாம் சார். அதான் மேடம் சொல்லிட்டாங்களே, நான் ஓனர் கிட்ட பேசிக்கிறேன். நீங்க லீகலா பார்த்துக்கோங்க," என்றபடி கிளம்பிச் சென்றார்.

அவர் சென்றதும் சந்தனுக்கு தலை கிர்ரென்று சுழன்றது. உடல் முழுக்க ரத்தம் சூடாக ஓடுவது தெரிந்தது.

இப்போது ஏதேனும் பேசினால் டென்ஷனில் சண்டையாகிவிடும் என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே, அவனையறியாமல், "ஷமி, ஏன் ஷமி அப்படி கத்தின ? நான் தான் சமாதானமாப் பேசிக்கிட்டு இருந்தேன் இல்ல ?" என்றான்.

ஷமியும் மனதிற்குள் கொந்தளித்துக் கொண்டுதான் இருந்தாள்.

"ஏய், அவன் என்னை அவ இவன்னு மரியாதை இல்லாம பேசிட்டு இருக்கான். நீயும் பார்த்துக்கிட்டு உட்கார்ந்திருக்க. கொஞ்சங்கூட சூடு சொரணையே இல்லையா உனக்கு ? கொஞ்சங்கூட கோவமே வரலையா ?"

"இல்ல ஷமி ..."

"உன்னை அவன் இவன்னு பேசிக்கிட்டு இருந்தா இப்படித்தான் உட்கார்ந்து கேட்டுக்கிட்டு இருப்பியா ? உன்னை நம்பி வந்தேன் பாரு ..."

"யேய், சும்மா கத்தாதடீ ! கத்தினா காரியம் முடிஞ்சுடுமா ? என்னை நம்பி வந்து என்னா கெட்டுப்போச்சு ? நீ இப்ப கத்திட்டுப் போயிடுவ, இனிமே இதனால வர்ற பிரச்சனையை நான் தானே ஹேண்டில் பண்ணனும் ? உனக்கு என்னா ? சின்னப் பிரச்சனையை எல்லாம் பெருசாக்கி என் தலையில கட்டிட்டுப் போயிடு. நான் மாட்டிக்கிட்டு முழிக்கிறேன்," என்று எகிறி விட்டான் சந்தன்.

"என்னால உனக்கு பிரச்சனையே வேண்டான்டா, நான் தனியாப் போய்க்கிறேன்," என சொன்னபடி அறைக்குள் நுழைந்து கதவை படீரென்று சாத்திக்கொண்டாள்.

# 9

பேசிக் கொண்டிருக்கும்போதே அதை வெட்டிக் கொண்டு செல்வதோ, சண்டையின் போது சரேலென கதவைச் சாத்திக் கொள்வதோ சந்தனுக்குச் சுத்தமாகப் பிடிக்காது. எரிச்சல் இன்னும் அதிகமாகும். தவித்துப்போய் நின்று கொண்டிருந்தான். பால்கனிக்கு சென்று செக்ரட்டரி மேல் இருக்கும் கோபத்துக்கு ஒன்றும், ஷமி மேல் இருக்கும் எரிச்சலுக்கு ஒன்றும் என இரண்டு சிகரெட் ஊதினான்.

சிகரெட் குடித்ததால் டென்ஷன் இன்னும் அதிகம்தான் ஆனது. ஆனால் சிகரெட் ஊதியதால் டென்ஷன் குறைந்ததாகத் தானே நினைத்துக்கொண்டு, சற்றே அமைதியான முகத்துடன் வீட்டிற்குள் நுழைந்தான்.

சோஃபாவில் சரிந்து அமர்ந்து வீட்டை ஒரு பார்வை பார்த்தான். அழகான வீடு, அழகான வாழ்கை. சின்னச் சின்னக் குறுக்கீடுகளாலும், எதிர்பாரா சில நிகழ்வுகளாலும் அனைத்தும் குலைந்து விடுகிறது என விசனப்பட்டான். பொறுமையாக யோசிப்போம், இப்போது பிரச்சனையாக இருப்பது யார் ?

'செக்ரட்டரியா ? ஹவுஸ் ஓனரா ? ஷமித்ராவா ?'

'எந்தப் பிரச்சனையை முன்னுரிமை கொடுத்து எதிர்கொள்ள வேண்டும் ? எந்தப் பிரச்சனையை அணைத்தால் மற்றவைகளும் புஸ் என்று அணைந்து போகும்' என காலை ஆட்டிக்கொண்டே யோசித்தான்.

பிரச்சனை தானாக வருவதற்குள் நாமே அதை எதிர் கொள்வோம் எனவும் சிந்தித்தான். முதலில் ஹவுஸ் ஓனரிடம் நாமே பேசி விடலாம். செக்ரட்டரி எப்படியும் பேசுவான். அவன் பேசி, ஹவுஸ் ஓனர் நம்மை அழைப்பதை விட நாமே பேசி விடுவது நல்லது என எண்ணம் ஓடிக்கொண்டிருக்க, ஷமி மேலும் கொஞ்சம் அன்பும் இரக்கமும் சுரந்தது.

மரியாதை இல்லாமல் செக்ரட்டரி பேசியது அநியாயம் தான். அவளுக்கு கோபம் வந்தது நியாயம் தான். ஆனால் அவ்வளவு வெடித்து இருக்கக்கூடாது. என்ன செய்வது எமோஷனல் க்யூட் கேர்ள். தெரிந்துதானே காதலித்தோம் என யோசித்துக்கொண்டே, எழுந்து ஷமியின் அறைக் கதவைத் தட்டினான்.

"கதவு திறந்துதான் இருக்கு" என்று ஷமித்ராவின் சத்தம் கேட்டது.

கதவைத் திறந்து உள்ளே சென்றான். படுக்கையில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஷமித்ரா அழுது கொண்டு இருந்தது தெரிந்தது. அவசரமாகக் கண்களைத் துடைத்துக் கொண்டதும் பார்வையில் தட்டுப்பட்டது.

பெண்களின் அழுகை ஆண்களை நிலை குலையச் செய்யும் ஆயுதம். சமய சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு பெண்களின் அழுகை அதீத கோபத்தையோ, விரக்தியையோ, பெரும் அன்பையோ அல்லது காதலையோ வரவழைக்கும். ஷமித்ரா மீதிருந்த கொஞ்ச நஞ்ச கோபமும் போய், பரிதாபமும் காதலும் போட்டி போட்டுக்கொண்டு சந்தனின் மனதில் ஊற்றெடுத்தன.

'நம்மை நம்பி வந்திருக்கிறாள். இப்படி அழ விடுகிறோமே' என்ற குற்றவுணர்ச்சி, சந்தனை கொன்று போட்டது.

என்னதான் பெண்கள் சுதந்திரமானவர்கள், தன்னம்பிக்கை உடையவர்கள் என தங்களைத் தாங்களே சொல்லிக் கொண்டாலும், தேவைப்படும் போது 'உன்னை நம்பித்தானே வந்தேன்' போன்ற இரக்கத்தைக் கோரும் பந்துகளை வீசி ஆண்களை நிலை குலையச் செய்வதில் வல்லவர்கள். இந்த பந்து வீசப்பட்டால் எந்த ஆணும் கொஞ்சம் மனதிற்குள் கலங்கித்தான் போவான்.

தன்னை நம்பி வந்தப் பெண்ணை சந்தோஷமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பது நல்ல ஆண்மகனின் ஆழ்மனதில் காலம் காலமாக படிந்துள்ளது. உண்மையில் சந்தோஷமாக வைத்துக் கொள்கிறானோ இல்லை, சந்தோஷமாக வைத்துக்கொள்வதாக நினைத்து டார்ச்சர் செய்கிறானோ, எதுவாக இருந்தாலும் சந்தோஷமாக வைத்துக்கொள்ள வேண்டும் என மனதார விரும்புகிறான். அதை செயல்படுத்தத்தான் ஐயாவுக்குத் தெரியாது.

பீறிட்டு எழுந்த கலவையான உணர்வால் உந்தித் தள்ளப்பட்ட சந்தன் ஷமியிடம் சென்று அவளை அணைத்துக்கொண்டான். ஷமி, சந்தனின் தோளில் முகம் புதைத்தாள். கண்ணீர்த் துளி சில சொட்டுகள் சந்தனின் தோளை நனைத்தன.

சந்தனுக்கும் அழுகை வருவது போல் இருந்தது. அழுகை வந்தால் நல்லது என நினைத்தான். அப்போதுதான் ஷமி திடுக்கிட்டு இவனை சமாதானப்படுத்துவாள் என சந்தனுக்குத் தெரியும்.

ஆண்கள் அழுதால், பெண்கள் இருமடங்கு பதறிப் போகிறார்கள். சந்தனுக்கும் அழுகை வந்து விட்டது. அதற்கு பல காரணங்கள் இருக்கலாம். நினைத்தபடியே ஷமித்ரா திடுக்கிட்டுப்போய்,
"என்னடா கண்ணுகுட்டி ?" என சந்தனை மடியில் போட்டுக் கொண்டாள்.

## 10

சந்தனுக்கு அந்த மடியும், ஷமித்ராவின் அரவணைப்பும் மிகவும் தேவைப்பட்டது. இன்னும் இறுக்கிக் கொண்டான்.

ஆண்கள் ஐந்து வயது ஆனவுடன் ஆண் பிள்ளை என்ற கெத்துக்காக அம்மாவின் மடியை விட்டு துரத்தி அடிக்கப்படுகிறார்கள். சிலருக்கு 7 வயது வரை அம்மா மடி வாய்க்கும். அதற்குப் பிறகு கெடா மாடு என்பதாக நினைத்துக் கொண்டு, மடி சாய்தல், முத்தங்கள், அரவணைப்பு அனைத்தும் மறுக்கப்படுகின்றன. சின்ன வயதில் திடீரென பறி போன அரவணைப்பு ஒரு ஏக்கமாக மாறுகிறது. உறவுகளில், அக்கம் பக்கத்து வீடுகளில் இருக்கும் அக்காக்கள், அத்தைகள் அவ்வப்போது  அரவணைப்பையும், அன்பையும், முத்தங்களையும் அளிப்பதுண்டு. இந்தச் சலுகை எல்லா சிறுவர்களுக்கும் கிடைத்து விடுவதில்லை. சில நேரங்களில் பாலியல் சீண்டல்களாக ஆகிவிடினும் கூட சிறுமிகளைப் போலச் சிறுவர்கள் பெரிதாக பாதிப்படைவதில்லை. ஏனெனில், பாலியல் சீண்டலாக இருந்தாலும்  கருணை உள்ளம் கொண்ட அக்காக்களும் அத்தைகளும் அளவோடு நிறுத்திக் கொள்வார்கள்.

அதனால் பாதிப்பில்லையெனினும் அந்த சுகத்தை சிறு வயதிலேயே அனுபவித்த சிறார்கள், சற்று முதிர்ச்சியடைந்ததும் அக்காக்களாலும் அத்தைகளாலும் ஒதுக்கப்பட்டு, பறிக்கப்பட்ட சுகத்துக்கு ஏங்க ஆரம்பிக்கிறார்கள். ஆண்களுக்கு பாதிப்பை ஏற்படுத்தும் பாலியல் சீண்டல்கள் பெரும்பாலும் ஆண்களாலேயே வருகிறது. அதனால் எப்போதும் பெண்கள் மேல் தீராக் காதலுடனும் அன்புடனும் திரிந்து கொண்டிருக்கிறார்கள் ஆண்கள்.

என்னதான் மீசை முறுக்கி, ஆர்ம்ஸ் ஏத்தி கரடு முரடாக திரிந்தாலும், அனைத்து ஆண்களுக்குள்ளும் முரங்கை மர பிசின் போல நெகிழ்ச்சியான ஒரு சோப்ளாங்கி ஆண் இருக்கிறான். அவன் சதா அவசர கதியில் பறிக்கப்பட்ட அம்மா மடி தேடி அலைந்து கொண்டே இருக்கிறான். கேர்ள் ஃப்ரெண்ட் தேடி அலையும் போது என்னதான் அல்ட்ரா மாடர்னாக, சூப்பர் ஃபிகராக தேடி சலித்து எடுத்தாலும், உறவு என்ற ஒன்று மலர்ந்த பின் தன் அம்மாவின் பிம்பத்தை அவளுக்குள் தேடுகிறான். அவள் அவ்வப்போதாவது இவனை மடியில் போட்டுக்கொண்டு, அரவணைத்துக் கொஞ்சினால் குழந்தை போல் ஆகி இரண்டு கால்களையும் ஒட்டிக் கொண்டு அவள் மடியில் சுருண்டு படுத்துக் கொள்வான். ஆணுக்கு வெளி வாழ்வில் இருக்கும் டென்ஷன், ப்ரஷர் போன்றவைகளில் இருந்து கிடைக்கும் சொற்ப நேர விடுதலையாக இந்த மடியில் சுருள்தலை நினைப்பான் போல. இது ஒரு நல்ல மனநல பயிற்சியாகக் கூட இருக்கக் கூடும்.

நல்ல மனநல பயிற்சியாக இருந்தாலும், சற்று நேர மடிசுருள்தல் மற்றும் கொஞ்சுதலுக்குப் பிறகு, அதுவே நல்ல உடல்நலப் பயிற்சியாக மாறக் கூடிய சாத்தியக்கூறு அதிகம்தான்.

ஷமித்ராவின் மடியில் இறுக்கிப் பிடித்துக் கொண்டு கிடந்த சந்தனுக்கு எந்தப் பிரச்சனையும் இல்லாதது போல நிம்மதியாக இருந்தது. இந்த உலகிலேயே தான் தான் நிம்மதியான மனிதன் என்று தோன்றியது. இவ்வளவு பெரிய ஆள் தன் மடியில் சுருண்டு கிடப்பது ஷமித்ராவுக்குப் பெருமையாகவும், அளவில்லா சந்தோஷமாகவும் இருந்தது. அவன் தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டே இருந்தாள். ஒரு ஆண் இப்படி காதலியின் மடியில் வேர் சாய்ந்த மரமாக கிடப்பது காதலிக்கு மிகப் பெரிய தன்னம்பிக்கையை கொடுக்கிறது. எங்கு எப்படி ஓடினாலும், என்ன ஆட்டம் போட்டாலும், இவன் பிடி நம்மிடம்தான் இருக்கிறது என்ற எண்ணம் வலுப்பெறுகிறது. தன்னைத்தான் சரணாகதி அடைய வேண்டும் இந்தத் தடிப்பயல் என்ற சிந்தனை, செருக்கோடு கலந்த புன்முறுவலை உண்டு பண்ணுகிறது. காதலர்களுக்குள் ஏற்படும் என்ன பிரச்சனையாக இருந்தாலும், அகவயமாக இருந்தாலும் சரி, புறவயப் பிரச்சனையாக இருந்தாலும் சரி, பெண் அழுகையினூடாக அது முடிவுக்கு வந்து விடுகிறது அல்லது ஆணின் சரணாகதி மூலமாக முடிவுக்கு வந்து பிரச்சனை பின்னுக்குத் தள்ளப்பட்டு, காதல் இன்னும் வலுப்பெற்று அடுத்த கட்டத்திற்கு நகர்கிறது.

பெண் அழுத பின்பும், ஆணுக்கு கோபம் குறைந்து அன்பு பெருக்கெடுக்காமல், கோபமும் எரிச்சலும் இன்னும் அதிகமானால் காதல் குறைந்து கொண்டிருக்கிறது என்று அர்த்தம். காதலியோ மனைவியோ தற்போது கண்களுக்கு அழகாகத் தெரியவில்லை, கவர்ச்சியாக இல்லை என்று அர்த்தம். இப்படியான சூழ்நிலையில் ஆண் அந்தப் பெண்ணின் மடியில் படுக்கவே மாட்டான். பிரிந்த அந்த அந்நியோன்யம் பிரிந்ததுதான்.

இப்போது பெண்ணின் அழுகை எரிச்சலையே அதிகமாக்கும். இன்னும் தூர விலகவே முற்படுவான். எங்கே எப்போது இந்த உறவுக்கயிறு அறுந்தது என அந்த ஜோடிகளுக்கேத் தெரியாது. ஸ்லோ பாய்ஸன் போல விலகலும் மெல்ல மெல்ல ஆரம்பித்து மொத்தமாகப் புட்டுக்கொள்கிறது. அதனால் பழக்கத்துக்காகவேனும் மினிமம் தினமும் ஐ லவ் யூவாவது சொல்லிக்கொள்ளலாம் ஜோடிகள். திருமணம் ஆனாலும் மந்திரம் போல ஐ லவ் யூவை மட்டுமாவது உச்சரித்து வந்தால், நெருக்கம் அவ்வளவு சீக்கிரம் குறையாது.

ஷமித்ராவுக்கும் சந்தனுக்கும் செக்ரட்டரி உருவாக்கிய பிரச்சனை அப்படியே இருந்தாலும், அதை முன்னிட்டு தங்களுக்குள் உருவான பிரச்சனை தீர்ந்து போன மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தார்கள். மடியில் சுருண்டு படுத்திருந்த சந்தன் இப்போது சுருண்டலை நீக்கி நீளமானான். ஷமித்ராவை உரசியபடியே எழுந்திருக்க ஆரம்பித்தான். ஷமித்ரா அவனை, "டேய்.." என கத்திக்கொண்டே கோழிக்குஞ்சை அமுக்குவது போல் மடியிலேயே அமுக்கினாள்.

## 11

"ஏன்டீ இப்படி போட்டு அமுக்குற ?" என்றபடி, மடிக்குள்ளேயே தஞ்சமானான் சந்தன். அழகான மஞ்சள் கலர் முழு நீள ஸ்கர்ட்டும், சா஼ப்ட்டான டாப்ஸும் அணிந்திருந்தாள். தன் தலைக்கு அடியில் மாட்டிக் கொண்டிருந்த டாப்ஸை தலையைத் தூக்கி வெளியே இழுத்து, மெல்ல சுருட்ட ஆரம்பித்தான் சந்தன். வெள்ளை மின்னலென லேசாக இடை தெரிய, தன் தலையை வளைத்து மெல்லமாக முத்தமிட்டான்.

"சும்மா படுத்திருடா, அங்க கிள்றது இங்க கிள்றது எல்லாம் வேண்டாம்," என்றபடி டாப்ஸை மீண்டும் கீழே இழுத்து விட்டுக் கொண்டாள். அன்பாகத் தடவிக் கொண்டிருந்த ஷமித்ராவும் இப்போது குறும்பு மூடுக்கு திரும்பியிருந்தாள்.

"சும்மா இருக்க மாட்டியாடா ?" என்று செல்லமாகச் சந்தனின் கன்னத்தை கிள்ளினாள். சந்தன் தன் இரு கைகளையும் அவளின் முதுகுக்குப் பின்னால் கொண்டு சென்று இரண்டு ஜடைகளையும் முன் பக்கம் கொண்டு வந்து போட்டு தன்னை நோக்கி மெதுவாக இழுத்தான். அவன் இழுப்புக்கு மறுத்து எதிர்வினை புரிந்தால் வலிக்கும் என்று ஷமித்ராவுக்கு தெரிந்தது. லேசான வலியோடே சந்தனின் முகத்துக்கருகே வந்தாள்.
ஷமித்ராவின் முகம் தன் முகத்தருகே வந்ததும் சந்தன் இழுப்பதை நிறுத்தி விட்டான். நடுவில் மாட்டிக் கொண்ட ஷமித்ராவுக்கு செல்லக் கோபம் வந்தது. புன்முறுவலாக மாறியது. இப்படியே தலையை பின்னுக்கு இழுத்துக் கொண்டால் கேவலமாக இருக்குமே என்று எண்ணியபடி, "திருட்டு ராஸ்கல்," என்று சொல்லியபடி சந்தனின் உதட்டில் முத்தமிட்டாள். சந்தன் அவள் ஜடையில் போட்டிருந்த பேண்ட்ஸை அவிழ்த்து விட்டான். தன் முகம் முழுக்க அவள் முடி பரவியிருக்க வேண்டும் என்ற அவனின் ஆசைதான் காரணம். அன்று தலைக்குக் குளித்து இருந்ததால் சுகந்தமாக இருந்தது மணம். குனிந்த வாக்கில் முத்தம் கொடுத்துக் கொண்டிருப்பது ஷமித்ராவுக்கு சிரமமாக இருக்கும் என்றெண்ணி லேசாக மேலே நிமிர்ந்தான். ஷமித்ராவுக்கு வசதியாக இருந்தது. முத்தமும் நீடித்தது.

ஷமித்ராவை அப்படியே மெல்ல கீழே படுக்க வைத்துக் கொண்டே தான் மேலேறினான் சந்தன். "இப்போதைக்கு இது போதும்," என்று தன்னை விடுவித்துக் கொண்டே எழுந்த ஷமித்ரா, சந்தனின் நெற்றியில் முத்தமிட்டு அப்போதைய ஒட்டல் உரசல்களுக்கு முற்றுப்புள்ளி வைத்தாள். எழுந்து ஹாலுக்குச் சென்றாள்.

தாய்ப் பூனையைத் தொடரும் குட்டிப் பூனை போல ஷமித்ராவைத் தொடர்ந்து சென்றான் சந்தன். சந்தனுக்கு உடலுறவு கொள்ள வேண்டி இல்லையென்றாலும் இன்னும் கொஞ்சம் ஒட்டுதல், கொஞ்சல்கள், கட்டிப்பிடித்தல்கள் தேவைப்பட்டன. அது ஷமித்ராவுக்கும் புரிந்தது. அவளுக்கும் தேவைப்பட்டது. இருந்தாலும் சந்தன் அவளுக்கு பின்னாலே வருவது, அவள் எங்கு சென்றாலும் பின் தொடர்வது, அவளுக்காக ஏங்குவது, கெஞ்சுவது, அவள் உடலை ஏதேனும் ஒரு இடத்தில் தொட்டுக் கொண்டே இருப்பது எல்லாம் ஷமித்ராவுக்கு ரொம்ப ரொம்பப் பிடித்தது. உடல் உறவு சுகத்தை விட அவளுக்கு இதுதான் அதிக சுகம் என்று கூட சொல்லி விடலாம்.

சந்தன் ஹாலுக்கு வந்து ஷமித்ராவின் தோளின் மீது கை வைத்தான்.

கையை எடுத்து விட்ட ஷமித்ரா , சோஃபாவில் அமர்ந்து டிவியைப் போட்டாள்.

ஷமியின் பக்கத்தில் அமர்ந்த சந்தன், அவளை தன் மார்பில் வளைத்து படுக்கப் போட்டான். திமிறி எழுந்த ஷமி, "பேபி, இப்ப வேணாம்," என்றபடி டிவி பார்க்க ஆரம்பித்தாள்.

"டிவி பாக்குறது ரொம்ப முக்கியமாடீ இப்ப ?" என்றபடியே ஷமித்ராவின் காது மடல்களில் முத்தமிட்டான்.

"டிவி பார்க்கறது எனக்கும் வேணாம்டா, ஆனா செக்ரட்டரி பிரச்சனை பண்ணிட்டு போயிருக்காரே, அதுக்கு என்ன செய்யப்போற ? அதைப் பற்றி பேச நீ விட்டாதானே. அதான் உன்னை டைவேர்ட் பண்ண டிவி போட்டேன்," என்றவளை அப்படியே இழுத்து தன் மடியில் கிடத்தி அவள் கழுத்துக்குள் புகுந்தான்.

அங்கே இருந்து திமிறிக் கொண்டு எழுந்த ஷமித்ரா, "டேய், சும்மா இருக்க மாட்டியாடா ?" என்றபடியே கிச்சனுக்குள் நுழைந்து அடுப்பைப் பற்ற வைத்தாள். பின்னாலேயே ஒட்டிக் கொண்டே சென்ற சந்தன் அவளை பின்னால் இருந்து அணைத்துக் கொண்டான். பின்னங் கழுத்தில் இட்ட முத்தங்களில் கொஞ்சம் சொக்கித்தான் போனாள் ஷமித்ரா. அது அடுப்பு சும்மா எரிந்து கொண்டிருப்பதில் இருந்து தெரிந்தது.

இடம் மாற்றி முத்தமிட்டால், ஷமிக்கு மூடு போயிடும் என நினைத்த சந்தன் அங்கேயே மாறி மாறி முத்தமிட்டுக் கொண்டிருக்க, நிதானத்துக்கு வந்த ஷமித்ரா, அடுப்பை ஆஃப் செய்து விட்டு பால்கனியில் போய் நின்றாள்.

அங்கும் திருட்டுப் பூனைப் போல் சென்ற சந்தன், அவளுக்கு முன்னால் முட்டிப் போட்டான்.

"டேய் எழுந்திருடா," என்றாள் ஷமித்ரா.

பால்கனியில் காற்று அதிகம் வீசியது. ஷமித்ராவின் ஸ்கர்ட்டும் டாப்ஸும் காற்றில் பறக்க, முடியும் தன் பங்குக்கு நடனமாட வாயு தேவதைப் போல் காட்சியளித்தாள் ஷமித்ரா. அவளுக்கு முன்னால் முட்டிப் போட்டிருந்த சந்தன் அப்படியே அவளை அருகே இழுத்து அவளின் வயிற்றில் தன் முகம் புதைத்தான்.
சந்தனின் தலையை கோதிவிட்ட ஷமித்ரா, "சந்தன் யாராவது பார்த்துடுவாங்கடா," என்று கிசுகிசுத்தாள்.

மேலே எழுந்து ஷமித்ராவை லேசாக அணைத்துக் கொண்ட சந்தன், "பார்த்தா என்னடீ ? நாம என்ன ஆபாசமாவா பண்றோம்? ஜஸ்ட் என் செல்லக்குட்டி வயித்தில் ஒரு முத்தம். அதுவும் டிரஸ் எதையும் அவுக்காமல்," என்றான்.

"ம்ம்..பால்கனியில நீ டிரஸ்ஸை அவுப்ப, நானும் காட்டிக்கிட்டு இருப்பேன். ஆளைப்பாரு," என்று சொல்லியபடியே மீண்டும் ஹாலுக்கு வந்தாள்.

பின்னாலேயே வந்து முகர்ந்து கொண்டிருந்த சந்தனை தன் பக்கம் இழுத்து, "இப்ப செக்ரட்டரி பிரச்சனை பண்ணுவான். ஹவுஸ் ஓனருக்கு கால் பண்ணுவான். ரெண்டு பேரும் இங்க வந்து பிரச்சனை பண்ணுவாங்க. என்னடா செய்யப்போற ?" என்றாள்.

"அவனுங்கலாம் ஒரு மேட்டரே இல்லடீ, சும்மா அவனுங்களைப் போட்டு குழப்பிக்கிட்டு," என்று சொல்லியபடியே ஷமித்ராவை இரு கைகளாலும் தூக்கினான்.

உண்மையில் அந்த பிரச்சனையை நினைத்தால் சந்தனுக்கு பயமாகத்தான் இருந்தது. என்ன செய்யப் போகிறோம் என்ற தெளிவே இல்லை. அதைப் பற்றி நினைக்கவே பிடிக்கவில்லை. அதைப்பற்றி நினைக்காமல் இப்போதைக்கு ஷமித்ராவுடன் கூடல் செய்வதே அவனுக்கு பிரச்சனையில் இருந்து தற்காலிக விடுதலையாக இருந்தது.

## 12

சந்தனின் கைகளில் இருப்பது ஷமித்ராவுக்கு சுகமாகவே இருந்தாலும், மீண்டும் அந்தக் கேள்வியைக் கேட்டாள். "என்னடா செய்யப்போற ?"

இப்போது சந்தன் அவளை தன் கைகளில் இருந்து கீழே இறக்கி விட முயற்சி செய்வதாகத் தெரியவர, அவன் கழுத்தை தன் இரு கைகளாலும் இறுக்கி சுற்றிக் கொண்டாள். "என்னா சொன்னாலும் என்னை இறக்கி விடாம சொல்லு," என்றவள், "தூக்க வலு இருக்குல்ல ?" என்று கூறி ஏத்தி விட்டாள்.

"இதுவரைக்கும் ஒன்னும் தோணலடீ. நாம என்ன கிரிமினல் தனமா பண்றோம் ? என்னை நீ ஏமாத்தலை, உன்னை நான் ஏமாத்தலை. நாம ரெண்டு பேரும் வேற யாருக்கும் எந்த தொந்தரவும் குடுக்கலை. நமக்கு ஏன் இவங்க தொந்தரவு குடுக்கறாங்க ? நாம பிடிச்சு லிவிங் டுகெதரா இருக்கோம். அவ்ளோதானே ? நம்மளை யாராலும் இந்த வீட்டை விட்டு வெளில துரத்த முடியாது. பார்த்துக்கலாம்," என்றான் தெம்பாக. இந்த தெம்பும் தெளிவும் எப்போது அவனுக்கு வந்தது என அவனுக்கே தெரியவில்லை. எந்த பிரச்சனையாக இருந்தாலும் மனம் ஒத்த ஒருத்தியுடன் ரொமான்ஸாக இருந்தால் அந்தப் பிரச்சனை ஒன்றுமில்லாமல் சப்பையாகப் போய் விடுகிறது.

தம்பதிகளுக்குள்ளே சின்னச் சின்னப் பிரச்சனை இருந்தால், வெளிப் பிரச்சனைகள் பூதாகரமாகத் தெரியும். இருவருக்குள்ளும் எந்த சிக்கலும் இன்றி காதல் கசிந்துருகிக் கொண்டிருந்தால் பெரிய பிரச்சனைகளைக் கூட சின்னப் பிரச்சனையாக பாவித்து ஹேண்டில் செய்யத் தோன்றும்.

"ஐயா இப்ப தெளிவா, தெம்பா பேசறாரு. இருந்தாலும் எப்படி ஹேண்டில் பண்ணப் போறாருன்னு சொன்னால், நானும் அதுக்கேத்தது போல நடந்துப்பேன் இல்ல" என்றாள் ஷமித்ரா.

இப்போது சந்தனுக்கு கை வலிக்க ஆரம்பித்தது. அதை உணர்ந்து கொண்ட ஷமித்ரா, நைஸாக சந்தனின் பிடியில் இருந்து இறங்கிக் கொண்டாள். இறங்கியும், தன் கைகளை மாலையாகக் கோர்த்துப் போட்டு சந்தனின் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்தாள்.

"எப்படியும் செக்ரட்டரி ஹவுஸ் ஓனர் கிட்ட போட்டுக் குடுத்துடுவான்டீ. ஹவுஸ் ஓனர் எனக்கு கால் பண்ணி கேட்பாரு. நான், ஆமா சார், நான் கட்டிக்கப்போற பொண்ணுதான், இப்ப இருந்தே ரெண்டு பேரும் ஒன்னா இருக்கோம், அவ்ளோதான். யாருக்கும் எந்த தொந்தரவும் இல்லன்னு சொல்லப் போறேன். என்ன சொல்ற ?" என்றான்.

"நீ இப்படி சொல்லலாம்டா. ஆனா, அதெல்லாம் முடியாது. லிவிங் டுகெதர் எல்லாம் எங்க ஃப்ளாட்ல அனுமதிக்க முடியாதுன்னு சொல்லி காலி பண்ண சொன்னா என்னடா பண்றது ?"

"அப்படில்லாம் காலி பண்ணச் சொல்ல முடியாது குட்டிமா. லிவிங் டுகெதர் லீகல்னு சுப்ரீம் கோர்ட்டே சொல்லிடித்து. நீங்க இதுக்காக காலி பண்ண சொன்னா, கோர்ட் அவமதிப்பு வழக்குன்னு சொல்லி உங்க பேர்லயும் செக்ரட்டரி பேர்லயும் நோட்டீஸ் அனுப்ப வேண்டியிருக்கும்னு சொல்லுவேன்," என்றான்.

இப்படி சொல்லும்போது, அவனுக்கே ஜாலியாக இருந்தது. டொம்மென்று இருந்த மனநிலை எப்படி இவ்வளவு சீக்கிரம் குதூகலமாக மாறியது என ஆச்சர்யமாக இருந்தது. விளையாட்டாக ஷமியிடம் வக்கீல் நோட்டீஸ் என்றெல்லாம் பேசினாலும், இதையே அவரிடம் சொல்லித்தான் பார்க்கலாமே என்று தோன்றியது. யாராக இருந்தாலும் பயப்படுவார்கள் என்றுதான் நினைத்தான்.

"இப்படில்லாம் பேசினா ஒத்து வர மாட்டாங்க சந்தன். பீ ப்ராக்டிக்கல். நீ வக்கீல் நோட்டீஸ் அனுப்பறேன்னு சொன்னதும், சரிப்பா ...நீங்க இங்கயே இருந்துக்கோங்கன்னு சொல்லிட்டு போயிடுவாரா ?"

"சரி, நீதான் சொல்லேன் குட்டிமா. நல்ல ஐடியாவா சொல்லு, என்ன பண்ணலாம்?"

"இல்லடா, எனக்கும் பட்டுன்னு ஒன்னும் தோனலை, ஆனா நீ பேசறது எல்லாம் ப்ராக்டிக்கலா சரி வராது. வேற ஏதாச்சும் யோசிக்கணும்."

"ஹவுஸ் ஓனர் என்னைக் கூப்பிட்டு பேசறதுக்கு முன்னால, நானே அவரை கூப்பிட்டு பேசிடட்டுமா ?"

"அது நல்லதுதான், ஆனா அவரை எப்படி கன்வின்ஸ் பண்ணப் போறோம் ? அவர் கன்வின்ஸ் ஆனாலும் இந்த ஃப்ளாட்ல இருக்குற செக்ரட்டரி, அப்புறம் மத்தவங்க எல்லாரையும் எப்படி கன்வின்ஸ் பண்ணப் போறோம் ?"

"ஒன்னு ஒன்னாதான்டீ செய்ய முடியும். முதல்ல ஒரு ஸ்டெப் எடுத்து வச்சு, அதுக்கு என்ன ரியாக்ஷன் வருதுன்னு தெரிஞ்சாதான் அடுத்த ஸ்டெப்பை யோசிக்க முடியும். இந்த மேனேஜ்மெண்ட் படிச்சவனுங்க சொல்ற மாதிரி எல்லாத்தையும் இப்பவே பிளான் பண்ண முடியாது.

வாழ்க்கைப் பிரச்சனைக்கெல்லாம் ஃப்ளோ சார்ட் போட்டு அல்காரித்தம் எழுத ஆரம்பிச்சா அவ்ளோதான். பைத்தியம்தான் பிடிக்கும்."

"இல்லடா, திரும்ப ஹவுஸ் ஓனர் வந்து கத்தி, பிரச்சனை ஆகி அசிங்கமாகப் போகுதுடா. நான் வேணா ஹாஸ்டலுக்கு போயிடட்டுமா ? என்னாலதானே உனக்கு இந்த பிரச்சனை?"

"நீ ஹாஸ்டலுக்கு போயிட்டா ? எவ்ளோ நாள் ஹாஸ்டலில் இருப்ப ? நானும் கூப்பிட்டுத்தானே நீ வந்த ? கவலைப்படாதே குட்டிமா ....எந்த பிரச்சனை வந்தாலும் சேர்ந்தே பாத்துப்போம். நமக்குள்ள பிரச்சனை வந்தா மட்டும் அடிச்சிப்போம். ஆனா வெளில இருந்து பிரச்சனை வந்தா சேர்ந்தே ஒரு கை பார்ப்போம் என்ன ?" என்றான்.

இப்போது ஹாலில் சந்தன் சாய்ந்து அமர்ந்திருக்க, ஷமித்ரா சந்தன் மடியில் படுத்துக்கிடந்தாள்.

"நான் ரொம்ப கிஃப்டட்," என்றாள் ஷமி.

"ஏன்டீ ?"

"இல்ல, என்னால பிரச்சனை வந்தாலும் என்னை விட்டுக்கொடுக்காம என் கூடவே இருக்கியே, லவ் யூ டா!"

"ஏய், எப்பவும் உன் கூடத்தானேடீ இருக்கேன். இதுல என்ன தனியா ? இது நாம ரெண்டு பேரும் சேர்ந்து இருக்கறதால வரும் பிரச்சனை. உன்னாலயே நிஜமா பிரச்சனை வந்தாலும் உன் கூடத்தான் இருப்பேன். ஏன்னா நீ என் செல்லக் குட்டிமா, என்னோட ஒரே குட்டிமா !"

"லவ் யூ டால்," என்று அணைத்துக் கொண்டாள் ஷமி.

"நிஜமாவே வேற ஐடியா ஏதும் உன்கிட்ட இல்லையாடா ?" என்றாள்.

"செமயான ரெண்டு ஐடியா இருக்குடீ செல்லம்," என்று கண் சிமிட்டினான் சந்தன்.

## 13

"ரெண்டு ஐடியாவா ?" என ஒரு கண்ணை மூடி உதட்டைச் சுழித்து யோசித்தவள், "என்ன ஐடியாடா ? நீயே சொல்லு," என்றாள்.
மடி மீது கிடந்தவளின் தலையைக் கோதி விட்டுக்கொண்டே, "உனக்குத் தாலி கட்டிடறேன், பிரச்சனை சால்வ்ட்," என்றான்.

விலுக்கென எழுந்து அமர்ந்து விட்டாள் ஷமித்ரா.

"டேய் என்னடா, இவ்ளோ கேஷுவலா சொல்ற ?"

"இதுல என்னடீ சீரியஸ் வேண்டி கிடக்கு ? ஒரு கயிறுதானே ? இவனுங்களுக்கு அதானே தேவை ? அதை கட்டிக்கிட்டு என்ன செஞ்சாலும் ஒழுக்கம். அதை கட்டாமல் எது செஞ்சாலும் கலாச்சாரம் போச்சு, கருமாதி போச்சுன்னு கத்துவானுங்க."

"அதுக்காக மத்தவங்களுக்காக கட்டக் கூடாதுடா. கல்யாணம்ங்கறது பெரிய விஷயம். நாம அதுக்கு இன்னும் ரெடி ஆகலைடா."

"ஏய், மை கண்ணுகுட்டி. நானும் இப்ப உன்னைக் கல்யாணம் பண்றது பத்தி பேசலை. நாம கல்யாணமும் பண்ணிக்கப்போறது இல்லை. எங்கேயும் போய் லீகலா ரெஜிஸ்ட்டரும் பண்ணப்போறது இல்லை. சும்மா ஒரு மஞ்சக்கயிறை உனக்குக் கட்டப்போறேன்."

"நீ என்னதான் சொன்னாலும் டென்ஷனா இருக்குடா."

"சரி, நான் கட்டலை. நீயே கட்டிக்கோ. இல்லன்னா, தாலிக்கயிறு விக்கறவனையே கட்டச்சொல்லலாமா ?"

"டேய் லூசு, என்று சந்தனின் கன்னத்தில் சற்று வேகமாகத் தட்டினாள். கல்யாணம், தாலின்றது எல்லாம் ஒரு ஃபீல், அதை இப்படி காமெடி ஆக்கணுமாடா ?"

"அந்த ஃபீலை அப்படியே வச்சுக்கோடீ. நிஜமா நமக்குக் கல்யாணம் நடக்கும்போது, கல்யாணம் நமக்குள்ள நடந்தா அப்ப ஒன்னு கட்டறேன். இப்போதைக்கு சும்மா ஒரு மஞ்ச கயித்தை உன் கழுத்துல கொஞ்ச நாள் கட்டிக்கிறதுல என்ன பிரச்சனை உனக்கு ?"

"அதென்னமோ தெரியலை, கல்யாணம் தாலின்னாலே ஒரு டென்ஷன் வந்துடுதுடா." "நாம இப்ப லிவிங் டுகெதர்ல இருப்பதே எங்க வீட்டுக்கு தெரியாது. உங்க வீட்டுக்கும் தெரியாது.
இன்னும் ஃப்ரெண்ட்ஸுங்களுக்குக் கூடத் தெரியாது. அதுக்குள்ள தாலின்னு ஒன்னு கட்டிக்கிட்டா, ஒரு எமோஷனல் ஃபீல் வந்துடுமோன்னு பயமா இருக்குடா. நீயும் இதான் சாக்குன்னு, புருஷன்டீன்னு சொல்லி ஹோதா பண்ணுவ. ஓப்பனா சொல்லணும்னா நாம இன்னும் கல்யாணம் பண்ணிக்கலாமா வேணாமான்னே முடிவு பண்ணலை இல்லையா ?"

"ஆமான்டீ. இன்னும் முடிவு பண்ணலை. நிறைய கமிட்மெண்ட்ஸ் இருக்கு. இன்னும் நாம செட்டில் ஆகலை. எல்லாத்துக்கும் நிறைய டைம் வேணும், எல்லாம் சரிதான். ஆனா தாலிக்கு ஏன் இவ்ளோ வேல்யூ குடுக்குற ? இப்ப நிஜமா தாலி கட்டி கல்யாணம் பண்ணாலும், அதை அவுக்காமலேயேவா போட்டுட்டு இருக்கப் போற ? அப்பப்ப அவுத்து வச்சிடுவதானே ?"

"ஆமாடா ...."

"அப்புறம் என்ன ? அவுத்து போடறதுக்கு இல்லாத செண்ட்டிமெண்ட், எமோஷன், கட்டிக்கறதுக்கு மட்டும் ஏன் வருது ?"

"அவுத்துப் போடறது சுதந்திரம்டா. கட்டிக்கிறது ஒரு மாதிரி விலங்குல மாட்டிக்கிற ஃபீல். ஒரு பொண்ணோட ஷூல இருந்து யோசிச்சிப் பாரு, புரியும்."

"அப்புறம் உன் இஷ்டம்டீ. இதான் ஈசியான வழி. 10 ரூபாய்க்கு மஞ்ச கயித்தை வாங்கினோமா, கட்டிக்கிட்டு சுத்தினோமான்னு இல்லாம. எவனாச்சும் கேட்டா கோயில்ல கல்யாணம் பண்ணிக்கிட்டோம்னு சொன்னா போதும், மூடிக்கிட்டு போயிடுவானுங்க."

"அதெல்லாம் ஓகே ....அப்புறம் எல்லாரும் என்னை அதுக்குள்ளயே பொண்டாட்டின்னுதானே பார்ப்பாங்க ? அதுக்குள்ள பொண்டாட்டியா..? என்னால யோசிச்சுப் பார்க்கவே முடியலடா. எப்பவுமே பொண்டாட்டியா ஆயித்தான் ஆகனுமான்னே இன்னும் யோசிச்சு முடிக்கலை. அதுக்குள்ள தாலி அது இதுன்னு கொஞ்சம் யோசனையா இருக்குடா. ஃப்ரீடம் போயிடுமோன்னு பயமா இருக்குடா."

"சரிடீ, நீ பேசறதைப் பார்த்தா, என் கூடவே இருப்பியோ இருக்கமாட்டியோன்னு சந்தேகமா இருக்குடீ. கல்யாணாமோ லிவிங் டுகெதரோ கடைசி வரைக்கும் என் கூட இருப்பியாடீ ?"

"இருக்கணும்னு ஆசைதான்டா. எத்தனையோ பேர் டிவேர்ஸ் பண்றாங்க. காதலிச்சுக் கல்யாணம் பண்ணும்போது டிவேர்ஸ் பண்ணப் போறோம்னு தெரிஞ்சா பண்றாங்க ? திடீர்னு இன் கம்பேட்டபிளிட்டி வந்துடுது இல்ல ? நாம ஏன் வெறித்தனமா ஃபிக்ஸ் பண்ணிக்கணும் ? கடைசி வரை ஒன்னா இருப்போம்னு ஏன் எமோஷனலா சபதம் எடுத்துக்கணும். இப்ப உன் மேல எனக்கு கொள்ளை காதலா இருக்கு. நீ இப்படியே இருந்தா, நானும் இப்படியே இருந்தா இது தொடரும். இல்லைன்னா புட்டுக்கும்.

உனக்கும் ரெஸ்பான்ஸிபிளிட்டி இருக்கு. எனக்கும் இருக்கு. நம்மள்ள யார் கேரக்டர் மாறினாலும், ஒருத்தரை ஒருத்தர் அதிகாரம் பண்ணாலும், வேற யார் கூடவாச்சும் திருட்டுத்தனமா ரிலேஷன்ஷிப் வச்சிக்கிட்டாலும், நம்ம உறவு கெட்டுடும். சும்மா கடைசி வரைக்கும் சேர்ந்து இருப்போம்னு டிக்ளேர் பண்ணிட்டு, அதுக்காகவே சகிச்சிக்கிட்டு வாழ்வதை விட புடிக்கலைன்னா பிரிஞ்சிடலாம்னு இருந்தா இன்னும் நிறைய ரெஸ்பான்ஸிபிளிட்டி வரும். ஒருத்தரை ஒருத்தர் இன்னும் கேர் பண்ணிப்போம். ஒருத்தர்கிட்ட இன்னொருத்தர் ஹானஸ்ட்டா இருப்போம். என்னடா சொல்ற ?"

"போடீ, நான் உன்னை அவ்ளோ லவ் பண்றேன். நீ மட்டும்தான் என் லைஃப்ல. கல்யாணமோ லிவ் இன்னோ நீ மட்டும்தான். நீ என்னமோ மெஷின் மாதிரி பேசற. உன் இஷ்டம்டீ. என்னை பிடிக்கலைன்னா எவன் கூட வேணா போடீ."

"ச்சீ ...நான் என்னை மட்டுமாடா சொன்னேன். நம்ம நல்லதுக்குதானே சொன்னேன். நான் உனக்கு பிடிக்காத மாதிரி நடந்துக்கிட்டா, நீயும்தான் இன்னொருத்திக் கூட என்னை விட ஸ்பீடா போயிடுவ. அதெல்லாம் விடு, செண்டிமெண்ட் ஆகாதே. இன்னொரு ஐடியா இருக்குன்னு சொன்னியே அது என்னடா ?"

## 14

"அந்த இன்னொரு ஐடியாவை இப்ப சொல்லமாட்டேன். நாளைக்கு ஈவ்னிங் பொறுமையா சொல்றேன். இப்ப கிளம்பு, வெளில போய் சாப்பிட்டு வந்து படுக்கலாம்," என்றான்.

"தாலி கட்டிக்க யோசிக்கிறேன்னு கோவமாடா ?" என்றாள்.

" இல்லடீ , உனக்கு வேற ஏதோ ஃபீல் தடுக்குது . அது புரியுது. நீ யோசிச்சு முடிவு பண்ணு. இப்ப க்விக்கா கிளம்பணும் , என்ன ?"

"சரிடா, கொஞ்ச நேரத்துல கிளம்பிடறேன்."

"குட்டிமா, நைட்தான ? இந்த மேக்கப் எல்லாம் வேணாம். ஜஸ்ட் பவுடர் மட்டும் வேணா போட்டுக்கோ. இதே டிரஸ் கூட போதும். பசிக்குதுடா குட்டிமா, சீக்கிரம் கிளம்பறியா," என்றான்.

சற்றே செல்லமாக முறைத்துக் கொண்டே சென்றாள்.

இருவரும் ரெடியாகி, ஒரு கிராண்டான நான் வெஜ் ரெஸ்டாரண்ட் சென்றனர்.

"ஒரு சூப் ஒன் பை டூ சொல்லலாமா டீ," என்றான்.

"எனக்கு சூப் வேண்டாம், நீ மட்டும் குடிடா," என்றாள்.

"என்னால முழு சூப் குடிக்க முடியாது. ஏன்டீ எப்பப் பாத்தாலும் சூப் வேண்டாம்னு சொல்லிட்டே இருக்குற ?"

"இவங்க பவுடர்ல சூப் போடறாங்கடா. அதைக் குடிச்சா பசி எடுக்கறதுக்கு பதில், வயித்தை அடைச்சுடுது," என்றாள்.

சூப் கேன்ஸல் ஆனது. இருவரும் அவரவர் விருப்பப்படி ஆர்டர் செய்து, பகிர்ந்து உண்டுக் கொள்வதாக ஒப்பந்தம் செய்யப்பட்டு ஆர்டர் கொடுக்கப்பட்டது. எதிரே அமர்ந்து இருந்தவனை தன் பக்கத்தில் வந்து அமரச் சொன்னாள். சந்தனும் எழுந்து பக்கத்தில் வந்து அமர்ந்து தோளோடு ஒட்டிக் கொண்டான். முத்தம் கொடுப்பது போல பாவனையில் ஷமித்ராவின் அருகே வர, ஷமித்ரா சந்தனின் தொடையைக் கிள்ளினாள்.

"டேய், சின்னப் பசங்க எல்லாம் பார்த்துக்கிட்டு இருக்காங்கடா."

"அதுங்களுக்கெல்லாம் தெரியும்டீ. நான் இப்ப உனக்கு முத்தம் குடுக்கலைனாதான், மொக்கை அங்கிள்னு கமெண்ட் அடிக்குங்க," என்றான்.

ஷமித்ரா சந்தனை அருகே வரச் சொல்லி ஒரு செல்ஃபி எடுத்தாள். பேரர், "ரெகுலர் வாட்டரா, பாட்டில்ட் வாட்டரா ?" எனக் கேட்டுக் கொண்டு சென்றான்.

சந்தன் திடீர் நினைவு வந்தவனாக, தனது மொபைலை எடுத்து நம்பர் போட்டான். சில நிமிடங்களில், "ஓ, ஓகே சார்," எனச் சொல்லி ஃபோனை அணைத்தான்.

"என்னடா, யாருக்கு திடீர்னு ஃபோன் ?" என்றாள்.

"இல்லடீ, செக்ரட்டரி ஹவுஸ் ஓனருக்குச் சொல்லி, அவர் என்னை கூப்பிடறதுக்கு முந்தி, நானே ஹவுஸ் ஓனருக்கு அடிச்சிடலாம்னு திடீர்னு தோனி அடிச்சேன். அவரு ஃபாரீன்ல இருக்காராம். இண்டர்நேஷனல் ரோமிங், அதான் கட் பண்ண வேண்டியதாப் போச்சு."

"எங்க சுத்திக்கிட்டு இருக்காரு?"

"தாய்லாந்துடீ.."

"எதுக்கு தாய்லாந்து போயிருக்காரு ?"

"அதுவா.. டோம்யாம் சூப் அங்கதான் நல்லா டேஸ்ட்டா கிடைக்குதாம். அதைக் குடிச்சிட்டு, அப்படியே புத்த பிட்சுக்களை பார்த்து தீட்சை வாங்கிட்டு வரப் போயிருக்காரு."

"என்னடா ஓவரா நக்கல் பண்ற ?"

"பின்ன என்னடீ, உனக்கே தெரியும். தெரிஞ்சுக்கிட்டே ஏன் என்கிட்ட தெரியாத மாதிரி கேட்கற ? இந்த அங்கிள்ஸ் எல்லாம் இப்ப தாய்லாந்து போயிடறாங்க டீ. ஆண்ட்டீஸ் எல்லாம் ஒரு கட்டத்துக்கு மேல கம்பெனி குடுக்கறது இல்ல போல. இல்ல இவங்களுக்கு இஞ்சின் ஆஃப் ஆயிருக்கும். அங்க போய் மசாஜ், கிசாஜ்னு எதாச்சும் பண்ணிட்டு, தண்ணியைப் போட்டுட்டு சலம்பிட்டு வருவாங்க."

"அவ்ளோதானா ?"

"எவ்ளோதானா ? இன்னும் சாண்ட்விச் மசாஜ், ஹேப்பி எண்டிங், இண்டர்கோர்ஸ் வரைக்கும் வித விதமா எல்லாம் அங்க கிடைக்கும். செக்ஸ் டூரிஸத்தை அவங்களே ரொம்ப ப்ரொஃபஷனலா ப்ரொமோட் பண்றாங்களே."

"ஓ.."

"இப்படியெல்லாம் என் வாயைப் புடிங்கி, உனக்கு எப்படி இதெல்லாம் தெரியும்னு கொக்கி போடப்போற, அதானே ?"

"இல்லடா, போட மாட்டேன். அந்த அளவுக்கு நீ எச்சக்கலை இல்லைன்னு நம்பறேன்."

"தேங்க்ஸ் தாயே !"

"அதுக்காக ஓவர் நல்லவன்னு எல்லாம் நம்பலை. மசாஜ் பண்ணி இருப்ப. எவ கூடவாவது டேன்ஸ் ஆடி இருப்ப. தண்ணி அடிச்சு இருப்ப. அதுக்கு மேல போயிருக்க மாட்டேன்னு நம்பறேன். அதுக்கு மேல போயிருந்தாலும் என்கிட்ட சொல்லாத. எனக்கு ஒரு மாதிரி இருக்கும்."

"இதுக்கு நீ நேரடியாவே கேட்டிருக்கலாம்டீ. இப்ப நான் என்ன பண்ண முடியும் ? கம்முன்னு உட்கார்ந்து இருந்தா, எவகூடயோ படுத்த மாதிரி ஆயிடும். ச்சீ..ச்சீ.. அது மாதிரி எல்லாம் நான் பண்ணலைடீன்னுதான் சொல்லணும். அதைத்தான் நீ சொல்ல வைக்கிற. இதுல டீசண்ட்டா, தெரிஞ்சிக்க விரும்பாத மாதிரி ஒரு சீன் வேற. சரி விடு, நாம ரெண்டு பேரும் சேர்ந்து போகலாம். தாய்லாந்துல எஞ்சாய் பண்ண எவ்வளோவோ விஷயம் இருக்கு. குட்டி குட்டித் தீவா சொர்க்கமா இருக்கு, அங்க போகலாம்."

சிரித்தாள், "எப்படா போலாம் ?"

"எப்ப வேணா போலாம்."

உணவு வந்தது. ஷமித்ரா இரண்டு வாய் சாப்பிட்டு விட்டு, இவனுக்கு ஒரு வாய் ஊட்டினாள். அப்படியே கலந்து கட்டி பொறுமையாக சாப்பிட்டனர். சாப்பிட்டு முடித்ததும், பில் சொன்னான் சந்தன்.

"டேய், எனக்கு ஒரு ஐஸ் கிரீம். நீ கொஞ்சம் ஷேர் பண்ணிக்கறியா ?"

"எனக்கு வேண்டாம்டீ, என்ன ஐஸ்கிரீம் வேணும்னு சொல்லு."

ஷமித்ரா ஐஸ்கிரீம் ஆர்டர் செய்தாள். ஐஸ்கிரீம் சாப்பிட்டு பில் வைத்து விட்டு, காரைக் கிளப்பிக் கொண்டு காலியான சாலையில் விரட்டினான்.

"வீட்டுக்கு போகாம இந்த நைட்ல எங்கடா போற ?"

"பீச்"

# 15

சந்தன் பீச் என்று சொன்னதும் ஷமித்ராவுக்கு திடீரென்று ஒரு குதூகலம் வந்து விட்டது. தன்னிச்சையாக மணி பார்த்தாள். மணி பதினொன்றை தாண்டி இருந்தது.

"ஏய், மணி பதினொன்ன தாண்டிடிச்சி. இப்ப பீச் போறமா ?"

"ஆமா குட்டிமா. நைட்ல பீச் ஜாலியா இருக்கும். இப்ப உடனே வீட்டுக்குப் போறது போரடிக்குது, அதான் பீச் போயிட்டு போலாம்."

"எந்த பீச் போறோம் ?" என்று ஷமி கேட்டுக் கொண்டிருக்கும்போதே கார் செல்லும் ரூட்டை கவனித்து, "மெரீனா போறோமா ?" என்றாள்.

"ஆமா அங்கதான் போறோம்," என்றபடி சாலையை ஸ்கேன் செய்து உள் வாங்கிக்கொண்டு, டக்கென்று ஷமி பக்கம் திரும்பி அவள் உதட்டில் முத்தமிட்டான். இவன் உதடு அவளின் முழு உதட்டிலும் பதியாமல் 60 சதவீதம் உதட்டிலும் 40 சதவீதம் கன்னத்திலும் பதிந்தது. பதித்து எடுத்து உடனே சாலையில் கண்களை பதித்தான். 20 டிகிரி கோணலாக சென்ற காரை நேராக்கினான்.

இரவு நேரம் என்பதால் சாலையில் போக்குவரத்து குறைவாக இருந்தது. வேகமாகப் பறக்க முடிந்தது. தண்ணி அடிக்காமலேயே இவ்வளவு வேகமாக பறக்கிறோமே என நினைத்துக் கொண்டான்.
கடும் டிராஃபிக்கில் வண்டி ஓட்டி ஓட்டி, காலியான சாலையை பார்த்ததும் சீறிக்கொண்டு செல்ல வேண்டுமென்று தோன்றி விடுகிறது. அதிலும் பக்கத்தில் ஒரு பெண் இருந்தால், அவளும் காதலியாக இருந்தாள், வேகம் எகிறுகிறது. பெண் அருகில் இருந்தாலே ஆண்களால் வேகம் குறைவாக ஓட்ட முடிவதில்லை. வேகமாக ஓட்டிக்காட்டி என்ன நிரூபிக்கப் பார்க்கிறார்களோ ? உண்மையில் பெண்ணுக்கு ஒருவன் வேகமாகக் கார் ஓட்டுவதாலேயே பிடித்து விடுவது இல்லை. அவளுக்கு பதட்டம்தான் அதிகரிக்கும். அதிலும் தாறுமாறாக ஓட்டினால் அவனை வெறுக்கத்தான் ஆரம்பிப்பாள். அதற்காக மெதுவாக சாம்பார் மதிரி அசைந்தாடி ஓட்டினாலும் எரிச்சலடைவாள். ஒவ்வொரு பெண்ணின் மனமறிந்து எந்த வேகம் வரை ஓட்டினால் அவள் பதட்டமில்லாமல் ரசித்துக் கொண்டு வருகிறாள் என்பதை அறிந்து ஓட்ட வேண்டும்.

சரியான வேகத்தில் ஓட்டிக்கொண்டு சென்றால் ரொமாண்ட்டிக்காக எஞ்சாய் செய்யலாம். சரியான வேகம், மற்றும் ஓட்டும் ஸ்டைல் அவளை கிளர்ச்சியடைய வைக்கும். அவளே கியரைத் தாண்டி வந்து கன்னத்தில் முத்தமிடுவாள் அல்லது கையையேனும் பற்றிக் கொள்வாள். அந்தப் பதத்தில் பெரும்பாலும் யாரும் கார் ஓட்டுவதில்லை.

காரை விட பைக் இன்னும் ரொமாண்ட்டிக்கானது. பைக்கை ரதம் போல நைஸாக ஓட்டினால், ரசித்துக் கொண்டு வருபவள், கொஞ்சமாக ஆக்ஸிலேட்டரை முறுக்கினால் முன்னகர்ந்து ஒட்டிக் கொள்வாள். அதே ஸ்பீடில் கொஞ்ச நேரம் பழக்கப்படுத்திய பின், சகஜ நிலைக்கு வருபவள், காதைக் கடிப்பது, கன்னத்தை உரசுவது, கைகளால் இறுக அணைப்பது போன்ற ரொமான்ஸில் ஈடுபடுவாள். ஆனால் எங்கே ? பெரும்பாலான காளை மாடுகள், முறுக்கிக் கொண்டு போய் நெருப்புக் கிணற்றில் விழுவது போல் பேய் வேகத்தில் ஓட்டுகின்றனர். அவளை இம்ப்ரெஸ் செய்கிறார்களாமாம். அவள் மிரண்டு போய் வாலருந்த பல்லி போல ஒட்டிக்கொண்டு கண்களை மூடியபடி நரக டிரிப் போல பயணிக்கிறாள்.

மேற்சொன்ன அதே இலக்கணத்துடன் ஒருவன் விர்ரென பாய்ந்து சந்தன் காரை கட் அடித்து அதே சமயத்தில் மீண்டும் இன்னொரு கட் அடிக்க முயல ரோட்டில் விழுந்தது பைக்.
கொஞ்ச தூரம் இழுத்துக்கொண்டு போனது . பின்னால் அமர்ந்திருந்த பெண் கொஞ்ச தூரத்தில் பைக்கில் இருந்து விடுவித்துக்கொள்ள, பைக் ரைடர் மட்டும் பைக்குடன் போய் ரோட் டிவைடரில் இடித்துக்கொண்டு விழுந்தான்.

பின்னால் அமர்ந்திருந்த பெண் ஜீன்ஸ் போட்டிருந்ததால் கால் சிராய்ப்பு பெருமளவு குறைக்கப்பட்டது. ஆனால் டாப்ஸ் கிழிந்து தொங்கியது. பிரேசியர் அப்பட்டமாக தெரிந்தது. மார்பகங்களில் தார் ரோட்டின் சிராய்ப்பு ரத்தமாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. தன் மார்பகம் வெளியே தெரிகிறது என்பதை அவள் உணரவே இல்லை. படுபயங்கர அதிர்ச்சியிலும் லேசான மயக்கத்திலும் ஆட்பட்டிருந்தாள். பைக் ஓட்டி வந்தவன் முக்கால் மயக்க நிலையில் இருந்தான். அவனுக்கு மண்டை உடைந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது.

ஆட்டோ டிரைவர்கள் சிலர் ஓடி வந்தனர். பெண் என்பதால் இவளைத் தொடத்தயங்கி தள்ளி நின்றனர். அவனைத் தூக்கி எடுத்து வந்து பிளாட்ஃபார்மில் போட்டனர். தண்ணீர் கொடுத்தனர்.

சந்தன் காரை ஓரமாக நிறுத்தினான். ஷமித்ரா உடனே இறங்கி கீழே கிடந்த அவள் அருகே ஓடினாள். இரவு நேரம் என்பதால் பெண்கள் நடமாட்டம் இல்லை. அவளைத் தூக்கி சாலையின் ஓரம் கொண்டு வர ஷமித்ரா முயற்சி செய்தாள். அப்போதும் இயங்கிக் கொண்டிருந்த டிராஃபிக் நிற்காமல், இவர்கள் கிடக்கும் இடத்தை விட்டு ஒதுங்கி வளைந்து மெதுவாக கடந்து கொண்டிருந்தது. காரில் இருந்து யாரோ ஃபோட்டோ எடுப்பது ஷமித்ராவுக்கு தெரிந்தது.

அதற்குள் காரை பூட்டிவிட்டு சந்தனும் ஓடி வந்தான். சந்தனின் துணையோடு அந்தப் பெண்ணை சாலை ஓரமாக தூக்கி வந்தாள் ஷமித்ரா. காரில் இருக்கும் ஷமித்ராவின் மேலாடையை சந்தன் எடுத்து வந்திருந்தான். அதை அந்தப் பெண்ணுக்கு ஷமித்ரா போர்த்தினாள். காரில் எப்போதும் சந்தனுக்கும் ஷமித்ராவுக்கும் ஒரு செட் உடையும், ஒரு செட் இரவு உடையும் இருக்கும்.

யாரும் ஆம்புலன்ஸை அழைக்காததைக் கவனித்து சந்தன் ஆம்புலன்ஸை அழைத்தான். நகரத்தின் மத்தி என்பதால் சிறிது நேரத்திலேயே ஆம்புலன்ஸ் வந்தது.

அதற்குள் அந்தப் பெண்ணிடம் பேசி அவள் சொன்ன நபருக்குத் தகவலை தெரிவித்து இருந்தாள் ஷமித்ரா.

ஆம்புலன்ஸில் இருவரையும் ஏற்றி விட்டார்கள். ஒரு டிரா.ஃபிக் போலிஸ்காரர் வந்து விட்டிருந்தார். அவர் கீழே கிடந்த பைக்கை அப்புறப்படுத்துவதில் குறியாக இருந்தார்.

சந்தனும் ஷமித்ராவும் மீண்டும் காரில் ஏறினார்கள். ஷமித்ரா சாய்ந்து அமர்ந்து கொண்டாள். மூச்சை இழுத்து விட்டாள். "பீச் போகணுமாடா ?" என்றாள் .

"இப்பதான் அவசியம் போகணும்," என்றான் சந்தன்.

# 16

"பீச்சுக்கு அவசியம் போகணும்," என்று சந்தன் சொன்னதும் திடுக்கிட்ட ஷமி, "ஏன்டா இப்படி சொல்ற ?" என்றாள்.

"இல்லடீ, இப்ப மனசு பாரமா இருக்கு. ஒருமாதிரி படபடப்பா இருக்கு. இப்ப வீட்டுக்கு போனா, ரெண்டு பேருக்கும் அப்செட்டா இருக்கும். கொஞ்ச நேரம் பீச்ல போய் உட்கார்ந்திருந்திட்டு போகலாம்."
சோகமாக ஏறி தொம்மென அமர்ந்தாள் ஷமித்ரா.

சந்தன் காரை கிளப்பி முதல் கியரை ரெய்ஸ் செய்து , இரண்டாம் கியருக்கு மாற்றியதும், "ஏன்டா ? ஸ்லோவா போயேன்டா," என்றாள் ஷமி.

"இல்ல கண்ணு, நான் ஸ்பீடாவே போகலை. முதல் கியரை லைட்டா அழுத்தினாவே ஸ்பீடா போற மாதிரிதான் இருக்கும். நீ டென்ஷன்ல வேற இருக்கியா, அதான் உனக்கு அப்படித் தோனுது," என்றான். "செல்லம், நீ வேணா கொஞ்ச நேரம் கண்ணை மூடி என் மேல சாஞ்சிக்கோ," என்றான்.

வசதியாக இல்லையெனினும் கண்களை மூடிக்கொண்டு சந்தன் மேல் சாய்ந்துக் கொண்டாள் ஷமி.

ஒரு கையால் ஸ்டியரிங்கை பிடித்தபடி, இன்னொரு கையால் ஷமியின் தலையை தடவிக் கொடுத்தபடியே கடற்கரையை நோக்கி காரை செலுத்தினான் சந்தன்.
கார் மெதுவாக ஷாக் ஏதும் இல்லாமல் ஊர்ந்தபடி பீச்சை அடைந்தது.

நள்ளிரவு என்பதால் மெரீனா பீச் ஏற்கனவே காலியாகி இருந்தது. சில கார்கள் பார்க் செய்யப்பட்டு இருந்தன. சில ஐஸ்க்ரீம் தள்ளு வண்டிகள் கடையை மூடும் மூடுக்கு வந்து கொண்டிருந்தனர்.

சந்தன் காரை கடற்கரைக்குள் ஓரமாக பார்க் செய்யும்போதே போலீஸ் சைரனுடன் போலீஸ் ஜீப் கடந்து சென்றது. காரில் இருந்து சந்தனும் ஷமித்ராவும் இறங்கினர்.

இறங்கிய வேகத்துக்கு முகத்தில் படர்ந்து தெறித்த கடற்கரைக் காற்று உண்மையிலேயே உற்சாகத்தை உடனடியாக வரவழைத்தது.

"இங்கேயே உட்காரலாம்டா" என்றாள் ஷமித்ரா.

"இல்லடீ, கொஞ்சம் உள்ள போய் மணல்ல உட்காரலாம் எனச் சொல்லியபடி ஷமித்ராவின் கையைப் பிடித்துக் கொண்டு கடற்கரைக்குள் நுழைந்தான் சந்தன்.

கடற்கரையில் சிலர் தூங்கிக் கொண்டிருந்தனர். வழக்கமாக வருபவர்கள் போல. தண்ணீர் பாட்டில், தலையணை, போர்வை என சகல செட்டப்புகளுடன் தூங்கிக் கொண்டிருந்தனர்.

குப்பை, அழுக்கு இல்லாத இடமாக பார்த்து தேர்ந்தெடுத்து அமர்ந்தனர் சந்தனும் ஷமித்ராவும்.

"எவ்ளோ ஜாலியா தூங்கறாங்க பாரு. ஏசியை விட கடற்கரை காத்துல செமையா தூங்கலாம் இல்ல," என்றாள் ஷமி.

"ஜாலியா தூங்கலாம்தான், மழை வந்தா மாட்டிப்பாங்க. எழுந்து ஓடணும். அதுவுமில்லாம விடிகாலை சீக்கிரம் எழுந்துக்கணுமே," என்றான்.

சிகரெட் பற்ற வைத்தான் சந்தன். காற்று ஷமி முகத்தை நோக்கி அடிக்கவும், எழுந்து ஷமிக்கு மறுபுறம் அமர்ந்து கொண்டான். கீழே விழுந்த ஜோடிகளைப் பற்றி சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்காக ஷமி ரொம்ப வருத்தப்பட்டாள்.
சந்தன் சிகரெட் பிடித்து முடித்ததும், சந்தன் மேல் சாய்ந்து கொண்டாள் ஷமித்ரா.

"மடியில படுத்துக்கிறியா ஷமி ?" என்று கேட்டான் சந்தன்.

"படுக்க ஆசையாத்தான் இருக்கு. ஆனா வேண்டான்டா, பார்க்கற எல்லாரும் தப்பா நினைப்பாங்க. ஏதாச்சும் பிரைவேட் பீச் ரெஸார்ட்ல ரூம் போட்டு, அங்க பீச்ல மடில படுத்துக்கலாம். இங்கதான் நாறடிச்சி வச்சிருக்காங்களே," என்றாள். இந்த நள்ளிரவில், கடற்கரைக் காற்றில், சோடியம் வேப்பர் ஒளியில் அவன் மேல் சாய்ந்து கொண்டிருப்பதே இனிமையாக இருந்தது ஷமித்ராவிற்கு. சந்தனும் நிம்மதியாக ஃபீல் செய்தான்.

ஒரு போலீஸ் விசில் ஊதி எல்லோரையும் கிளம்புங்கள் என்று அறிவுறுத்திக் கொண்டிருந்தார். இன்னொரு போலீஸ் கடற்கரைக்குள்ளேயே நடந்து வந்து அமர்ந்திருந்தவர்களை கிளம்பச் சொல்லி அவசரப்படுத்தினார். போலீஸ் ஜீப் சைரன் ஒளியுடன் நின்று கொண்டிருந்தது.

ஆனால், தூங்கிக் கொண்டிருந்தவர்களை அவர்கள் ஏதும் செய்யவில்லை. அவர்கள் கடற்கரை மண்ணின் மைந்தர்களாக இருப்பார்கள் போல.

சந்தனும் ஷமியும் மணலைத் தட்டிக் கொண்டு எழுந்தனர். அவர்களையறியாமலேயே நெருக்கமாக இருந்தனர். நெருக்கமாகவே காரை நோக்கி நடந்தனர்.

காரை கிட்டடத்தட்ட நெருங்கும் போது போலீஸ் ஜீப் இவர்கள் அருகே நகர்ந்து வந்து நின்றது. அதில் இருந்த ஐயா, "இந்த நேரத்துல இங்க என்ன பண்ணிக்கிட்டு இருக்கீங்க ?" என்றார்.

"டின்னர் சாப்பிட்டுட்டு அப்படியே பீச்சுக்கு வந்தோம் சார்," என்றாள் ஷமித்ரா.

"நீங்க ரெண்டு பேரும் …" என்று இழுத்தார் ஐயா …

"இவர் என் ஹஸ்பெண்ட் சார்," என்று புன்முறுவலுடன் சொல்லி சந்தனுடன் ஒட்டி நின்று கொண்டாள் ஷமித்ரா.

"சரி சரி சீக்கிரம் கிளம்புங்க," என்று லேசான சந்தேகத்தோடு ஜீப் நகர்ந்தது.

இருவரும் காரில் ஏறி காரை நகர்த்தினார்கள். போலீஸ் ஜீப் ஒரு இடத்தில் நின்று கொண்டிருந்தது. அதில் இருந்து இறங்கிவிட்டிருந்த ஐயா, இன்னொரு ஜோடியிடம் பேசிக்கொண்டு இருந்தார்.

பளீரென்று அந்த ஆடவனை கன்னத்தில் அறைந்தார். தடுக்க வந்த பெண்ணின் தலைமயிறைப் பற்றினார்.

சந்தன் படபடப்புடன் காரின் வேகத்தை கூட்டினான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஷமித்ரா …"ச்சீ" என்றாள்.

## 17

கொஞ்சம் டென்ஷனாகவும், ரொம்ப ஜாலியாகவும் பீச்சில் இருந்து வீட்டிற்குத் திரும்பினார்கள். காரை பார்க் செய்து விட்டு லிஃப்டுக்கு பட்டன் அழுத்துகையில், வாட்ச்மேன் ஒரு மாதிரியாக பார்த்தபடி இருந்தார்.

"வாட்ச்மேன், என்ன பார்க்கிங் ஏரியா முழுக்க குப்பையா இருக்கு ?" என்று சவுண்ட் கொடுத்தான் சந்தன்.

"இல்ல சார், ரெண்டு நாளா பெருக்கற ஆளு லீவு," என்று வழிந்தார் வாட்ச்மேன்.

"தூக்கக் கலக்கமா இல்ல சரக்கா, கண்ணுலாம் செவந்திருக்கு ?" என்று கேட்டபடியே லிஃப்டுக்குள் நுழைந்தான் சந்தன்.

ஃப்ளாட்டுக்குள் நுழைந்ததும் கட்டிக்கொண்டாள் ஷமித்ரா. "நைட்டு பீச்சுக்கு போறது ஜாலியா இருக்குடா," என்றவள், "ஆனா அந்த போலீஸ்காரங்க கொஞ்சம் மூட் அவுட் பண்ணிட்டாங்க," என்றாள்.

"அதான் கெத்தா, இவர் என் புருஷன்னு சொல்லிட்டியே. நான் கூட கொஞ்சம் தடுமாறி இருப்பேன்டீ," என்று சொல்லியபடி முத்தமிட்டான்.

"ஏன்டா அந்த ஆளை அறைஞ்சாரு அந்த போலீஸ்? அந்த பொண்ணு முடியையும் புடிச்சி இழுத்தாரு . ஒரு மாதிரியா இருக்குடா," என்றாள்.

"அவன் எவளையாவது தள்ளிட்டு வந்திருப்பான். ப்ராஸ்டிட்யூட்டா இருப்பா. போலீஸ் இதையெல்லாம் கரெக்ட்டா பார்த்ததுமே கண்டு பிடிச்சுடுவாங்க," என்றான் சந்தன்.

"இல்லடா, ப்ராஸ்டிட்யூட்டா இல்லாம கூட இருக்கலாம் இல்ல ? கொஞ்சம் ஏழையா இருந்தா, டிரஸ் கொஞ்சம் பழசா போட்டிருந்தா உடனே ப்ராஸ்டிட்யூட்டா ? அவங்க லவ்வர்ஸா கூட இருக்கலாம் இல்ல ?"

"இருக்கலாம், நமக்கென்ன குட்டிமா அதைப்பத்தி கவலை ? போலீஸ், பெருசா ஒன்னும் பண்ணி இருக்க மாட்டாங்க. விட்டிருப்பாங்க, லீவ் இட்."

"ப்ச், அது அவங்க ரெண்டு பேருக்கும் எவ்ளோ அசிங்கமா இருந்திருக்கும் தெரியுமா ? அதுலயும் தன்னோட காதலிக்கு முன்னால போலீஸ்கிட்ட அடி வாங்கறது அவனுக்கு எவ்வளவு அசிங்கமா இருந்திருக்கும் ?"

"கரெக்ட்தான். பாவம்தான் . நாம என்னடீ பண்ண முடியும் ?"

"இல்ல, நாம காரை நிறுத்தி அதைத் தட்டி கேட்டிருக்கலாமோன்னு தோனுதுடா."

"ஏன்டீ, நாமளே தப்பிச்சி வந்திருக்கோம். நம்மளை எதாவது கேள்வி கேட்டு ஸ்டேஷன்ல உட்கார வைக்காம விட்டாங்களேன்னு சந்தோஷப்படுவியா ? அதைத் தட்டிக் கேட்கணுமாம் இல்ல ?"

"அதான், நாம் தாலி கட்டி புருஷன் – பொண்டாட்டியா இருந்தா தட்டி கேட்டிருக்கலாம் இல்ல ?"

"பெருசா தட்டி எல்லாம் கேட்டிருக்க முடியாது. ஆனா காரை நிறுத்தி, என்ன ஏதுன்னு விசாரிச்சிருக்கலாம்."

"இப்ப நாம லிவிங் டுகெதரா இருக்கறது லீகலா தப்பு இல்ல. ஆனா எல்லாத்துக்கும் பயந்துகிட்டு இருக்க வேண்டியதா இருக்கு இல்ல ? தங்குற வீட்ல இருந்து, பீச் வரைக்கும் எல்லா இடத்துலயும் பயம்."

"பயம்னு சொல்ல முடியாது. சொசைட்டி இன்னும் மாறலையேடி . சொன்னா புரியாதுடீ குட்டி."

"அதுக்காக எல்லா இடத்திலும் கல்யாணம் ஆயிடிச்சுன்னு பொய் புளுவிட்டு இருக்க வேண்டி இருக்கு."

"பொய்தானே, சும்மா சொல்லிட்டு போய்ட்டே இருப்போம்டா. இதுக்கெல்லாம் கவலைப் படாதே குட்டிமா."

உடை மாற்றிக் கொண்டாள் ஷமித்ரா . பல் துலக்கினாள். "பால் வேணுமாடா ?" எனக் கேட்டு அவள் மட்டும் ஒரு கப் பால் குடித்தாள். சோஃபாவில் சரிந்து அமர்ந்து கொண்டாள்.

சந்தனும் ஷார்ட்ஸ் மாற்றிக் கொண்டு பக்கத்தில் வந்தமர்ந்தான்.

"சும்மாச் சும்மா எல்லார்கிட்டயும் பொய் சொல்றது எனக்கு புடிக்கலைடா."

"புரியுதுடீ, என்னடீ பண்றது ?"

"நீ தாலி கட்டிக்கலாம்னு சொன்னியே, அதெல்லாம் வேண்டாம். வேற ஏதாச்சும் வழி இருந்தா சொல்லுடா," என தீர்க்கமாகச் சொன்னாள்.

"வேற ஒரு வழி இருக்கு. ஆனா உடனே சொல்ல முடியாது. மேடம் கூட ரொமான்ஸ் பண்ணிக்கிட்டேதான் சொல்வேன்," என சந்தன் ஷமித்ராவின் காதைக் கடித்தான்.

"இல்லடா பேபி. மூட் சரியில்லை. லேசா தலை வலிக்குது. நாளைக்கு காலைலயே ரொமான்ஸை வச்சிக்கலாம். இப்ப வேண்டாம்டா," என்றாள் ஷமித்ரா.

"சரிடீ" என்றபடி விலகி அமர்ந்த சந்தன்,"சொந்த வீடு வாங்கிடலாமா ?" என்றான்.

"வாவ், குட் ஐடியா," எனப் பாய்ந்து சந்தனின் கன்னத்தில முத்தமிட்ட ஷமித்ரா, "நாளைக்கு காலைல டீட்டெயிலா பேசிக்கலாம்.
வா தூங்கலாம். காலைல ஆ.்.பீஸ் போகணும்," என்றாள்.

இருவரும் படுக்கையில் படுத்தனர்.

சந்தன் ஷமித்ரா மேல் கையைப் போட்டான். கொஞ்ச நேரம் கழித்து நகர்ந்து வந்து, ஷமித்ராவின் கழுத்தில் முகம் வைத்து முத்தமிட்டான்.

"தலை வலிக்குதுன்னு சொன்னேன் இல்லடா செல்லம்," என முகம் சுளித்தாள் ஷமித்ரா.

"ஜஸ்ட் முத்தம்தானேடி குடுத்தேன். இண்டர்கோர்ஸுக்கா கூப்பிடறேன் ?" என்று கோபப்பட்டான் சந்தன்.

"முதல்ல கழுத்துல முத்தம் குடுப்ப, அப்புறம் உன்னைப் பத்தித் தெரியாதா ? கொஞ்சம் தூங்க விடுடா ப்ளீஸ்," என்றாள்.

"கையை மட்டும் உன் மேல போட்டுக்கட்டுமா ?" என்றான் சந்தன்.

"ம்ம்ம்…போட்டுக்கோ," என்றபடி, போர்வையை இழுத்து முழுக்கப் போர்த்திக் கொண்டாள்.

கொஞ்ச நேரம் போர்வையின் மீது கை போட்டுக் கொண்டிருந்த சந்தன், ஷமித்ரா தூங்கி விட்டது தெரிந்ததும் கடுப்புடன் எழுந்து தம்மடிக்கப் போனான்.

## 18

காலையில் மிகத் தாமதமாக எழுந்தான் சந்தன். எழுந்து பார்த்தால் ஷமித்ரா இல்லை. அலுவலகம் கிளம்பி விட்டிருந்தாள். எழுந்த உடனே ஷமித்ராவுக்கு ்.போன் அடித்தான். ரிங் போய்க்கொண்டே இருந்தது, எடுக்கவில்லை.

அடித்துப் பிடித்து டீ போட்டுக் குடித்துவிட்டு கிளம்பி அலுவலகம் ஓடினான். வேலையில் மூழ்கினான்.

பிரேக்கின் போது சந்தனின் நண்பன் சர்வேஷ், "இன்னைக்கி தண்ணி அடிக்கலாமா ?" என்று வினவினான். சந்தனுக்கும் மூட் வந்தது. கடந்த சில நாட்கள் இறுக்கமாக விறுவிறுவென ஓடியதாக தோன்றியது.

என்னதான் ஷமித்ரா தண்ணி அடிக்க அனுமதித்தாலும், நண்பர்களோடு கலாட்டாவாக குடிக்க வேண்டும் என்று தோன்றியது.

"அடிக்கலாம், எங்கடா ?" என்று கேட்டான் சர்வேஷிடம்.

"வேற எங்க ? உன் வீடுதான். அதான் செம ஸ்பாட்," என்றான் சர்வேஷ்.

சர்வேஷ், நெருங்கிய நண்பன். ஆனால் இதுவரை ஷமித்ரா, சந்தன் வீட்டில் வந்து தங்கியது சர்வேஷுக்கு தெரியாது. ஷமித்ராவுடனான சந்தனின் பழக்கம் தெரியும். தோழியா, கேர்ள் ஃப்ரெண்டா என்றெல்லாம் பெரிதாக பேசிக்கொண்டதும் இல்லை.

தண்ணி பார்ட்டி என்று முடிவாகி விட்டால், சந்தனின் ஃப்ளாட்தான் நண்பர்களுக்கு வசதி. லொக்கேஷன், உள்ளே இருக்கும் வசதிகள், தம் அடிக்க பால்கனி என ஏக வசதியாக இருந்தது சந்தனின் ஃப்ளாட்.

ஷமித்ராவுடன் பழக ஆரம்பித்த பிறகு, நண்பர்கள் வரும் நாட்களில் ஷமித்ரா வரமாட்டாள். முன் கூட்டியே சொல்லி விடுவான். ஷமித்ராவும் எப்போதாவதுதான் வந்துத் தங்கிக் கொண்டிருந்தாள். தண்ணி பார்ட்டி முடிந்ததும் நண்பர்களில் சிலர் பொறுப்பாக சுத்தம் செய்து வைத்து விட்டுச் செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

இப்போது ஷமித்ரா வீட்டில் இருக்கிறாள். சர்வேஷ், தண்ணி அடிக்கலாமா என்று கேட்கிறான். சந்தனின் மனம் பரபரவென்று வேலை செய்தது. சர்வேஷிடம் சொல்லி விடலாமா ? இல்லை.... பிறகு சொல்லிக்கொள்ளலாமா ?

பிறகு சொல்லிக்கொள்ளலாம் என்றே நினைத்தான். "மச்சி, வீடு போரடிக்குது. எங்காவது பாருக்கு போகலாம்," என்றான்.

"ஏன்டா ? பாருக்கு போனால் சர்வீஸ்ல மூட் அவுட் பண்ணுவானுங்க. கேக்கற சரக்கு இருக்காது. ஒரே சத்தமா இருக்கும். வீட்டுக்கே போகலாம் மச்சி," என்றான்.

"இல்லடா, பாருக்கு போனாத் தேவலாம்னு இருக்கு. ஒரு ரெஃப்ரெஷிங்கா இருக்கும்னு தோணுது. சத்தம் இல்லாத பாரா போகலாம்," என்றான் சந்தன்.

"சரி ஓகே, உன் இஷடம். பாருக்கே போகலாம்டா," என்று ஒத்துக்கொண்ட சர்வேஷ், "யாரையெல்லாம் கூப்பிடலாம் ?" என்றான் .

"வழக்கமா வர்ற நம்ம கேங்கை கூப்பிட்டுக்கலாம். வர்றவங்க வரட்டும்," என்று சந்தன் சொல்லியதும், "சரி மச்சி நானே எல்லாரையும் கூப்பிடறேன். ஆனா ஒரு மேட்டர், இப்பவே சொல்லிடறேன்," என்றான்.

"என்னடா ?"

"டிரங்கன் டிரைவ் பண்ண வேண்டாம். காரை உன் வீட்ல நிறுத்திட்டு, ஓலா புக் பண்ணிட்டு போயிடலாம். திரும்ப ஓலாவிலேயே வந்துடலாம்," என்றான் சர்வேஷ்.

"ஓகே மச்சி," என்றான் சந்தன்.

"அதுக்கு அப்புறம் வீட்டுக்கு போறவங்க போகட்டும். உன் வீட்டிலேயே படுத்துக்கறவங்க படுத்துக்கட்டும்," என்றான்.

தூக்கி வாரிப் போட்டது சந்தனுக்கு.

## 19

வீட்டிற்கு வருவதில் சர்வேஷ்  குறியாக இருக்கிறான் என்பது தெரிந்ததும், இதற்கு மேல் மறைக்க முடியாது என்று முடிவுக்கு வந்த சந்தன் சர்வேஷிடம் சொல்லி விடலாம் என்று முடிவு செய்தான். ஆனால் இப்போது வேண்டாம், தண்ணி அடிக்கும்போது சொல்லலாம் எனத் தோன்றியது. சர்வேஷிடம் சொன்னால் மற்ற நண்பர்களிடமும்  சொல்ல வேண்டும். இப்படியே போனால் ஊருக்கே தெரிந்து விடும் என்று குழம்பினான்.

"சரி மாப்ள.. நைட்டு பாருக்கு போகலாம். வீட்ல காரை விட்டுடு," என்று சொல்லிவிட்டு, வேலைகளில் அமுங்கிக் கொண்டனர்.

ரகசியம் என்பது ஒருவருக்கு மட்டும் தெரியும் வரைதான். இரண்டாம் நபருக்கு தெரிந்தாலே, அவர் ஒரே ஒருவருக்கு சொல்லி, அந்த நபர் இன்னும் ஒரே ஒருவருக்குச் சொல்லி, சங்கிலித் தொடராக ஊருக்கே தெரிந்து விடும். நாமாக வெளிப்படையாக அறிவித்தால் கூட பலருக்குத் தெரியாது.
ஆனால் ரகசியம் எனச் சொல்லி நாலு பேரிடம் சொன்னால், பரவி விடுகிறது.

நம் ஆட்களுக்கு ரகசியத்தை மனதில் வைத்துக்கொள்வது அவ்வளவு கடினமாக இருக்கிறது. இறக்கை முளைத்த முயல் போல ரகசியம் மனதிற்குள் கிடந்துத் துள்ளுகிறது. யாரிடமாவது சொன்னால்தான் ஆர்கஸம் அடைந்தத் திருப்தி ஏற்படுகிறது. சில நேரங்களில் ரகசியம் ஏதும் இல்லை என்றால் இட்டுக்கட்டி பேசுவது நடக்கிறது. புறம் பேசுதல், கிசுகிசு பேசுதல் நம் ஆட்களின் டீஎன்ஏவில் நீக்கமற நிறைந்திருக்கிறது.

சந்தன் வேலை செய்து கொண்டே, பேசாமல் ஃபேஸ்புக்குலேயே போட்டு விடலாமா என்று யோசித்தான். இன் ரிலேஷன்ஷிப் என போட்டு ஷமித்ராவின் போட்டோவை டேக் செய்து ஷமித்ராவுக்கு ஷாக் கொடுக்கலாமா என்று யோசித்தான்.

இன்று இரவு தண்ணியடிக்கப் போவதை வேறு ஷமித்ராவிடம் சொல்ல வேண்டும். தான் வரும் வரை தனியாகப் படுத்திருக்கச் சொல்ல வேண்டும். தண்ணியடிக்கப் போகிறோம் என்று ஷமித்ராவிடம் சொல்ல வேண்டி இருப்பதே சந்தனுக்குப் பிடிக்க வில்லை. தண்ணியடிப்பதே ஆக சுதந்திரமான ஒரு மொமண்ட். அந்த சுதந்திரமான செயலை செய்ய பர்மிஷன் வாங்க வேண்டும் என்பது வேடிக்கையாக இருந்தது. பர்மிஷன் என்று இல்லை, இன்ஃபார்ம் செய்ய நேர்வதே சந்தனுக்குப் பிடிக்கவில்லை. ஷமித்ரா தனியாக இருந்த போதும், தண்ணி அடிப்பதைச் சொல்லி இருக்கிறான். ஆனால் அது வேறு மாதிரி. குடிக்கச் சென்று விடுவான். ஷமித்ரா கால் செய்தால், நண்பர்களுடன் குடித்துக் கொண்டிருக்கிறேன் என்று சொல்வான். ஆனால் இப்போது, குடிக்கச் செல்வதற்கு முன்னமே சொல்ல வேண்டி இருந்தது சந்தனுக்குப் பிடிக்கவில்லை.

சர்வேஷுக்கும் கேர்ள் ஃப்ரெண்டு இருக்கிறாள். இது அநேகமாக நான்காவது என்று ஞாபகம். ஆனால் இவள்தான் தன் ஆள் என்றும், இவளை திருமணம் செய்து கொள்ளப்போவதாகவும் தீர்மானமாகச் சொல்லி இருந்தான் சர்வேஷ். ஒரு முறை அவளை அறிமுகப்படுத்தி இருக்கிறான். ஸ்ரவந்தி என்று பெயர் சொன்னதாக ஞாபகம். இருவரும் டிரிப் எல்லாம் அடித்து இருக்கிறார்கள். ஆனால் அவள் தனியாகத் தங்கி இருக்கிறாள்.

மற்ற நண்பர்கள் அனைவருக்கும் கேர்ள் ஃப்ரெண்ட்ஸ் இருக்கிறார்கள் அல்லது நிச்சயம் ஆன பெண் இருக்கிறார்கள். எந்த அளவு சீரியஸான உறவு என்பது தெளிவில்லை. என்னதான் கேர்ள் ஃப்ரெண்ட் வைத்திருந்தாலும் மற்ற எந்த பெண்ணைப் பார்த்தாலும் அலைவார்கள்.

அதுதான் சந்தனுக்கு குழப்பமாக இருக்கும். சந்தன் மற்ற பெண்களை சைட் அடிப்பானே ஒழிய, ஷமித்ராவைத் தவிர வேறு எந்தப் பெண்ணுடனும் ஃபீலிங் வந்ததே இல்லை. ரொமாண்டிக்காகவோ, செக்ஸியாகவோ தோன்றியதேயில்லை. ஆனால் சில நண்பர்கள் கேர்ள் ஃப்ரெண்ட் வைத்துக்கொண்டே, கால் கேர்ள்ஸிடம் செல்வது, மற்ற பெண்களை நினைத்து சுய இன்பம் அனுபவிப்பது என்பதெல்லாம் சர்வ சாதாரணம். வெட்கமே இல்லாமல் இதை சபையில் பெருமையாக பேசுவார்கள். சந்தனுக்கு பிடிக்காவிட்டாலும் கும்பலில் கோவிந்தா போடுவான். இந்த கால் கேர்ள் சமாச்சாரம் மட்டும் சந்தனுக்கு ஆகவே ஆகாது, அலர்ஜி.

இதைப் போன்ற நண்பர்கள் குழாமில் ஷமித்ராவுடன் லிவிங் டுகெதரில் இருப்பதை சொன்னால், எப்படி எடுத்துக்கொள்வார்கள் ? என்னென்ன கதை கட்டுவார்கள் ? ஷமித்ராவைப் பற்றி அசிங்கமாக ஏதேனும் கதை கட்டுவார்களா ? ஷமித்ராவின் மீதுள்ள மரியாதை குறையுமா... என்றெல்லாம் எண்ணங்கள் குழப்பியடித்தன. நண்பர்கள் எல்லோரும் கேர்ள் ஃப்ரெண்டுடன் உறவு கொண்டவர்கள்தான் எனினும், லிவிங் டுகெதர் என்றால் ஏதோ அதிசயமாகப் பார்ப்பார்கள்.

சரி முதலில் ஷமித்ராவிடம் தண்ணி அடிக்கப் போவதை சொல்லி விடலாம் என்று கால் அடித்தான்.

ஷமித்ரா எடுத்து, "எழுந்துட்டியாடா ?" என்றாள் . "குட் மார்னிங் பேபி," என்றாள்.

"ஏய், நக்கலாடீ. ஆ..ஃபீஸ்ல இருக்கேன். பிஸியா வேலை ஓடிக்கிட்டு இருக்கு," என்றான்.

"சாப்பிட்டியாடா ?" என்று கேட்டவள், "நைட் நான் வீட்டுக்கு வரமாட்டேன்டா," என்றாள்.

## 20

நாம் குடிக்கப் போவதை எப்படிச் சொல்லப் போகிறோம் என யோசித்துக் கொண்டிருந்தால், திடீரென்று இவள் வரமாட்டேன் என்கிறாளே என்று தோன்றியது சந்தனுக்கு. அவள் இல்லாமல் இருப்பது ஜாலிதான் எனினும், அவள் ஏன் வரமாட்டாள் என செகண்ட்டுகளில் மூளை சூடாகியது.

குடித்து விட்டு வந்து தூங்கிக் கொண்டிருக்கும் ஷமியிடம் கிஸ்மிஸ் செய்யலாம் என்றிருந்த எண்ணத்துக்கு அடி விழுந்தது. முந்தின இரவே ஒன்றும் நடக்கவில்லை. வழக்கமாகப் பேசுவதை விட, குடித்து விட்டு லேசாக உளறினால் ஷமி ரசிப்பாள். சந்தன் உளற மாட்டான். குடித்து விட்டு அடிமன ஆழத்தில் இருந்து பேசுவதாகத்தான் பேசுவான். வழக்கமாக பேசுவதை விட தீவிரமாக இருக்கும். கலை, கலாச்சாரம், அரசியல், அகழ்வாய்வு என எல்லா சப்ஜெக்டிலும் வீரியமாக பேசுவான். அப்போது, அதே ஆர்வத்தோடு அந்த விவாதத்தில் பங்கெடுப்பாள் ஷமி. சில துணைக் கேள்விகளை போட்டு இன்னும் இன்னும் வீர்யமாக சந்தனை பேச விட்டு ரசிப்பாள். பேச்சு அப்படியே போய், காதல் வசனங்கள் தொடர ஆரம்பிக்கும். ஷமியைப் பற்றி, அவள் மீதான காதல் பற்றி எல்லாம் சந்தன் போதையில் பேசப்பேச ஷமிக்கு ரொம்பப் பிடிக்கும். சொக்கிப் போவாள்.

அந்த சமயத்தில் சந்தன் ஒரு சதவீதம் கூட பொய் கலப்பு இன்றி முழுக்க முழுக்க உண்மையைப் பேசுவது போல இருக்கும். சந்தன் ஒரு வெள்ளந்தி குழந்தையாக காட்சியளிப்பான் ஷமிக்கு. இந்த அனுபவங்கள் சந்தன், ஷமி இருவருக்குமே ரொம்பப் பிடிக்கும். இதற்கு அப்பால், உடல் ரீதியான தொடுதல், ஃபோர் ப்ளே கொஞ்சம் நீளும். உடல் ரீதியான தொடுதலினூடே டர்ட்டி வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டு கொஞ்சல்களில் ஈடுபடுவார்கள். அதற்குப் பிறகான நீண்ட அழுத்தமான உடல் உறவு முடிந்து மது போதையும் காம போதையும் கலந்து கட்டி கண்கள் சுழல கட்டிப்பிடித்தபடி தூங்கிப் போவார்கள். இது எல்லாம் இன்று நடக்கும் என்றெண்ணி இருந்த சந்தனுக்கு பொசுக்கென்று போயிற்று.

"ஏன் கண்ணுகுட்டி வீட்டுக்கு வராது ? எங்க போகப்போகுது ?" என்றான் சந்தன்.

"இன்னைக்கி ஆஃபீஸ்ல ஒருத்திக்கு லாஸ்ட் டே. ரொம்ப நாளா வேலை பார்த்தவ. அதான் ஒரு ஃபேர்வெல் பார்ட்டி. ஈசிஆர் போறோம். பார்ட்டி முடிய லேட் ஆயிடும்ங்கறதால ரெஸார்ட்லயே ரூம் புக் பண்ணிட்டாங்க. அங்கேயே தங்கிட்டு காலைல வரேன்," என்றாள் ஷமி.

"ஏய்.... இது உனக்கு முன்னமே தெரியாதா ? உன்கிட்ட முன்னமே சொல்லலையா ?"

"இல்ல, முன்னமே ஃபேர்வெல் பார்ட்டி ப்ளான் பண்ணி இருந்தாங்க. நைட் வந்துடலாம்னுதான் எனக்கு ப்ளான். இப்ப ஃப்ரெண்ட்ஸ் கம்ப்பெல் பண்றாங்க, அதான் தங்கிட்டு காலைல வந்துடறேன்."

"தடியனுங்கதானே தங்க சொல்றானுங்க ?"

"இல்லடா, நாலைஞ்சி கேர்ள்ஸ் தங்கறோம். அவங்கதான் என்னை ப்ரஷர் பண்ணாங்க."

"இல்லடீ, அந்த பொண்ணுங்களை வச்சு வேற எந்த தடியனோ உன்னை தங்க வக்கிறதுக்கு ரூட் போட்டிருக்கான். கேர்ஃபுல் ஷமி."

"ச்சீ, அதெல்லாம் ஒரு ப்ராப்ளமும் இல்ல, நான் பார்த்துக்கறேன். நீ நைட் என்ன பண்ணப்போறே சந்து ?"

"நீதான் வரலியே, நான் சும்மா எவன் கூடயாவது போய் ரெண்டு பீர் அடிச்சிட்டு வந்து படுத்துக்கறேன்."

"சரி, ரெண்டு பீர் மட்டும் அடி, போதும்."

"சரிடீ, நீ அங்க குடிப்பியா ?"

"இல்ல, எல்லாரும் டிரிங்க் பண்ணா நானும் ரெண்டு டிரிங்ஸ் டிரை பண்ணுவேன்."

"கண்ணு, நீயே கலந்துக்கோ. யார் கலந்து குடுத்தாலும் குடிக்காதே. டிரிங்ஸ் அதிகம் மிக்ஸ் பண்ணிடுவானுங்க இல்லைன்னா, மாத்திரை கலந்து குடுத்துடுவானுங்க."

"ச்சே, ச்சே அதெல்லாம் பண்ண மாட்டாங்க. நல்ல ஃப்ரெண்ட்ஸ்.
நீ ஓவரா கற்பனை பண்ற."

"இப்படியே எல்லாரும் நினைச்சு நினைச்சுதான்டி பிரச்சனைல மாட்டறாங்க . இந்தப் பொண்ணுங்களுக்கு காதலனைத் தவிர மத்த எல்லா தடியனும் ஜெண்ட்டில்மேன் தான்."

"ஏய், இல்லடா. நான் ஒருநாள் எல்லாரையும் இண்ட்ரடியூஸ் பண்றேன், பார்த்து தெரிஞ்சிக்கோ . அப்பதான் உனக்கே புரியும்."

"அதெல்லாம் இருக்கட்டும், இப்போதைக்கு நீயே டிரிங்ஸ் கலந்துக்கோ. ரெண்டு ரவுண்டுக்கு மேல வேண்டாம். நைசா தொட்டுப் பேச ஆரம்பிப்பானுங்க, அப்ப விலகிக்கோ. ஆமா... கேம்ப் ஃபயர், டேன்ஸ் எல்லாம் இருக்குமாடீ ?"

"இருக்கும்டா. அதுக்குத்தானே காட்டேஜ் புக் பண்ணி இருக்காங்க."

"ஏய் நீ டான்ஸ் ஆடப்போறியா ? உன் கூட சேர்ந்து தடிப்பயலுங்க ஆடுவானுங்களேடீ ?"

"டேய் லூஸாடா நீ ? இங்க என்ன.. ஜோடியாவா ஆடப் போறோம். குரூப்பா மொத்தமா ஆடுவோம். உன் கேர்ள் ஃப்ரெண்ட் கற்புக்கு எந்த பங்கமும் வராது ஓகேவா? நான் பார்த்துக்கறேன்."

"கேர்ஃபுல் குட்டிமா கேர்ஃபுல். நைட் 12 மணிக்கு மேல ஆடாதே, குடிக்காதே. போய் ரூமை சாத்திட்டு படுத்துக்கோ, புரியுதா ? அப்புறம் எனக்கு ஒரு மணி நேரத்துக்கு ஒரு தடவை மெசேஜ் அனுப்புடீ, ஓகேவா?"

"ஓகேடா, அனுப்பறேன். நான் இல்லைங்கறத சாக்கா வச்சுக்கிட்டு நீ எவளையும் வீட்டுக்கு கூட்டிட்டு போய் படுத்துக்காதே என்ன ?"

"ஹாஹ்ஹா, தோ உடனே ரெடியா இருக்காளுங்க, ஏன்டீ நீ வேற ?"

"ஆளுக்கு வருத்தத்தைப்பாரு, ஓகேடா டேக் கேர் ..பை ..பை."

ஷமியுடன் பேச்சை முடித்தவன் வேலையைத் தொடர்ந்தான். சர்வேஷ் நடுநடுவே வாட்ஸப்பில் மெசேஜ் அனுப்பிக் கொண்டே இருந்தான். அதற்குள் இன்று மாலை குடிப்பதற்கு ஒரு குரூப் உருவாக்கி இருந்தான் சர்வேஷ். சர்வேஷ் இப்படித்தான், சின்ன வேலையாக இருந்தாலும் பக்காவாக செய்ய வேண்டும் என்று ஆன்லைனில் என்னவெல்லாம் செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்வான்.

கொஞ்ச நேரம் வேலை பார்த்துவிட்டு வாட்ஸப் ஓப்பன் செய்தால் அதற்குள் இன்று மாலை சரக்கடிக்கும் குரூப்பில் எக்கச்சக்க மெசேஜ்கள். எந்த பார், எத்தனை மணி என எல்லாம் முடிவாகி இருந்தது.

"டேய், நாம நித்திகாவையும் சரக்கடிக்க கூப்பிடலாமா ?" என்று மெசேஜ் போட்டு ஒரு ஸ்மைலி போட்டான் சந்தன்.

நித்திகா, அதே அலுவலகத்தில் வேலை பார்ப்பவள். கொஞ்சம் ஆடம்பரமான அழகி !

சர்வேஷ், உடனே நித்திகாவை குரூப்பில் சேர்க்க, நித்திகா உடனே இணைந்து சந்தனின் மெசேஜைப் பார்த்தாள்.

## 21

க்ரூப்பில் நுழைந்து பார்த்த நித்திகாவுக்கு பாதி நபர்களுக்கு மேல் யாரென்றே தெரியவில்லை. அதனால் நாகரீகமாக 'ஹாய் எவ்ரி ஒன், தேங்க்ஸ் ஃபார் ஆடிங் மீ' என்று மெசேஜ் போட்டாள்.

இன்று வேலை இருப்பதால் தன்னால் வர இயலாது என்று சொல்லி, நன்றி நவின்று குழுவில் இருந்து விலகிக்கொண்டாள்.

'ஏன்டா லூசு அவளை சேர்த்த ?' என்று மெசேஜ் அடித்தான் சந்தன்.

'நீதானே கேட்ட.. அதான்,' என்று :—) :—) ஸ்மைலிகளைப் பறக்க விட்டான் சர்வேஷ்.

நித்திகா நேரடியாக சந்தன் மொபைலுக்கு மெசேஜ் அனுப்பிவிட்டாள்.

'ஹாய் சந்தன், என்னைச் சேர்க்கச் சொன்னதற்கு நன்றி. என்னை உனக்குப் பிடிக்குமா ? என்னுடன் டிரிங்ஸ் சாப்பிட ஆசையா ?'

இதற்கு என்ன பதில் சொல்வது எனத் தெரியவில்லை சந்தனுக்கு. சும்மா ஃப்லிர்ட் செய்து பார்க்கலாம் என தோன்றியது.

"ஹாய் நித்திகா, ஐ லைக் யூ. உன்னுடன் ஒருநாள் டிரிங்ஸ் சாப்பிட்டால் உல்லாசமாக இருக்கும். நிரம்ப மகிழ்ச்சியான நாட்களில் அது ஒன்றாக இருக்கும்,' என்று மெசேஜ் அடித்தான்.

'சந்தன் நான் மிக மிக செலக்டிவ்வான நபர்களுடன் தான் டிரிங்ஸ் சாப்பிடுவேன்,' என பதில் மெசேஜ் வந்தது.

சந்தன் இதற்கு பதில் அளிக்காமல் யோசித்துக் கொண்டிருக்கையிலேயே, ஷமியிடம் இருந்து, 'ஐ லவ் யூ மை சந்து,' என மெசேஜ் வந்தது.

அதற்கு அவசர அவசரமாய், 'ஐ லவ் யூ ஹாட் கேர்ள், லவ் யூ ஷமி,' என பதில் அளித்தான் சந்தன். கொஞ்சம் குற்ற உணர்ச்சி தலையெடுத்தது. தான் ஏதேனும் தவறாக செய்து கொண்டிருக்கிறோமோ என்று மனம் லேசாகக் குடைந்தது.

அதற்குள் மீண்டும் நித்திகா மெசேஜ்,

'நிச்சயம் நாம் ஒருநாள் டிரிங்ஸ் சாப்பிடுவோம் சந்தன். இன்று நீங்கள் உங்கள் நண்பர்களுடன் கொண்டாடுங்கள். என் நினைவு வந்ததற்கு நன்றி.'

'ஷ்யூர்' என்று மட்டும் மெசேஜ் தட்டி விட்டு மொபைலை அணைத்துத் தூக்கித் தூரப்போட்டான் சந்தன். அப்பாடா என்று இருந்தது சந்தனுக்கு.

மீண்டும் கொஞ்ச நேரம் வேலையில் மூழ்கினான். சர்வேஷ் முடுக்கி விட்டதால் வேலையில் இருந்து கிளம்பி வீட்டுக்கு வந்து 20 நிமிடங்களில் ரெஃப்ரஷ் ஆகிக்கொண்டு சர்வேஷுடன் பாருக்கு சென்றான்.

15 நிமிட இடைவெளியில் மற்ற நண்பர்கள் வந்து அமர பார்ட்டி களை கட்டத் தொடங்கியது.

நித்திகாவை குரூப்பில் இழுத்து விட்டிருந்தபடியால், நித்திகாவைப் பற்றி பேச்சு ஆரம்பித்தது. நண்பர்களில் ஒருவன் வஸந்த ராஜன். அவன் நித்திகாவிடம் ஏற்கனவே ப்ரோப்போஸ் செய்து, அவள் நாகரீகமாக மறுத்ததைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்க,

"மூக்குடைப்புல என்னடா மச்சி டீஸண்ட் மூக்குடைப்பு, இன்—டீஸண்ட் மூக்குடைப்பு ?" என்று கமெண்ட் அடித்து காலி செய்தான் சர்வேஷ்.

'ஹௌஸ் தி பார்ட்டி ?' என்று நித்திகாவிடம் இருந்து சந்தனுக்கு மெசேஜ்.

சந்தனுக்கு கொஞ்சம் பெருமையாக இருந்தது. வாலண்டியராக போன இவனை ஒதுக்குகிறாள், நம்மிடம் ஆர்வம் காட்டுகிறாள். நம்மிடம் ஏதோ இருக்கிறது என்று தற்பெருமை மனதுக்குள் ஊற்றெடுத்தது. முதல் ரவுண்ட் அந்த எண்ணத்திற்கு ஸ்பிரிட் ஊற்றியது .

'கோயிங் ஃபைன்' என அடித்தான். சற்று நேரம் கழித்து 'மிஸ் யூ' என இரண்டாம் ரவுண்ட் மெசேஜ் அனுப்பியது.

ஷமியை சந்தனின் நண்பர்களுக்கு ஓரளவு தெரியும் என்பதால், கடைசியாக ஷமியைப் பற்றியும் பேச்சு வந்தது. "ஷீ ஈஸ் ஃபைன்," என்றான் சந்தன்.

வஸந்த்திற்கு சீக்கிரம் போதையேறி விட்டது. ஷமியை புகழ்வதாக நினைத்துக்கொண்டு, "மச்சி ஷமித்ரா சூப்பர் ஃபிகர் மச்சி. எலீட் அவுட் லுக். உனக்கு ஏத்த ஃபிகர் மச்சி. சும்மா இவனுங்க சுத்திட்டு கைட்டி விட்ற மாதிரி பண்ணிடாத. வச்சி வாழு மச்சி. நீ குடுத்து வச்சவன்டா, செம பொண்ணுடா," என சொல்லிக்கொண்டே போனான். நல்லதுதான் சொன்னான் எனினும், வசந்த் ஓவராக சொன்னதால் வசந்த்தே ஷமித்ராவை காதலிப்பது போன்ற ஒரு தோற்றம் வந்து விட்டது. குடிக்கும்போது இதற்குத்தான் நண்பர்களின் காதலியைப் பற்றியோ, மனைவியைப் பற்றியோ பேசாமல் இருத்தல் நலம். இந்தக் கூட்டம் கொஞ்சம் நாகரீகமான கூட்டம் என்பதால் அதைப் பெரிதாக கண்டு கொள்ளாதது போல் நடித்தது.

வஸந்த் யாரைப் பார்த்தாலும் காதல் வயப்படுபவன் என்பது சந்தன் உட்பட அனைவருக்கும் தெரியும். அதனாலேயே சாந்தனுக்கு கொஞ்சம் எரிச்சலாக இருந்தது. அதே சமயம் மீண்டும் ஷமித்ரா மீது அளப்பரிய அன்பு உண்டானது.

அந்த விதத்தில் ஷமித்ராவைப் பற்றிய நினைவுகளை கிளறி விட்டதாலும், அவனையும் ஷமித்ராவையும் சிறந்த ஜோடி என்று சொன்னதாலும் வஸந்த் மீது கொஞ்சம் நல்லுணர்வு வந்தது.

வஸந்த்திற்கும் ஏதோ உறைத்திருக்கும் போல, "ஷமித்ரா ஈஸ் மை சிஸ்டர்," என கத்தினான். "என் தங்கச்சியை நல்லா பார்த்துக்கோடா," என எழுந்து வந்து சந்தனை அணைத்துக் கொண்டே கூறினான்.

"கூல் கூல்..." என வஸந்த்தை கூல் படுத்தினார்கள் .

தான் அனுப்பிய மிஸ் யூ மெசேஜைப் பார்த்து வெட்கமாக இருந்தது சந்தனுக்கு. அதையே பார்த்துக்கொண்டு சிகரெட் பிடித்துக்கொண்டு இருந்தபோது, 'சோ ஸ்வீட்' என நித்திகாவிடம் இருந்து மெசேஜ் வந்தது. 'மிஸ் யூ' என ஷமித்ராவிடம் இருந்து மெசேஜ் வந்தது.

இரண்டுக்கும் பதில் அளிக்காமல் குழுவின் ஜமாவில் ஐக்கியம் ஆனான்.

மூச்சு முட்டக் குடித்து விட்டு, சர்வேஷுடன் கேப் புக் செய்து வீடு வந்து சேர்ந்தான் சந்தன். மேலே போகும்போது செக்ரட்டரி ஒரு மாதிரியாக பார்த்தபடி சென்றார்.

கதவைத் திறந்து உள்ளே நுழைந்து பால்கனியில் சிகரெட் பிடித்தபடி இருக்கையில் சர்வேஷிடம் சொன்னான், "ஷமித்ரா இந்த வீட்டுக்கு வந்துட்டாடா. நாங்க இப்ப லிவிங் டுகெதர்."

## 22

மாமல்லபுரம். ஊர் ஆரம்பத்திலேயே அந்த பீச் ரெஸார்ட் இருந்தது. ஷமித்ரா அலுவலகத்தில் இருந்து 4 கார்கள் மற்றும் 2 பிரைவேட் டாக்ஸியில் அந்த ரெஸார்டுக்கு வந்து இறங்கினார்கள்.

காட்டேஜ் சாவிகளை கையில் வாங்கிக்கொண்டு, அறை பிரித்து கொடுப்பதற்குள்ளேயே சில இரண்டும் கெட்டான்கள் குடிக்க ஆரம்பித்திருந்தன. ஷமித்ரா, வசுமதி மற்றும் நிர்மலா என்ற அலுவலக தோழிகளுடன் அறை எண் 110க்குச் சென்றாள். வெந்நீரில் ஒரு குளியல் போட்டுவிட்டு முட்டிக்கால் அருகே வரை கவர் செய்யும் ஒரு ஸ்டைலான ஷார்ட்ஸ் போட்டுக்கொண்டாள். மற்ற தோழிகள் ரெடியாவதற்குள் ரூம் சர்வீசில் ஆர்டர் செய்து ஒரு கா.ஃபி குடித்தாள்.

தோழிகள் ரெடியானதும் அறையை பூட்டிக்கொண்டு எல்லோரும் கூடி இருக்கும் இடத்திற்குச் செல்ல ஆரம்பித்தனர். வசுமதிதான் முதலில் சொன்னாள், "ஷமி, டி ஷர்ட் நல்லா இருக்கு. பிரா போடலியா ?"

"இல்லடீ, ஃப்ரீயா இருக்கட்டுமேன்னு போடலை."

"போய் போட்டுக்கிட்டு வா, ரொம்ப ஆப்வியஸா தெரியுது. ஓவரா டான்ஸ் ஆடுது பாரு," என்றாள் வசுமதி சிரித்துக்கொண்டே .

அவர்களை காக்க வைத்து விட்டு உள்ளே ஓடினாள் ஷமி.

அவள் வருவதற்குள் வசுமதியும் நிர்மலாவும் பேசிக்கொண்டனர்,

"வசு, ஷமி ப்ரெஸ்ட் திடீர்னு பெருசான மாதிரி இருக்கு இல்ல ?"

"ஆமா நிம்மி, நானும் சொல்லலாம்னு நினைச்சேன். பெருசு மட்டும் இல்ல, அன் ஷேப்டா ஆயிட்டு போகுது. யாரோ வைல்டா யூஸ் பண்ணிட்டு இருக்காங்கன்னு நினைக்கிறேன்," என்று கூறி நாக்கைக் கடித்து கண் சிமிட்டினாள் வசுமதி.

"ச்சீ, அதெல்லாம் மித் . ரெகுலர் சர்வீஸ்ல இருந்தா பெருசாயிடும்னா நாட்டுல பல பேர் 45 சி, 50 டி சைஸ்ல இல்லடீ சுத்திக்கிட்டு இருப்பாங்க. இங்க அதிக பட்ச சைஸே 38 தானே ? அதுவும் ஊளை சதை, சைடு சதை எல்லாத்தையும் சேத்து 36 இல்லைன்னா 38ன்னு சொல்லிக்கறாங்க," என்றாள் நிர்மலா.

30ஏ—க்கு பதில் 32பீ போட்டுக்கிட்டு திரிந்து கொண்டிருக்கும் வசுமதியும், 32ஏ—க்கு பதில் 32சீ போட்டு ஆட்டம் காட்டிக்கொண்டிருக்கும் நிர்மலாவும் உண்மையான 34சீ—யைப் பார்த்து லைட்டான பொறாமையில் இப்படி நகைச்சுவையாக அளந்து கொண்டிருந்தனர். இவர்கள் இருவரின் 30ம் 32ம் கை, வாய், மெய் ஸ்பரிஸம் பட்டவைகள்தான் எனினும் பொதுவில் ஒரு ஒழுக்கமானவள் வேடம்.

பிரேசியர் மாட்டிக்கொண்டு, டீ ஷர்ட் போட்டுக் கொண்டு ஷமி வந்ததும் மீண்டும் அவளின் மார்பகத்தை ஓரக்கண்ணால் பார்த்தபடி நடக்கலானார்கள். இப்போது ஆடவில்லை என்றாலும் சிக்கென கவர்ச்சியாக இருந்தது.

ஸ்விம்மிங் பூல் பக்கத்தில் ஸ்பீக்கர் கட்டி, ஒரு ஷாமியானா போடப்பட்டு இருந்தது. அதில் பாடல்களை மெல்லமாக ஒலிக்க விட்டு சோதித்துக் கொண்டிருந்தனர்.

வேலையை விட்டுச் செல்லும் லில்லியுடன் செல்ஃபீ ஃபோட்டோ சீஸன் களைகட்டிக் கொண்டிருந்தது. ஐஸ் பாக்ஸில் பியர் பாட்டில்கள் சில்லேற்றிக் கொண்டிருந்தன. கிட்டத்தட்ட அனைவரும் வந்து விட்டனர்.

லில்லியை ஒரு கேக் வெட்டச் சொல்லி பணித்தனர். லில்லி கேக் வெட்டி முடித்ததும் பார்ட்டி ஆரம்பமானது.பார்ட்டி ஓடிக்கொண்டு இருக்கையிலேயே, இவர்களுக்குள் விதவிதமான விளையாட்டுகள் வைத்து ஜாலி செய்து கொண்டு இருந்தனர். சின்னச் சின்ன ஜோக்குக்கெல்லாம் ஹோவென்று கூச்சல், யாரேனும் செல்ஃபி எடுத்தால் மற்றவர்களும் ஓடி வந்து ஒட்டிக்கொண்டு நின்றனர். அந்த அலுவலகத்தில் வேலை செய்யும் வருண் அடிக்கடி ஷமியின் மீது ஒட்டிக்கொண்டு போஸ் கொடுத்தான்.

ஆரம்பத்தில் ஷமி கண்டு கொள்ள வில்லை. அவன் அடிக்கடி செய்யவும் சற்று துணுக்குற்றாள். ஒரு ஃபோட்டோ எடுக்கையில் அவனது கையை சுதந்திரமாக ஷமியின் தோளில் போட்டுக்கொண்டான். அவனது தலையையையும் ஷமியின் தோளுக்கருகே வைத்துக்கொண்டான்.

ஃபோட்டோ எடுக்கப்பட்டு உடனே ஃபேஸ்புக்கிலும் இன்ஸ்டாகிராமிலும் பதிவேற்றப்பட்டது. ஷமி டேக் செய்யப்பட்டாள்.

## 23

பெண்களுக்கு காக்டெயில் செய்து கொடுக்க பயங்கரமாக மெனக்கெட்டான் வருண். வோட்கா, ஒயிட் ரம், எலுமிச்சை, உப்பு, புதினா போன்ற ஐட்டங்களை கலக்குவதில் பிஸியாக இருந்தான். ஆரஞ்சு சுளைகளை இன்னொருவன் வருணுக்கு உரித்துக் கொடுத்துக் கொண்டு இருந்தான். அங்கே இருக்கும் எல்லா மகளிருக்கும் வருண் சரக்கு சப்ளை செய்து கொண்டிருந்தாலும், ஷமித்ராவிற்கு மட்டும் கொஞ்சம் எக்ஸ்ட்ரா எஃபர்ட் எடுத்துக்கொண்டான்.

ஷமித்ரா தோழிகளுடன் சேர்ந்து 2 காக்டெயில்கள் முடித்து இருந்தாள். தண்ணி அடிப்பது போல வாய் கசக்கவில்லை. குடிப்பது கடினமாகவும் இல்லை. நல்ல சுவையுடன் மெல்லமாக இறங்கியது காக்டெயில்.

இரண்டு ரவுண்ட் முடிந்த நிலையில் ஷமித்ராவிடம் மைக் கொடுத்து பாடச் சொன்னார்கள். மையா மையா பாடலை சிரத்தை எடுத்துப் பாடினாள். மற்றவர்கள் அனைவரும் கைதட்டியும் விசில் அடித்தும் உற்சாகப் படுத்தினர். பாடல் பாடி முடித்ததும் வருண் ஓடி வந்து ஷமித்ரா அருகே நின்று, புதிதாகக் கலந்த காக்டெயிலை ஷமித்ராவுக்கு வழங்கினான். போட்டோ எடுத்தனர். இப்போது ஷாமியானாவைச் சுற்றியும் கலர் கலர் விளக்குகள் எரிந்து அந்த இடத்திற்கே குதூகலமான ஒரு உணர்வைத் தந்து கொண்டிருந்தது.

ரெஸார்ட் ஆட்கள் உணவுகளை கொண்டு வந்து டேபிளில் வைக்க ஆரம்பித்து இருந்தனர்.

விளையாட்டுகள், கலை நிகழ்ச்சிகள் முடிந்ததும், இப்போது ஃபேஷன் வாக் என அறிவிக்கப்பட்டது. போதை கொடுத்த உற்சாகத்தில் ஷமித்ரா மார்பை தூக்கி வைத்துக்கொண்டு இடையை ஆட்டியபடி ஒயிலாக நடந்து வர விசில் சத்தம் கடல் சத்தத்தை கிழித்துக்கொண்டு கடல் காற்றில் கரைந்தது.

வசுமதி, நிர்மலா மற்றும் சில பெண்களும் அதே போல ஸ்டைலாக நடந்து வர முயற்சித்தனர். பெரிதாக எடுபடவில்லை. இதில் நிர்மலா கொஞ்சம் அதிகம் குடித்து இருந்ததால் போதையில் கால்கள் தடுமாறியது. அவள் நடந்து முடித்ததும் ஒருவன், "ஆர் யூ ஓகே," என்றபடி அவளை கைத்தாங்கலாக அழைத்துச் சென்று நாற்காலியில் அமர வைப்பது போன்ற பாவனையில் நிர்மலாவை மெதுவாக அணைத்தான். இடுப்பைச் சுற்றி கை போட்டபடி, சிற்றின்பம் கண்டான். உடற்சூடு மட்டும் நிர்மலாவுக்கு தெரிந்தது. எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டுமா ? வேண்டாமா ? என்றே புரியவில்லை.

அனைத்து ஆண்களும் நாகரீகமாகவும், பெண்களுக்கு பாதுகாப்பு போலவும் கேரிங்காகவும் நடந்து கொண்டாலும், வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் தொட்டுப் பேசுவதிலும் ஃபோட்டோ எடுக்கும்போதெல்லாம் ஒட்டிக்கொள்வதிலும் குறை வைக்கவில்லை.

போதை அதிகம் ஏறியது போல தெரிந்த பெண்களுக்கு உதவுவது போல தடவவும் செய்தார்கள். எப்படியோ... ஏதோ சத்தியத்துக்கு கட்டுப்பட்டிருப்பது போல், ஒருவன் தடவச்செல்லும் பெண்ணை இன்னொருவன் போட்டிக்கு தடவ செல்லாமல் ஒற்றுமை காத்தனர்.

இதில் தண்ணி அடிக்காத ஆண்களும் பெண்களும் இருந்தனர். இவர்களுக்கு அரங்கேறும் சின்னச் சின்ன சில்மிஷங்கள் தெரிந்தே இருந்தன. இருந்தாலும் பெரிதாக அலட்டிக் கொள்ளாமல் இவர்களும் கூத்தில் இரண்டறக் கலந்தனர்.

மூன்று ரவுண்ட் முடித்திருந்தாள் ஷமித்ரா. போதுமா இன்னொரு ரவுண்ட் குடிக்கலாமா என கண்ணை மூடி தன்னைத்தானே கேட்டுக்கொண்டாள். சுத்தமாக போதையே இல்லாதது போலத்தான் இருந்தது. இன்னொரு ரவுண்ட் குடிக்கலாம் என்று முடிவெடுத்த போது, சாதாரணமாகத் தட்டுவது போல இடுப்பில் யாரோ தட்டுவது தெரிந்தது. வருண்தான். கையில் ரெடியாக இன்னொரு ரவுண்ட் கலந்து வைத்திருந்தான்.

இதுவரை தோளில் தட்டி பேசினான். தலையில் தொட்டு அழைத்தவன் இப்போது இடுப்பில் கேஷுவலாக தட்டுகிறான். தண்ணி அடித்தாலே பெண்களை ஆண்கள் ஈஸியாக எடுத்துக் கொள்கிறார்கள். தண்ணி அடிக்காத போது பெண்ணின் விரல் தொட்டுப் பேசத் தயங்குபவன் கூட, அதே பெண் தண்ணி அடிக்க ஆரம்பித்தால் கை, தோள், முதுகு எனத் தட்டித் தட்டி, இடுப்பில் கை வைக்கிறான். இன்னும் கொஞ்சம் சரக்கு உள்ளே போனால் பின்புறத்தை தட்டுவார்கள். ஃப்ரெண்ட்லீ ஹக் என்ற பெயரில் முலை கசங்க இறுக்கி அணைத்துக் கொள்வார்கள். பெண்ணும் சின்னச் சின்ன உல்லாசத்திற்காகவும், அனைவருடனும் சோஷியலைஸ்ட் ஆகவேண்டும் என்றுதான் தண்ணி அடிக்கிறாள். இயல்பில் ஆணை விட மென்மையாக இருக்கும் பெண், போதையிலும் சற்று முந்தியே கண் சொருகக்கூடும்தான். அதை எப்படி அட்வாண்ட்டேஜாக எடுத்துக் கொண்டு எல்லை மீற முடியும் ?

பெண் தண்ணி அடிப்பது என்பது ஆண் கை வைக்க அனுமதி பாஸ் கொடுப்பதாக அர்த்தமாகாது.

இடுப்பில் கை வைத்தது என்னவோ போலிருந்தது ஷமித்ராவுக்கு. கோபமும் வந்தது. ஆனால் சபை நாகரீகம் கருதி அமைதி காத்தாள். நீ தண்ணி அடிச்சுட்டு இருப்பதால் உன் கொட்டையைப் புடிச்சு நான் நசுக்கட்டுமா என மனதிற்குள் கேட்டுக்கொண்டாள்.

வெளியில் அவனைப் பார்த்து சிரித்துக்கொண்டே, அந்த ரவுண்டை வாங்கிக் கொண்டாள்.

ஃபிகர் இன்னைக்கி மாட்டிக்கும் என சப்புக்கொட்டிக் கொண்டே அடுத்த ரவுண்ட் கலக்க ஓடினான் வருண்.

## 24

வருண் போதையில், அதிகமாக மிக்ஸ் செய்ய ஆரம்பித்தான். காக்டெயிலில் ஸ்ப்ரிட்டின் அளவு கூட ஆரம்பித்தது. லெமன் அதிகம் பிழிந்ததால் யாருக்கும் தெரியவில்லை. அதிக அளவு ஸ்பிரிட் கலந்த காக்டெயிலையே அனைத்து பெண்களும் குடிக்க ஆரம்பித்தனர்.

இப்போது டேன்ஸ் ஃப்ளோருக்கு ஏற்பாடு ஆகி இருந்தது. முதலில் சில ஆண்கள் டேன்ஸ் ஃப்ளோருக்கு சென்று ஆட ஆரம்பித்தனர். மற்ற ஆட்களை ஆடிக்கொண்டே, "வாடா... வா மச்சி," என்று அழைத்தபடியே ஆட ஆரம்பித்தனர்.

இருக்கும் சொற்பமான உபகரணங்களைக் கொண்டே ஒருவன் இன்ஸ்டண்ட் டீஜேவாக மாறி இருந்தான்.

தமிழ் டப்பாங்குத்து பாட்டுக்கள் சில ஓடி முடிந்ததும், ஹிந்தி பாட்டுக்கள் ஒலிக்க ஆரம்பித்தன. இப்போது முதலில் வசுமதி நடனமாடும் இடத்துக்கு சென்றாள். நளினமாக ஸ்டெப் போட்டு ஆட ஆரம்பித்தாள். பலாச்சுளையை மொய்க்கும் ஈக்கள் போல ஆடவர்கள் அவளைச் சூழ்ந்துக் கொண்டு கைதட்டியபடியே ஆட ஆரம்பித்தனர்.

நாகரீகமாகத்தான் ஆடிக்கொண்டு இருந்தார்கள். யாரும் அவளை தொடவில்லை, தவறான நடன அசைவுகள் ஏதும் வெளிப்படுத்தவில்லை. ஆனாலும் பெண் என்பதால் உண்டான ஆர்வம் ஆட்டத்தில் வெளிப்பட்டது கண்கூடாகத் தெரிந்தது.

டீஜே ஆங்கிலப் பாடலை ஓட விட்டதும் எல்லோரும் ஷமித்ராவை ஆட அழைத்தார்கள். ஷமித்ரா நான்காவது ரவுண்டை முடித்திருந்தாள். அவளுக்கும் ஆட வேண்டும் என்ற ஆர்வம் தொற்றிக்கொண்டது. லேசாக ஆடிக்கொண்டே சென்று வசுமதியுடனும் நிர்மலாவுடனும் சேர்ந்து கொண்டாள்.

கொஞ்ச நேரம் அவர்களுடன் ஆடி முடித்ததும், பீட் அதிகமானதும் தனியாக ஆட ஆரம்பித்தாள். மிக அழகான ஸ்டெப்ஸ்களை போட்டபடி ஆட ஆரம்பித்ததும் ஆடிக்கொண்டிருந்த பலரும் நிறுத்தி விட்டு ஷமித்ராவை கவனிக்க ஆரம்பித்தனர்.

அழகான ஷார்ட்ஸ் நடனமாடுவதற்கு வசதியாக இருந்தது. சிலர் அவளது ஸ்டெப்ஸ் போடும் கால்களை கவனித்தாலும் சிலர் அவளது வாளிப்பான தொடைகளையும், மென்மையான கெண்டைக்கால்கள் சுழன்றாடுவதையும் கண்களால் விழுங்கிக்கொண்டு இருந்தார்கள்.

காக்டெயில் கலந்து கொண்டிருந்த வருண் தற்காலிகமாக அந்த வேலைக்கு விடை கொடுத்து விட்டு டேன்ஸ் ஃப்ளோர் நோக்கி வந்தான். ஷமித்ரா மட்டும் நடுவில் ஆடிக்கொண்டிருக்க, மற்றவர்கள் ஒப்புக்கு அவளைச் சுற்றி நின்று மெல்லமாக ஆடிக்கொண்டிருந்தது வசதியாகப் போய் விட்டது வருணுக்கு. வருணும் ஸ்டெப்ஸ் போட்டபடியே அந்த கூட்டத்தினுள் நுழைந்து ஷமித்ரா அருகே வந்து ஆட ஆரம்பித்தான். சிறிது நேரத்தில் ஷமித்ராவின் நேர் எதிரே வந்து நின்று கொண்டு ஷமித்ரா போடும் ஸ்டெப்புகளையே போட்டு ஆட ஆரம்பித்தான்.

பாடல் மாற்றப்பட்டதும் மீண்டும் அனைவரும் ஆட ஆரம்பித்தனர். இப்போது ஷமித்ராவின் எதிரே ஆடிக் கொண்டிருந்த வருண், இன்னும் அருகே நெருங்கி ஆட ஆரம்பித்தான். அவனது கைகள் அவ்வப்போது ஷமித்ரா மேல் பட்டது. சமயங்களில் ஷமித்ராவின் பக்க வாட்டில் வந்து தோளை இடித்துக் கொண்டு ஆடினான். எக்கெச்செக்க போட்டோக்கள் எடுக்கப்பட்டன. பகிரப்பட்டன. நிர்மலா போதை அதிகமாகி கீழே விழப்பார்த்தாள். இரண்டு ஆண்கள் அவளைக் கைத்தாங்கலாக அறைக்கு அழைத்துச் சென்றனர். கிட்டத்தட்டத் தூக்கிச் சென்றனர். போகும் வழியில் வாந்தி எடுத்தாள் நிர்மலா.

வசுமதிக்கோ ஷமித்ராவுக்கோ அவளுக்கு என்ன நடக்கிறது என்று தெரியவில்லை. ஜாலியாக ஆடிக்கொண்டு இருந்தனர்.

வருண் ஆடிக்கொண்டு இருக்கையில், ஒரு பீட்டுக்கு சடாரென ஷமித்ராவின் கையை பற்றி சுற்றினான். என்ன செய்வது எனத் தெரியாமல் ஷமித்ராவும் ஒரு சுற்று சுற்றி விட்டு அடுத்த ஸ்டெப் போட ஆரம்பித்தாள். அந்த சுற்றலுக்கு பலரும் கைதட்டியதால் உற்சாகம் பெற்ற வருண், அடுத்த பீட்டில் ஷமித்ராவின் இடையில் கையை நுழைத்து இழுத்துக் கட்டிக் கொண்டான் இறுக்கமாக. ஷமித்ரா நிலைமை உணர்ந்து அவனை தள்ளி விடுவதற்குள் உதட்டில் அழுத்தமாக முத்தம் பதித்து விட்டான். போதையால் ஷமித்ராவால் உடனடியாக தடுத்து ரியாக்ட் செய்ய முடியவில்லை.

அவனைத் தள்ளி விட்டு, பளாரென்று அறைந்தாள். பலரும் அருகில் ஓடி வர, அவனை கீழேத் தள்ளி, செருப்பை கழட்டி முகத்திலேயே அடிக்க ஆரம்பித்தாள். வருணுக்கு மூக்கு உடைந்து ரத்தம் வர ஆரம்பித்தது.

# 25

"நாங்க இப்ப லிவிங் டுகெதர்," என்று சந்தன் சொன்னதும் சர்வேஷ் அப்படி ஒன்றும் அதிர்ச்சி அடையவில்லை. ஒரு செகண்ட் கண்கள் விரித்துப் பார்த்தவன், "கங்கிராட்ஸ் மச்சி," என்றான். சந்தனின் தோள் தட்டி, "கலக்கல் மாப்ள, தில்லுடா உனக்கு," என்று நெஞ்சில் குத்தினான்.

என்னவோ ஏதோ சொல்லப் போகிறான் என்று கொஞ்சம் பதட்டமாக இருந்த சந்தன் ரிலாக்ஸ் ஆனான். "தேங்க்ஸ்டா மச்சி," என்று சொன்னான் .

"பீர் அடிக்கலாமா மச்சி ?" என்று கேட்டு, ஆளுக்கொரு பியர் பாட்டிலை எடுத்துக்கொண்டு பால்கனிக்கு வந்தான் சந்தன். காற்று வெளுத்து வாங்கியது பால்கனியில். மதுவின் போதையும் காற்றின் தூக்கலும் வெகுவான குதூகலத்தை உருவாக்கி இருந்தது. இருவரும் வேகமாக பாட்டிலை அடித்து சியர்ஸ் சொல்லிக் கொண்டார்கள்.

"சொல்லுடா மாப்ள, அப்புறம் எப்படி போய்ட்டு இருக்கு ? எதும் பிரச்சனை இல்லை இல்ல ?" என்றான் சர்வேஷ்.

"பெரிய பிரச்சனை ஏதும் இல்லடா. ஆனா ஃப்ளாட் செக்ரட்டரி கொஞ்சம் சிக்கல் குடுத்தாரு. ஹவுஸ் ஓனர் நாட்டுல இல்ல, அதனால பிரச்சனை ஆறப்போட்டு கிடக்கு," என்றான் சந்தன்.

"இவனுங்களுக்கு இதே வேலை. தன் பொண்டாட்டி அலைபாயறது தெரியாம அடுத்த வீட்ல மூக்கை நுழைப்பானுங்க," என்று சிடுசிடுத்தான் சர்வேஷ். மேலும் "பிரச்சனை பெருசானா சொல்லு மச்சி. என் ஏரியால தனி வீடு பார்த்துக்கலாம். கேட்டா ஹஸ்பண்ட் அண்ட் வொய்ஃபுன்னு சொல்லிக்கலாம். ஒரு தாலி மட்டும் கட்டிக்கிட்டா போச்சு," என்று சர்வேஷ் சொன்னதும்,

"கை குடு மச்சி, இதேதான் ஷமி கிட்ட சொன்னேன், பொய் சொல்ல வேணாம்னு சொல்றாடா. எவ்வளவோ சொல்லிப்பார்த்தேன், கேட்க மாட்டேங்கறா," என்று வருத்தமாகச் சந்தன் சொல்ல,

"நானும் ஸ்ரவந்தியும் வேணா பேசி பார்க்கறோம் மச்சி. அடுத்தவங்க சொன்னா சில சமயம் கேட்கத் தோணும்," என்றான் சர்வேஷ்.

"சரிடா, ஒரு நாள் மீட் பண்ணுவோம். ரொம்ப நாளா பிளான் பண்ணிட்டே இருக்கோம், ஒரு ப்ரோக்ராம் ஃபிக்ஸ் பண்ணிடுவோமா ? அவங்க ரெண்டு பேர்கிட்டயும் டேட்ஸ் கேட்டுட்டு ஒருநாள் போட்டுடலாம்," என்றான் சர்வேஷ்.

"லோக்கல் வேணாம்டா, வெளில எங்காவது போலாம்," என்று சந்தன் சொன்னான்.

"கிட்டன்னா மாமல்லபுரம் அல்லது பாண்டி போலாம். தூரன்னா ஊட்டி அல்லது கூர்க் போலாம்னு தோணுது," என சர்வேஷ் சொல்ல,

"பேசி முடிவு பண்ணலாம் மச்சி," என்று சந்தன் அந்த டாபிக்கை முடித்தான்.

"நீ பண்ணதைப் பார்த்ததுக்கு அப்புறம் நானும் ஸ்ரவந்தியும் ஒன்னா இருக்கலாம்னு தோணுதுடா மச்சி. நீ என்ன சொல்ற ? சரிவருமா ?" என்று அடுத்த கியரை போட்டான் சர்வேஷ்.

"தெரியலடா மச்சி. எனக்கு சரியாச் சொல்லத் தெரியலை. கொஞ்சம் ஃப்ரீடம் போன மாதிரி தோணுது. கொஞ்சம் ஜாலியாவும் இருக்கு. நாம செய்யற அதே வேலையைத்தான் இவங்களும் செய்யறாங்க. நம்ம அம்மா, அக்காவைப் பார்த்து வளந்திருக்கோம். அந்த வேலையை எல்லாம் செய்ய இவங்களுக்குப் பிடிக்கலை.

நாம் சூப்பர் ஸ்டோர் போய் சாமான் வாங்கறமா ? இவங்களும் அதையே வாங்கறாங்க . இதைப்போல வெளி வேலை எல்லாம் செய்யப் பிடிக்குது. வீட்டுக்குள்ள வேலை செய்யப் பிடிக்கலை. ரெண்டு பேரும் வெளி வேலை செஞ்சி என்ன புண்ணியம் ? சமைக்கப் பிடிக்கலை, துவைக்கப் பிடிக்கலை, கழுவப் பிடிக்கலை. இதைப்போல் நிறைய. ஆம்பளைங்க நாம செய்யும் வேலையைத்தான் இவங்களுக்கும் செய்யப் பிடிக்குது. இது எதுல போய் முடியும்னு தெரியலைடா." சந்தன் அலுத்துக்கொண்டான்.

"இதுவாடா பிரச்சனை ? ஒரு வேலைக்காரி வச்சுக்கிட்டாப் போச்சு," என்றான் சர்வேஷ்.

"அவளை சமாளிக்கிறது இவளை சமாளிக்கிறதை விட கஷ்டம்டா," என்றான் சந்தன் சிரித்துக்கொண்டே.

"ஷமித்ரா இப்ப எங்க போயிருக்கா ?" என்று சர்வேஷ் திடீரென கேட்க,

"அவங்க ஆஃபீஸ்ல கலீக்ஸ் கூட கெட் டுகெதர் போயிருக்கா மச்சி," என்றான் சந்தன்.

திடீரென இருவருக்கும் ரொம்ப நேரம் ஃபேஸ்புக் நோண்டவில்லை என்ற ஞாபகம் உந்தித்தள்ள, மொபைலை எடுத்து ஃபேஸ்புக்கை ஓப்பன் செய்தனர்.

அதில் ஷமித்ரா வருணுடன் ஒட்டி நிற்கும் ஃபோட்டோ, வருண் அருகில் டேன்ஸ் ஆடும் போட்டோ என வரிசைக் கட்டி வந்தன.

# 26

போதையில் சந்தனுக்கு சுர்ரென ஏறியது. ஃபோட்டோக்களை உற்றுப் பார்த்தான். ஷமித்ரா படு கவர்ச்சியாகத் தெரிந்தாள். க்ளீவேஜ் அப்பட்டமாக தெரிந்தது. 'ஏன் ஷார்ட்ஸ் போட்டிருக்கிறாள் ?' என்று எரிச்சல் அதிகமானது. 'யார் இந்தத் தடியன் ? இவனருகில் ஏன் ஒட்டிக்கொண்டு நிற்கிறாள் ? ஏன் இவனுடன் இழைந்து இழைந்து நடனமாடுகிறாள் ?' என்று கோபம் தறிகெட்டுத் தலையில் ஏறியது.

சர்வேஷும் அந்த போட்டோக்களைப் பார்த்து விட்டான். ஆனால் பெரிதாக வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அதைப் பற்றி பேசவும் இல்லை. இருவருக்கும் இடையில் நிசப்தம் நிலவியது.

"சரி, படுக்கலாம் மச்சி," என்று சர்வேஷ் கூறியதும், மறுபேச்சு பேசாமல் படுக்கச் சென்றான் சந்தன். படுத்ததும் ஷமித்ராவுக்கு ஃபோன் அடித்தான். ரிங் போய்க் கொண்டே இருந்தது. இரண்டு முறை அடித்துப் பார்த்து விட்டு தூக்கத்திற்கு போனான்.

ஷமித்ரா செருப்பால் அடித்ததும் மிகவும் பரபரப்பாகி விட்டது அந்த இடம். வசுமதி ஓடி வந்து ஷமித்ராவை இழுத்துப் பிடித்தாள். மற்ற ஆண்கள் வருணை தூக்கிக்கொண்டு போய் ஐஸ் க்யூபை மூக்கில் எடுத்து ஒத்தினார்கள். யாரும் பெரிதாக இதைப் பற்றி பேசவில்லை. எல்லோருக்கும் வருண் செய்தது தவறென்று பட்டதால் அந்த சம்பவத்தைக் கடக்க முயன்றனர்.

ஷமித்ரா மட்டும் கொதி நிலையில் இருந்தாள். தான் அவமானப்படுத்தப்பட்டதாக உணர்ந்தாள். இதைப் பற்றி யாரும் பேசாதது மற்றும் வருணை யாரும் திட்டாதது அவளை ரொம்பவே டிஸ்டர்ப் செய்தது.

வசுமதியும், "கண்ட்ரோல் யுவர்செல்ஃப்," என்றுதான் கூறிக்கொண்டு இருந்தாளே தவிர வருண் செய்கையைப் பற்றிப் பேசவேயில்லை.

குடித்துக் கொண்டு, கூத்தடித்துக் கொண்டிருக்கும் பெண்ணை ஒருவன் கிஸ் அடித்தால் என்ன ? என்ற மனநிலையே அங்கு அனைவரிடமும் காணப்பட்டது. மொதல்ல வந்து, கூட ஆடும்போதே இவள் விலகி இருக்க வேண்டியதுதானே ? இவ இடம் கொடுக்காமலா அவன் கிஸ் அடிச்சிருப்பான் ? அவன் சரக்கு கலந்து குடுக்கும் போது எல்லாம் இளிச்சிக்கிட்டு வாங்கிட்டுதான் இருந்தா ? சும்மா வெட்டி சீன் போடுறா பத்தினி மாதிரி, இதெல்லாம் சிலர் கிசுகிசுத்துக் கொண்ட வசனங்கள்.

ஷமித்ரா செருப்பால் அடித்ததையும் சிலர் வீடியோ எடுத்து வைத்திருந்தனர்.

ஷமித்ராவாவது தாமதமாகவாவது எதிர்ப்பு தெரிவித்தாள். அடித்தும் தன் எதிர்ப்பைக் காட்டினாள்.

பல பெண்கள் இது போன்ற சந்தர்ப்பங்களில், தங்களை மீறி தங்கள் உடல் மீது நடக்கும் அத்துமீறல்களை பிடிக்காவிட்டாலும் எதிர்ப்பு தெரிவிப்பதில்லை. ஏனோ தயங்குகிறார்கள். கையைத் தவறான இடத்தில் வைத்தாலும், முத்தமே கொடுத்தாலும், அந்த இடத்தை விட்டு ஒதுங்கி விடுவார்களே அன்றி எதிர்த்து ஏதும் செய்வதில்லை. இதுவே அத்துமீறல் காரர்களுக்கு வசதியாகப் போய் விடுகிறது.

பார்ட்டி களை இழந்தது. அனைவரும் தத்தமது அறைக்குத் திரும்பினார்கள். வசுமதியும் ஷமித்ராவும் பேசிக்கொள்ளாமல் அறைக்குத் திரும்பினார்கள். அறையில் நிர்மலா இல்லை. எங்கே என்று தேடினால், பாத்ரூமில் வாந்தி எடுத்து அலங்கோலமாக அதன் மீதே கிடந்தாள். ஷமித்ரா ஒரு வாளி முழுக்க தண்ணீர் பிடித்து நிர்மலா மீது ஊற்றினாள். ஓரளவுக்கு பாத்ரூம் கிளீன் ஆனது. இன்னொரு பக்கேட் தண்ணீர் ஊற்றப்பட்டது. நிர்மலா நெளிந்தாள்.

அவளைத் தூக்கித் துவட்டிவிட்டு கட்டிலின் மீது போடும் போதுதான் கவனித்தாள், அவளின் மேலாடை ஹூக் எடுக்கப்பட்டு இருந்தது. முழுதாக கழளவில்லை. பாதி கழண்டு இருந்தது. யாரோ ஒருவன் அவளை அறைக்கு கொண்டு வந்து விட்டிருக்க வேண்டும். உடைகளை கழட்டி என்னவோ செய்ய முயற்சித்து இருக்கிறான். நிர்மலா போதை ஏறி வாந்தி எடுத்ததும் அப்படியே விட்டு விட்டு ஓடிப்போய் இருக்க வேண்டும். ஷமித்ராவுக்கு எரிச்சலாக வந்தது. என்னென்ன செய்தானோ ? இது காலையில் நிர்மலாவுக்கு தலைவலியோடே ஞாபகம் வந்தாள் எவ்வளவு அசூயையாக இருக்கும் என்று எண்ணியபடியே தன்னை ரெ.ஃப்ரஷ் செய்து கொண்டாள்.

வசுமதி அப்படியே படுத்து விசித்திரமான போஸில் தூங்கிக்கொண்டு இருந்தாள்.

ஷமித்ரா தன் கைப்பையில் இருந்து மொபைலை எடுத்துப் பார்த்தாள். சந்தனின் இரண்டு மிஸ்ட் கால்கள் இருந்தன.

அறைக்கதவு தட்டப்பட்டது. யாருடா இந்த நேரத்துக்கு என்று திறந்து பார்த்தால், வருண் அவனுடையை நண்பனுடன் நின்று கொண்டிருந்தான்.

"சாரி, மது மயக்கத்தில் அப்படி நடந்து கொண்டேன். இதை மறந்து விடலாம். இதை பெரிது படுத்த வேண்டாம். அலுவலகத்திலும் ரிப்போர்ட் செய்ய வேண்டாம்," எனக் கேட்டுக்கொண்டான்.

"இட்ஸ் ஓகே," என கடுமையாக முகத்தை வைத்துக்கொண்டு ஷமித்ரா சொன்னாள்.

வருண் கையை நீட்டினான், குலுக்க. "குட் நைட்" சொல்லி கதவை சாத்திக்கொண்டாள் ஷமித்ரா.

# 27

வீட்டுக்கு வராமலேயே ஷமித்ரா அலுவலகம் சென்று விட்டாள். தன்னை பிக்கப் செய்து கொள்ளச்சொல்லி சந்தனுக்கு மெசேஜ் அனுப்பி இருந்தாள். சந்தனின் மனம் பொங்கிக் கொண்டே இருந்தது. அலுவலகத்தில் வேலையே ஓடவில்லை. மாலை ஆனதும் முன் கூட்டியே காரை கிளப்பிக்கொண்டு ஷமித்ரா அலுவலகம் சென்றான்.

30 நிமிடத்துக்கு மேல் காத்திருக்க வேண்டியதாகி விட்டது. ரோட்டுக் கடையில் டீ குடித்துவிட்டு இரண்டு சிகரெட்களை ஊதிக்கொண்டு இருந்தான். தொண்டை கரகரத்து எரிச்சல் அதிகமாகியது.

காரில் அமர்ந்து ஸ்டார்ட் செய்து ஏசி போட்டுக் கொண்டான். ஷமித்ரா தூரத்தில் வருவது தெரிந்தது. வெள்ளை சுரிதாரில் வெள்ளை மயமாக நடந்து வந்து கொண்டிருந்தாள். தலை கவனமாக கலைக்கப்பட்டு இருந்தது. லேசான மேக்கப் போட்டு இருந்தாள். வேலை முடிந்து போட்டிருக்க வேண்டும். மிக நளினமாக நடந்து வந்து காரில் ஏறி அமர்ந்தாள்.

சந்தனுக்கு மனதில் இருந்த கோபம் மட்டுப்பட்டு இருந்தது. தன் காதலியை, மனைவியை அழகான உடையில் அழகாக தரிசித்து விட்டாலே ஆண்களுக்குப் பாதி கோபம் போய் விடுகிறது. கணவன் கோபமாக வருகையில், மனைவி அழுக்கு உடையோடும், எண்ணெய் வடியும் முகத்தோடும் இருக்கும்போதுதான் கோபம் இன்னும் பல மடங்கு ஏறிப்போகிறது.

சந்தனுக்கு இப்போது கோபத்தைத் தள்ளிப்போட்டு கொஞ்சலாமா என்று தோன்றியது. கொஞ்ச நேரம் கொஞ்சிவிட்டு, ரொமான்ஸ் செய்து விட்டு சண்டைப் பிடிக்கலாம் என்று கணக்குப் போட்டான்.

இப்போதே சண்டைப் பிடித்தால், ரொமான்ஸ் கட் ஆகி இரவு முழுக்க சண்டை நீண்டு விடும் ஆபத்து இருந்ததை அறிந்து வைத்திருந்தான். தன் ஆள் இவள் என்று பெருமையாக இருந்தது. அந்த பெருமைக்கும், அவனது கோபம் அடங்கியமைக்கும் காரணம்... வேலை முடிந்து வெளியேறும் போது அவள் போட்டுக் கொண்ட 10 நிமிட மேக்கப் தான்.

சண்டையை ஒத்திப்போட்டு கொஞ்சும் மூடுக்கு வந்தான் சந்தன். "டியர் மை செல்லம்," என காரிலேயே ஷமித்ராவின் கன்னத்தை பிடித்துக் கிள்ளினான். "டேய், எல்லாரும் பாக்கறாங்கடா," என ஷமித்ரா சிணுங்க, அப்படியே அவள் மீது படர்ந்து அழுத்தமாக கன்னத்தில் முத்தமிட்டான். அவளிடம் இருந்து மீண்டு தன் சீட்டுக்கு வருவதற்கு முன்பு மென்மையாக உதட்டில் ஒரு முத்தமிட்டுத் திரும்பினான்.

"யாரு பார்த்தா என்னடீ ? என்ன ஆபாசமாவா செய்யறோம் ? ஜஸ்ட் கிஸ்தானே ? மத்தவனுங்க கிட்ட எல்லாம், பாருங்கடா ஷமி என் ஆளு, நாங்க எவ்ளோ நெருக்கமா இருக்கோம்னு காட்டிக்கக்கூட இந்த முத்தத்தை பயன் படுத்தலாம்டீ," என்றான்.

"ஆஃபீஸ் ஸ்டாஃபுங்கடா...ஆஃபீஸ்ல ஒரு மாதிரியா பேசுவானுங்க," என்றாள்.

"சரி, ஒரு நாள் ஆஃபீஸ்ல என்னை கூட்டிட்டுப்போய் இண்ட்ரோ குடுத்துடு. கல்யாணம் ஆகிடுச்சுன்னு பொய் சொன்னாதானே உனக்குப் பிடிக்காது. எண்கேஜ்மெண்ட் ஆகிடுச்சுன்னு சொல்லிடு. மேட்டர் சால்வ்ட். தப்பா நினைக்க மாட்டானுங்க. இந்த பொண்ணை எவ்ளோ லவ் பண்றாருன்னு பெருமையா பேசுவாங்க," என்றான்.

"ம்ம்...ஒரு நாள் செஞ்சிடலாம்," என்றாள் ஷமித்ரா.

கார் ஓடிக்கொண்டு இருந்தது.

"வீட்டுக்கு போயிடலாமா ? இல்ல வழியில எதாச்சும் சாப்பிடறியாடீ," என்றான் சந்தன்.

"இல்லடா, உடம்பு செம டயர்டா இருக்கு. ஆ∴பீஸ் போகாம லீவ் போட்டுடலாம்னு பார்த்தேன். அந்த அளவுக்கு டயர்ட். வீட்டுக்கே போயிடலாம். போய் ஒரு குளியலைப் போட்டுட்டு கொஞ்ச நேரம் தூங்கணும்," என்றாள்.

வீட்டுக்கு வந்து காரை பார்க் செய்து விட்டு, இருவரும் லி∴ப்டுக்காக காத்திருக்கையில் செக்ரட்டரியும் வந்து சேர்ந்தார்.

"ஹாய் சார்," என்றான் சந்தன்.

"ஹாய்," என்று இறுக்கமாக சொல்லிவிட்டு, "ஹவுஸ் ஓனர் நாளைக்கு இந்தியா வந்துடுவாரு," என்றார்.

"ஓ...ஓகே சார், நான் பேசிடறேன்," என்றான் சந்தன்.

இருவரும் வீட்டினுள் நுழைந்தனர்.

"என்னடா, வீட்டுக்குள்ள ஒரே சிகரெட் ஸ்மெல் ? நேத்து யாரையாச்சும் கூட்டிக்கிட்டு வந்து கூத்தடிச்சியா ?" என்றாள் ஷமித்ரா.

"நீ அடிச்ச கூத்தை விடவா ?" என்றான் சந்தன்.

## 28

"நீ அடிச்ச கூத்தை விடவா ?" என்று கேட்ட சந்தனின் இந்தத் தாக்குதலை முற்றிலும் எதிர்பார்க்காத ஷமித்ரா மூட் அவுட் ஆனாள். தன்னை ஏன் கூத்தடித்தாய் என்று தாக்குகிறான் என குழம்பினாள். தானே இவனிடம் ஆறுதல் தேடி வந்தால் இப்படி தலைகீழாக நடக்கிறதே என கடும் வெறுப்படைந்தாள் ஷமித்ரா. எந்த ஆர்கியூமெண்ட்டும் வேண்டாம் என முடிவு செய்தாள்.

"சந்தன், நான் உன்னை ஜாலியாத்தான் கூத்தடிச்சியான்னு கேட்டேன். நீ ஏதோ கடுப்பா அதையே என்னை சீரியஸா கேட்கற. எனக்கு ரொம்ப ட்யர்டா இருக்கு. லைட்டா தலை வலிக்கிற மாதிரி இருக்கு. ஐ நீட் ரெஸ்ட். நான் கொஞ்சம் தனியா படுத்துக்கறேன் ப்ளீஸ்," என்றாள்.

"ஆமாடீ, கண்டவன் கூட நைட்டு முழுக்க அவுத்துப் போட்டு ஆடினா டயர்டாதான்டீ இருக்கும்," என்றான் சந்தன்.

"சந்தன் கொஞ்சம் டீஸண்ட்டா பேசு. எனக்கு தலைவலின்னு சொல்றேன், இப்ப சண்டை வளர்க்காதே."

"ஆமாடீ, என் கூட இருக்கும் போதுதான் தலை வலிக்கும், வயிறு வலிக்கும், மூட் அவுட் ஆகும், தூக்கம் வரும். எல்லா எழவும் வரும். நான் தான் இளிச்ச வாயி. மத்தவன் கூட போனா எல்லாம் போயிடும். நைட் முழுக்கத் தூக்கமே வராது. விடிய விடிய குடிச்சிட்டு கூத்தடிக்கலாம்," என கத்தினான் சந்தன்.

"ச்சீ, வாயை மூடுடா. எவ்வளவு மட்டமா பேசற ? உனக்கு என்னடாத் தெரியும் ? எவனாவது எதாச்சும் சொன்னானா ? என்னை முன்னால அனுப்பிட்டு பின்னால உளவு பார்த்தியா ? கேவலமா இல்ல ? என்ன நடந்துடுச்சுன்னு இந்த குதி குதிக்கிற ?"

"நான் ஏன்டீ உன்னை உளவு பார்க்கணும் ? அதான் உலகம் முழுக்க பரவி சிரிப்பா சிரிக்குதே ? நான் கூட உங்கூட இவ்ளோ நெருக்கமா ஃபோட்டோ எடுத்துக்கிட்டதும் இல்லை. ஃபேஸ்புக்லயும் போட்டது இல்லை. இதைப்பாரு இந்த பன்னாடை கூட எவ்ளோ நெருக்கமா இருக்க பாரு," என்று சொல்லியவாறு தன் மொபைலை அவளின் முகத்துக்கு நேராக நீட்டினான்.

அந்தப் புகைப்படத்தை ஷமித்ரா பார்த்தாள். அது ஒரு குழுவாக எடுத்துக்கொண்ட படம். வருண் வேண்டுமென்றே நெருக்கியடித்து நின்று கொண்டு இருக்கிறான். இப்போது இதை விளக்கி சொன்னால் கேட்க மாட்டான். நம்ப மாட்டான். என்ன சொல்வது என யோசித்தாள். நம்பினால் நம்பட்டும் நம்பாமல் போனால் போகட்டும். பயந்து பயந்து விளக்கம் சொல்லிச் சொல்லியே காலம் முழுக்க ஓட்ட முடியாது. இதற்குத்தானே இப்போதைக்கு கல்யாணம் வேண்டாம் என்று லிவிங் டுகெதராக இருக்கிறோம் . இதிலும் அதே சிக்கல் வந்தால் ? இப்போது விளக்கம் சொல்லி சமாதனப்படுத்தி விடலாம், ஆனால் இதுவே பழக்கமாகிவிடும். சந்தன் முகத்தைப் பார்த்ததும் எரிச்சல் அதிகமானது ஷமித்ராவுக்கு.

"எவனோ என் பக்கத்தில் வந்து நின்னுக்கிட்டா, அதுக்கெல்லாம் நான் பதில் சொல்லிட்டு இருக்கமுடியாது," என்று தெனாவெட்டுடன் கூறிவிட்டு ரூமை நோக்கி நடக்க ஆரம்பித்தாள் ஷமித்ரா.

"ஏய் நான் என்ன கேனையனா ? நான் பாட்டுக்கு கேட்டுக்கிட்டே இருக்கேன், நீ போய்கிட்டே இருக்க ? பதில் சொல்லிட்டு போடி."

"நீ லூசுத்தனமா கேட்கற கேள்விக்கெல்லாம் பதில் சொல்ல முடியாதுடா. எனக்கு எப்ப எதுக்கு பதில் சொல்லனும்னு தோணுதோ அதுக்குத்தான் சொல்வேன், புரியுதா ?," ஷமித்ராவுக்கு உதடு துடித்தது கோபத்தில்.

"ஏய், என்ன இது ? நான் ஏதோ தப்பு பண்ணிட்டு வந்து நிக்கிற மாதிரி பேசிட்டு இருக்க ? நீதான் நைட்டு ஃபுல்லா குடிச்சி இருக்க. நல்லா கவர்ச்சியா டிரஸ் போட்டுக்கிட்டு இருந்த. எவன் கூடவோ நெருக்கமா ஃபோட்டோ. அந்த நாயி பக்கத்துல பாய் ஃப்ரெண்டு கூட ஆடுற மாதிரி ஆட்டம். அதை ஃபோட்டோ வேற புடிச்சு எல்லா ஆன்லைன்லயும் போட்டாச்சு. அவ்ளோதானா ? இல்ல இன்னும் …அதுக்கு மேல ஏதாவது நடந்துச்சா ?"

"அதுக்கு மேலன்னா ? என்னடா மீன் பண்ற ?"

"அதுக்கு மேலன்னா ….அதுக்கு மேல என்ன வேணா நடந்து இருக்கலாம். எனக்கு என்ன தெரியும்."

"நீ என்ன மீன் பண்ணின? அதச் சொல்லுடா முதல்ல."

"நான் ஒன்னும் மீன் பண்ணல. வேற என்ன நடந்துச்சுன்னு கேட்டேன்."

"நீ இண்டர்கோர்ஸ்தானே மீன் பண்ணி கேட்ட ?" இப்போது ஷமித்ராவின் குரல் ஆவேசமாக கேட்டது.

"ஆமாடீ, அதைத்தான் மீன் பண்ணேன், என்னடி இப்போ ?"

## 29

இண்டர்கோர்ஸைத்தான் மீன் செய்தான் சந்தன் என அவன் வாயாலேயே கேட்டதும், ஷமித்ராவுக்கு கோபம் உச்சத்துக்கு எகிறியது. இதுவரை இருவரும் கொஞ்சம் கண்ட்ரோலாக வார்த்தைகளை விட்டுக் கொண்டிருந்தனர். கோபம் ஒரு லிமிட்டைத் தாண்டியதும், கண்ட்ரோல் போய் விடுகிறது. மூளையை யோசிக்க விடாமல் வாயே பேசி விடுவது போல அவ்வளவு வேகமாக வார்த்தைகள் வந்து விழுந்து விடுகின்றன.

"ஆமாடா, அவன் கூடத்தான் படுத்தேன். என்ன இப்போ ?" தெனாவட்டாகக் கேட்டு விட்டு வெறியாகப் பார்த்தாள் ஷமித்ரா.

சந்தனுக்கு சப்த நாடியும் ஒடுங்கிப்போனது. கோபத்தில் கால்கள் வலுவிழந்தது போலானது. கையெல்லாம் நடுங்கியது. "ஆமாடீ, நீ யார் கூட வேணா படுக்கலாம். உனக்குச் சுதந்திரம் இருக்கு. நான் யார் கேட்கறதுக்கு ? எனக்கு ஒரு ரைட்ஸும் இல்லதான். ஆனா நான் எதுக்கு நடுவுல ? நீ தனியா போய் இருந்துகிட்டு எவன் கூட வேணா கூத்தடி. இங்க இருந்து கௌம்பு முதல்ல," என்றான்.

இத்தொடு இவன் உறவே வேண்டாம் என்று முடிவு செய்தாள் ஷமித்ரா. ச்சீ என்ன கேவலமான ஜந்து இவன் ? இவனையா உருகி உருகி காதலித்தோம்? நமக்கு ஒரு பிரச்சனை, டென்ஷன் . இவனிடம் சொல்லி ஆறுதல் தேடி மடியில் படுத்துக்கொள்ளலாம், சமாதானப் படுத்துவான், இனிமையாக நாலு வார்த்தை பேசுவான் என்று பார்த்தால், இருக்கும் டென்ஷனை இருமடங்காக்குகிறானே என்று உச்சகட்ட வெறுப்பில் குமைந்து கொண்டு இருந்தாள் ஷமித்ரா.

"நீ சொல்றன்னு உன் பேச்சை கேட்டு என் வீட்டை காலி பண்ணிட்டு வந்தேன் பாரு, என் புத்தியைத்தான் செருப்பால அடிக்கணும். நம்ம வீடு, நம்ம ரெண்டு பேருக்கும்தான் சொந்தம், ஒரே உரிமைன்னு சொல்லிட்டு, இப்ப உன்னோட கேவலமான சந்தேகத்துனால வந்த பிரச்சனைக்கு என்னை வெளில போகச் சொல்ற. சூப்பர்டா, இப்பவாவது எனக்கு உன்னைப்பத்தி தெரிய வந்துச்சே. இதுவும் நல்லதுக்குதான். நான் இன்னைக்கே கிளம்பறேன். உன்கூட இனிமே இருக்கவே மாட்டேன். அருவருப்பா இருக்கு. நான் போறேன், என் திங்ஸை எல்லாம் எடுத்துக்க 2 நாள் டைம் குடு. வீக் எண்ட்ல வந்து எடுத்துக்கறேன்," என்றாள் ஷமித்ரா.

ஏதோ தவறென்று உறைத்தது சந்தனுக்கு. நாம் என்னவோ தவறு செய்கிறோம். வீட்டுக்குள் நுழைந்து 20 நிமிடங்களில் பெரிய சண்டையாகி அவளை வெளியே போகச் சொல்லி விட்டோம். கொஞ்சம் காத்திருந்து நேரம் கொடுத்துக் கேட்டுப் பார்த்திருக்கலாம் என்று யோசித்தான்.

அடி கொடுத்து விட்டு, அடி வாங்கிய ஆள் தோற்றுப்போன மாதிரி ஆனவுடன் அடித்தவனுக்கு ஒரு பரிதாபம் வரும். மூளைச்சூடு கொஞ்சம் குறையும். சற்றே நிதானமாக மூளை யோசிக்க ஆரம்பிக்கும்.

அதே நிலைமையில்தான் இப்போது சந்தன் இருந்தான். வெளியே போ என்று அவமானப்படுத்துவது போலச் சொல்லி இருக்கக்கூடாது என நினைத்தான். அவள் அடிபட்டது போல வெளியே போகிறேன் என்று சொன்னதும் பரிதாபமாக போய் விட்டது சந்தனுக்கு. ஆனாலும் ஷமித்ரா பார்ட்டியில் அணிந்திருந்த உடையும் வருணுடன் நடனமாடியதும் இன்னும் கொஞ்சம் கோபத்தை மிச்சம் பிடித்து வைத்திருந்தன.

ஷமித்ரா மீது கோபம் இருந்தாலும், இப்போது பரிதாபமும் வந்து சேர்ந்து கொண்டது. இப்போது எங்கே போவாள் ? திடீரென்றுச் செல்ல, தங்க எங்கே இடம் கிடைக்கும் ? பாவமாக இருந்தாலும் போய் சமாதானப் படுத்தவும் ஈகோ தடுத்தது.

அவள் போக மாட்டாள் என்று நினைத்தான். வாய் விட்டு விட்டாளேயொழிய , கொஞ்சம் கொஞ்சமாக அதை மறந்து விட்டு தூங்கி விடுவாள் என்று நினைத்தான்.

பால்கனிக்கு போய் சிகரெட் ஒன்றை பற்ற வைத்தான். பாதி சிகரெட் அடித்துக்கொண்டு இருக்கையில் அறைக்கதவை திறந்து கொண்டு ஒரு சின்ன பின்னால் மாட்டிக்கொள்ளும் பையை மாட்டிக்கொண்டு ஷமித்ரா வெளியே வந்தாள்.

என்ன செய்வது எனத் தெரியாமல் பாதி சிகரெட்டை கையில் வைத்துக்கொண்டு முழித்துக்கொண்டு நின்றிருந்தான் சந்தன். சிகரெட்டை அணைத்து விட்டு, அவளைப் போய் சமாதானப்படுத்தலாமா ? இங்கே இருந்தே பேசலாமா என குழம்பிக்கொண்டு இருக்கையில், "பை.." என்று சொல்லியபடி செருப்பை மாட்டிக்கொண்டு கதவைத் திறந்து கொண்டு வெளியேறி விட்டாள் ஷமித்ரா.

அய்யய்யோ, பாவம் போய் விட்டாளே என்று இருந்தாலும் போனாப் போடி என்றும் திமிராக கடைசி இழுப்பை இழுத்தான் சந்தன்.

# 30

ஷமித்ரா வீட்டை விட்டு கிளம்பி லிஃப்ட்டில் இருந்து வெளியேறியதும், கொஞ்சம் மெதுவாக நடந்தாள். தெருவில் இறங்கி நின்றுக்கொண்டு, கேப் புக் செய்ய வேண்டி மொபைலை நோண்டினாள். சந்தன் பின்னால் வருகிறானா என்று சந்தேகத்துடன் பார்த்துக்கொண்டாள். வந்து சமாதனப் படுத்தினாலும் போகக்கூடாது என்று தெளிவாக இருந்தாள். ஆனாலும் வருகிறானா என்று மனம் மீண்டும் மீண்டும் பார்க்கத் தூண்டியது.

சந்தன் மொபைலை கையில் வைத்துக்கொண்டு காண்டாக்ட்ஸ் லிஸ்டில் ஷமி குட்டி என்று இருப்பதை எடுத்து வைத்துக்கொண்டு வெறித்துப் பார்த்தபடி இருந்தான்.

ஷமித்ரா வேண்டுமென்றே இரண்டு ஆப்ஸிலும் மாறி மாறி கேப்ஸ் பார்த்துக்கொண்டு இருந்தாள்.

சந்தன், ஷமித்ராவை அழைக்கலாமா வேண்டாமா என்ற குழப்பத்தைத் தாண்டி, வாட்ஸப்பில் அவளின் ப்ரொஃபைலை பார்த்துக்கொண்டு இருந்தான். ஆன் லைன் என்று காட்டுகிறதா ? மெசேஜ் அனுப்பலாமா என்று குழம்பிக்கொண்டு இருந்தான்.

கடைசியாக ஒரு முறை திரும்பிப் பார்த்த ஷமித்ரா , வெறுப்பும் கோபமும் தலைக்கேற ஒரு கேபை கன்ஃபார்ம் செய்தாள். டிரைவர் நம்பர் காட்டியது. டிரைவரை அழைத்தாள்.

ஒருவழியாகச் சந்தன், ஷமித்ராவை அழைத்து விட்டான். கால் டயலிங் என்று காட்டியது. காதில் வைத்தான் பிஸி என்றது.

டிரைவருக்கு வழி சொல்லி உறுதிப்படித்தி விட்டு அழைப்பை துண்டித்துவிட்டு, மொபைலை பார்த்தாள். சந்தனின் மிஸ்ட் கால் காட்டியது. ஒரு நிமிடம் கோபமான மனதுக்கு ஒத்தடம் கொடுத்தது போல் இருந்தது. திரும்ப அழைக்கலாமா வேண்டாமா என மனம் ஊசலாடியது. இன்னொரு முறை அவன் தான் அழைக்கட்டுமே என சும்மா இருந்தாள். டிரைவர் ஷமித்ராவை அழைக்க எடுத்துப் பேச ஆரம்பித்தாள்.

சந்தன், மீண்டும் ஒரு முறை அழைத்தான். மீண்டும் பிஸி என்று வந்ததும், எரிச்சல் அடைந்தான். வீட்டை விட்டு கிளம்பிய உடனே யார் யாருக்கோ போன் அடித்துப் பேசுகிறாள் என்று கோபம் வந்தது. இருந்தாலும் எடுத்த வேலையை செய்து முடித்து விடுவோம் என மீண்டும் அடித்தான். ரிங் அடித்தது.

கேப் ஷமித்ரா அருகே சரியாக வந்து நின்றது.

ரிங் அடித்ததும் ஷமித்ரா மொபைலை எடுத்துப் பார்த்தாள். சந்த் பேபி என்று காட்டியது.

அழைப்பை எடுத்தாள். "ஹலோ,' என சிஸ்டமேட்டிக்காக அஃபீஷியலாக சொன்னாள்.

"ம்ம்…சந்தன் பேசறேன்," என்றான் சந்தன்.

"ம்ம்.. சொல்லு"

"இல்ல எங்க இருக்க ?"

"ரோட்ல தான் இருக்கேன், ஏன் ?

"இல்ல எங்க போற ?"

"ஏன் கேக்கற ?"

"ம்ம்…சொல்லேன்..

"என் ஃப்ரெண்ட் தங்கி இருக்கும் ஹாஸ்டலுக்கு போறேன்."

"ஓ…நான் வேணா வந்து டிராப் பண்ணட்டுமா ?

காது அடைத்து , இரண்டு விழிகளும் தெறித்து விடும் அளவுக்கு கோபம் வந்தது ஷமித்ராவுக்கு. "நோ தேங்கஸ்," எனக் கூறி அழைப்பை துண்டித்தவள், கேபில் ஏறிக்கொண்டாள்.

தன் தோழியை மொபைலில் அழைத்தாள். தான் அங்குதான் வருவதாகவும், ஒரு வாரம் வரை தங்க வேண்டி இருக்கும் எனவும், ஹாஸ்டல் மேலாளரிடம் சொல்லி விடு எனவும் கூறினாள்.

"ஒன்றும் பிரச்சனை இல்லை, இடம் உள்ளது. வா …வந்ததும் பேசிக்கொள்ளலாம் எனத் தோழி கூறினாள்.[

நிம்மதியாக இருந்தது ஷமித்ராவுக்கு. சாய்ந்து அமர்ந்து கொண்டாள். சந்தன் ஏதேனும் மெசேஜ் அனுப்பி இருக்கிறானா என்று மொபைலை பார்த்தாள். ஏதும் மெசேஜ் வரவில்லை.

'நைட் பப்புக்கு போகலாமா ?' என ஹாஸ்டல் தோழி மெசேஜ் தட்டி இருந்தாள்.

'ஓகே' என உடனடியாக மெசேஜ் தட்டி விட்டு டென்ஷனை குறைத்து உற்சாகமாக இருக்க முயற்சித்தாள்.

# 31

ஷமித்ரா ஹாஸ்டலில் போய் இறங்கியதுமே வாசலிலேயே நைட் டிரஸ்ஸுடன் நின்று வரவேற்றாள் ஷமியின் தோழி சாந்தவி. ஷமித்ராவை அணைத்துக்கொண்டாள். "வாடி என் செல்லக்குட்டி, என்ன திடீர் விஜயம் ?" என கேட்டவாறே தன் அறைக்கு அழைத்துச் சென்றாள். வழியில், ஹாலில், வராண்டாவில் என எங்கு நோக்கினும் பெண்கள் அரைகுறை ஆடையுடன் மொபைலை காதில் வைத்து சுவற்றில் சாய்ந்து நின்று கொண்டு குசு குசுவென பேசிக்கொண்டு இருந்தனர்.

திறந்து கிடந்த அறைகளில் குப்புறப்படுத்து கால்களை ஆட்டியபடி மொபைலைத்தான் நோண்டிக்கொண்டு இருந்தனர். சில சின்னப் பெண்கள் ஷார்ட்ஸ் போட்டுக்கொண்டு குலுங்கக் குலுங்க விரட்டிப்பிடித்து விளையாடிக் கொண்டு இருந்தனர்.

ஷமித்ரா, சாந்தவி அறைக்குச் சென்றதும் கதவைத் தாழிட்டாள் சாந்தவி. ஒரு படுக்கை காலியாக இருப்பதாகப் பட்டது ஷமித்ராவுக்கு. அதைப் புரிந்துக் கொண்ட சாந்தவி, "ஷமி, இந்த ரூம்ல ஒரு இடம் காலியாத்தான் இருக்கு. இது லக்சூரி ரூம். அதனால யாரும் வரலை," என்றாள்.

ஷமித்ராவுக்கு கொஞ்ச நேரம் நிம்மதியாகப் படுத்து கண் மூட வேண்டும் போல் இருந்தது. ஆனால் சாந்தவி இப்போது கேள்வி மேல் கேள்வி கேட்கப் போகிறாள் என்றும் தெரிந்தது. ஷமி நினைத்து முடிப்பதற்குள், "ஏன் ஷமி திடீர்னு ? என்ன ஆச்சி ?" என்று கேட்டு விட்டாள் சாந்தவி.

"சாந்து அது பெரிய கதை. பொறுமையா சொல்றேன். இப்ப அலுப்பா இருக்கு" என்றாள் ஷமித்ரா.

"நீ தனியா ஒரு ஃப்ளாட்லதானே இருந்த ஷமி ?" என்று சாந்தவி தொடர,

"ஆமாடி," என்றாள் ஷமித்ரா.

"அதான் ஏன் திடீர்னு ஹாஸ்டல்னு யோசிச்சேன்," என்று சாந்தவி இழுக்க ….

"சொல்றேன்னு சொன்னேன் இல்ல," என்று பொய்க்கோபம் காட்டினாள் ஷமித்ரா.

"சரி ஃப்ரீயா இருந்தா இப்பவே கிளம்பு, இல்லன்னா கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துட்டு கிளம்பு. நம்ம வழக்கமா போகும் பப் போலாம். இங்க ரூம்லயே டிரிங்ஸ் இருக்கு. இன்னைக்கு டிரிங்க் பண்ற மூட் வந்துச்சு, தனியா டிரிங்க் பண்ணனுமான்னு யோசிச்சிட்டே இருந்தேன், நீ வந்துட்ட. வெளில போய்ட்டு வரலாம், ரிலாக்ஸா இருக்கும்," என்றாள் சாந்தவி.

"ஏன்டீ தனியா ? உனக்கு தான் அஸ்வின்னு பாய்ஃப்ரெண்டு இருந்தாரே ?"

"இருக்கான்டீ, ஆனா போர். அவன் கூட மட்டும் குடிக்கவேக் கூடாது. ரெண்டாவது ரவுண்ட்ல இருந்து தடவ ஆரம்பிச்சிடுவான். அக்கம் பக்கம் எல்லாரும் நம்மளையே பார்ப்பாங்க. எனக்கு நிம்மதியா குடிக்கவே முடியாது. அவன் கையைத் தட்டி விடுறதிலேயே பொழுது போயிடும். அதனால் அவனை அவாய்ட் பண்ணிடறேன்."

"ஓகே, இப்ப எப்படி இருக்காரு ?"

"ம்ம்.. இருக்கான். ஓவர் குடி. எப்பப் பார்த்தாலும் தடவறதுலயே குறியா இருக்கான். ரொமான்ஸ், லவ் எல்லாம் சுத்தமா குறைஞ்சு போச்சுடீ. கடமைக்கு லவ் யூ, மிஸ் யூ மெசேஜ் அப்பப்ப, அவ்ளோதான். எனக்கும் அவன் கிட்ட இப்பல்லாம் ஃபீலிங்ஸே வர்றது இல்லை."

"சரி, என்னடீ பண்ணப்போற ? பிரேக் அப் பண்ணிக்கப் போறியா ?"

"அதெல்லாம் வேணாம். கொஞ்ச நாள் நான் கண்டுக்காம இருந்தா போதும். வேற எவளாவது சிக்கிடுவா. அப்படி சிக்கலைன்னா, நானே ஏற்பாடு பண்ணிடுவேன்."

"நீயே வா ? என்னடீ சொல்ற ?"

"அவன் இங்க வர்றப்ப எல்லாம், ஒருத்தி ஓவரா வழியிறா. அவ நம்பரை இவன் கிட்ட காட்டி விட்டா போதும், ரெண்டும் பத்திக்கும். எப்படியாவது போய் ஒழியட்டும் , நம்மளை விட்டாப் போதும்.

"ஏய் ...இவ்ளோ ஈசியா சொல்ற ? வேற யாரையாச்சும் லவ் பண்றியா ?"

"ச்சே ச்சே லவ்வா ? அதெல்லாம் ஒரு மண்ணும் கிடையாது. ஆஃபீஸ்ல ஒருத்தன் வந்திருக்கான், இண்ட்ரஸ்ட்டிங்கா இருக்கான். அவ்ளோதான். இன்னும் கமிட் ஆகலை."

"ம்ம்ம்...நடத்து நடத்து," என்று சிரித்தாள் ஷமித்ரா.

"உன் கதையை சொல்ல மாட்டேன்னு சொல்லிட்டு என் கதையை தெளிவா கேட்டு தெரிஞ்சிக்கோ," என்று குத்திக்காட்டினாள் சாந்தவி.

இருவரும் கிளம்பி , கேப் புக் செய்து கொண்டு அந்த பிரபலமான பப்புக்கு சென்றனர்.

சந்தனுக்குத் தெரியும், ஷமித்ரா, சாந்தவி ஹாஸ்டலுக்குத்தான் சென்று இருப்பாள் என்று. எதற்கும் ஒரு முறை ஷமித்ரா மெய்ல் ஐடிக்குள் புகுந்து அவளின் கேப் பில்லை செக் செய்து உறுதிப்படுத்திக்கொண்டு, சாந்தவியின் ஹாஸ்டலை நோக்கிக் காரை செலுத்தினான்.

சர்ப்ரைஸாக சென்று ஷமித்ராவை சமாதானப்படுத்தலாம் என்பது எண்ணம்.

ஹாஸ்டலில் விசாரித்தான். சாந்தவியும் ஷமித்ராவும் வெளியில் சென்றிருப்பதாகச் சொன்னார்கள்.

# 32

ஷமித்ராவும் சாந்தவியும் பப்புக்குள் நுழைந்தனர். கொஞ்சம் காஸ்ட்லியான பப்தான்.
ஆனால் என்ன செய்வது ? சென்னையில் பெண்கள் குடிப்பதற்கான இடங்கள் குறைவு. நாகரீகமாகவும் பாதுகாப்பாகவும் பெண்கள் குடிக்க இருக்கும் இடங்கள் 5 ஸ்டார் ஹோட்டல்கள். இவற்றை விட்டால் இருக்கும் நாகரீகமான பப்களை விரல் விட்டு எண்ணி விடலாம்.

டாஸ்மாக் பார்களில் ஆண்கள் மட்டும்தான் குடிக்க முடியும் என்று சட்டம் ஏதும் இல்லையெனினும் அங்கே ஆயாக்கள் மட்டுமே அவ்வப்போது தில்லாக சென்று சரக்கு வாங்கவும் குடிக்கவும் செய்கின்றனர். மேல் தட்டு பெண்களுக்காவது அட்லீஸ்ட் பப்கள் உள்ளன. நடுத்தர வர்க்க மற்றும் ஏழை பெண்கள் பாடுதான் திண்டாட்டம். எப்போதாவது தோழி வீடு, பிறந்த நாள் கொண்டாட்டம் அல்லது வெளியூர் சென்று அறை எடுத்துத் தங்கும்போதுதான் வாய்ப்பு வாய்க்கிறது.

ஹாஸ்டலில் இருக்கும் பெண்கள் ஜாலியாக குடிக்கிறார்கள். ஆனாலும் அறைக்குள் அடைந்துக் கிடந்து குடிப்பது போர் அடிக்கும்போது இதைப்போல பப்புகளுக்கு வந்து விடுகின்றனர். பகலில் பப்புக்கு வரும் பெண்கள் ஜாலிக்காகவும், கொண்டாட்டமாக இருக்கவும் வருகின்றனர். இரவுகளில் வரும் பெண்கள்தான் வேலை களைப்பு அல்லது சோகத்தை போக்க வருகின்றனர். கெத்தாக அமர்ந்து கொண்டு அனைத்து ஆண்களையும் சைட் அடித்துக் கொண்டிருக்கும் பேரிளம் பெண்களின் கேட்டகிரி தனி.

மூவரும் அமரக்கூடிய மேஜையை ஒதுக்கிக்கொடுத்தார் சிப்பந்தி. சோஃபா நல்ல வசதியாக இருவரையும் உள்வாங்கிக் கொண்டது. டிரிங்ஸ் ஆர்டர் செய்து விட்டு , கொஞ்ச நேரம் இருவரும் சோஃபாவில் புதைந்தே கிடந்தனர். பேசிக்கொள்ளவில்லை.

டிரிங்ஸ் வந்ததும் இரண்டு சிப் இறக்கினார்கள். வெது வெதுப்பாக உள்ளே இறங்கிய திரவம் சின்ன மலர்ச்சியை உண்டு பண்ணியது. மலர்ச்சியோடு மீண்டும் ஒரு சிப் அடிக்க, வெது வெதுப்பு இப்போது தொண்டை, வயிறு தாண்டி மூளையைச் சேர்ந்திருந்தது. இப்போது மலர்ச்சித் தாண்டி புத்துணர்ச்சியை உணர ஆரம்பித்தனர். இருவரும் ஒரே நேரத்தில் புதைந்திருந்த சோஃபாவை விட்டு எகிறி சோஃபா நுனிக்கு வந்தனர். இரண்டு கைகளையும் மேஜை மேல் ஊன்றியபடி பேசுவதற்கு தயார் ஆனார்கள். கிளாசை எடுத்து மீண்டும் ஒருமுறை சியர்ஸ் சொல்லிக்கொண்டு சிப்பினார்கள்.

பப்பில் கூட்டம் முக்கால்வாசி இருந்தது. ஜோடியுடன் அமர்ந்திருக்கும் பெண்களை விட தனியாக அமர்ந்திருக்கும் பெண்களின் மீது ஆண்களின் பார்வை வருடியபடியே இருக்கும். லோக்கல் ஆட்கள் பெண்களை அப்பட்டமாகப் பார்ப்பார்கள். இங்கே ஹை க்ளாஸ் பப்பில் பார்க்காதது போல பார்ப்பார்கள், அவ்வளவுதான். ஆனால் ஒரு நொடி கூட பார்வையால் வருடாத நொடி இருக்காது. ஒரு செகண்டில் பார்க்கும்போது அந்தப் பெண்ணின் பார்வை சந்தித்து விட்டால், அதற்குள் பலதரப்பட்ட சிக்னல்கள் கண்கள் மூலமாக பறக்கும். சிரித்து விட்டால், இல்லையில்லை, சிரிக்கக்கூட வேண்டாம், சிரிப்பது போல லேசாக உதடுகளை விரிய விட்டால் போதும், எழுந்து அருகே வந்து ஆழம் பார்ப்பார்கள். சில ஆட்கள் நாகரீகமான முறை என்று அவர்களே நினைத்துக்கொண்ட முறையில் வந்து இரண்டொரு வார்த்தைகள் மென்மையாக பேசிப் பார்ப்பார்கள்.

சிலர் இலவச டிரிங்க் ஆ‌ஃபர் செய்வார்கள். சிலர் அந்த டேபிள் மொத்த பில்லையும் தான் கட்டுகிறேன் என பேரரிடம் சொல்வார்கள். என்ன ஒரே பாதுகாப்பு எனில் அத்து மீற முடியாது. இடிக்க முடியாது. கையைப் பிடித்து இழுக்க முடியாது. பௌன்ஸர்கள் இருப்பார்கள். அதிலும் என்ன ஒரு அசௌகரியம் எனில் பப் உள்ளேதான் பௌன்சர்கள் இருப்பார்கள். வெளியே இல்லையே !

சிலர், சில பெண்களைக் குறி வைத்து விடுவார்கள். அந்த பெண்கள் குடித்து முடித்து வெளியே சென்றதும் பின் தொடர்வார்கள். வாகனம் இல்லையெனில் லி‌ஃப்ட் கொடுக்க முன் வருவார்கள். வீட்டையோ ஹாஸ்டலையோ தெரிந்து கொள்வார்கள். நடுவழியிலேயே மடக்கி தொல்லை கொடுப்பவர்களும் உண்டு. அதுவும் இரவில் பப்பை விட்டு வெளியே கிளம்பினால் பெண்கள் படு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஏனெனில் பப்களில் ஆண்களுக்கு ஏறியிருக்கும் போதை, இன்று இரவே ஒரு பெண்ணைத் தூக்கி படுக்கையில் வீழ்த்து என கட்டளை இட்டுக்கொண்டிருக்கும்.

ஷமித்ராவும் சாந்தவியும் குடிக்க ஆரம்பித்த சில நிமிடங்களிலேயே பல கண்கள் மொய்த்து மொய்த்து விலகின. லாஸ்ட் ரவுண்ட் என முடிவு செய்த ஒரு டேபிள் இன்னொரு ரவுண்ட் ஆர்டர் செய்தனர். ஷமித்ரா அமர்ந்திருந்த மேஜைக்கு 3 மேஜை தள்ளி வலப்புறமாக அமர்ந்திருந்த மூன்று பேர் கொண்ட குழு ஷமித்ரா மீதும் சாந்தவி மீதும் கண் வைத்தனர்.

"நைட் எப்படியும் தேத்திடலாம்டா மச்சி," என்றான் குழுத் தலைவன்.

# 33

இளைஞர்களின் பார்வை மெதுவாக ஷமித்ராவையும் சாந்தவியையும் மொய்த்துக்கொண்டிருக்க, இருவருக்கும் ரவுண்ட்ஸ் ஏறியதால் ஹை மைண்ட்செட்டிற்குச் சென்றார்கள். கூட்டத்தில் குடித்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணிற்கு தலை சாய்ந்து விட்டது. தலை சாய்ந்து விட்டால் ஆணுக்கும் பெண்ணுக்கும் பெரிய வித்தியாசமில்லாமல் போய் விடுகிறது. அந்தப் பெண் கத்த ஆரம்பித்தாள். அவளுடன் குழுவாக வந்திருந்தவர்கள் அவளை அடக்க முயற்சி செய்தனர். அவள் ஒரு நிலையிலேயே இல்லை. "என்னாங்கடா பெரிய மசிராட்டம்…….." என்று ஆரம்பித்து கெட்ட வார்த்தைகளை இரைக்க ஆரம்பித்தாள்.

நல்ல நாகரீகமாக உடையணிந்த அல்ட்ரா மாடர்ன் பெண்தான். நளினத்தோடு அணிந்திருந்த ஆடைகள் நளினத்திற்கு விடை கொடுத்து விகாரமாக ஆனது. நவீன ரக பெண்களின் ஆடைகள் கம்ஃபார்ட்டுக்கு குறைந்த முக்கியத்துவமும் , ஸ்டைலுக்கும் அழகை தூக்கி காட்டுவதற்கு அதிக முக்கியத்துவமும் கொடுக்கின்றன. இந்த வகை ஆடைகளில் அதீத கவனத்துடன் இருந்தால் மட்டுமே அழகு மிளிரும். கவனம் பிசகினால் அருவருப்பாகிவிடும். அதிலும் குடித்து விட்டு நளினம் தொலைத்து கத்துகையில் ராட்சஸி போல ஆகி விடுகிறது. பெண்மையின் இந்தக் கோலம் யாருக்கும் கலக்கத்தை உண்டாக்கி விடுகிறது. அவளுடன் வந்திருந்த அவளின் பாய் ஃப்ரெண்டுக்கு அவமானமாக போய் விட்டது. அவளை கேர் செய்வதற்கு பதில் சிடுசிடுக்க ஆரம்பித்தான். மற்றவர்களுக்கும் என்ன செய்வது என்று தெரியவில்லை. அவள் சேரில் இருந்து இறங்கித் தரையில் அமர்ந்து கொண்டாள். அவளது உள்ளாடைகள் அலங்கோலமாக வெளியே தெரிந்தது. அவள் மினி ஸ்கர்ட் போட்டு இருந்ததால் அவளது நிலை இன்னும் மோசமாக காணப்பட்டது. வாந்தி எடுப்பது போல செய்கை செய்து கொண்டே தரையில் படுக்க எத்தனித்தாள்.

அவளின் குழுவில் ஆண்களும் இருந்தனர், பெண்களும் இருந்தனர். ஆண்கள் கையை பிசைந்து கொண்டிருக்க, பெண்கள் அவளுடன் மல்லுக்கட்டிக்கொண்டு இருந்தனர்.
மற்ற பெண்கள் அளவான போதையில் இருந்ததால் நளினமாகத்தான் அவளை சமாதனப்படுத்தவும் தூக்கி அமர வைக்கவும் முயற்சி செய்து கொண்டு இருந்தனர்.

பப்பில் அனைவர் பார்வையும் அந்தக்குழு மீதுதான் இருந்தது. அவளின் பாய் ஃப்ரெண்டு எரிச்சலுடன் ஒரு ரவுண்டை எடுத்து சரக்கென அடித்தான். அதைப் பார்த்தவுடன் ஷமித்ராவுக்கு கோபம் கிளம்பியது. விருட்டென எழுந்தவள் அந்த டேபிளுக்கு அருகில் சென்றாள்.

சென்ற வேகத்துக்கு ஆங்கிலத்தில் கத்தினாள். "இவ்வளவு பேர் இருக்கிறீர்கள். இவளைக் காட்சிப்பொருள் ஆக்கிக்கொண்டு இருக்கிறீர்களா ?"

ஷமித்ரா கத்தியதும் பப் சிப்பந்தி அருகில் வந்து பவ்யமாக நின்று, என்ன செய்வது எனத் தெரியாமல் டிஷ்யூ பேப்பரை நீட்டினான். கீழே கிடந்தவள் தாறுமாறாகக் காலை ஆட்டியதில் பப் சிப்பந்திக்கு ஒரு உதை விழுந்தது. அவன் தடுமாறி மேஜை மீது கையை வைத்து பேலன்ஸ் செய்ய அனைத்து டிரிங்குகளும் கீழே கொட்டின. கீழே கிடந்தவளின் ஸ்கர்ட் முழுவதமாக மேலே ஏறிக்கொள்ள மிகவும் அநாகரீகமாக காட்சி அளித்தாள்.

ஷமித்ரா அவளின் பாய் ஃப்ரெண்டை யூகித்து இருந்தாள். அவனை நோக்கி ஆங்கிலத்தில் திட்டினாள். "உடன் வருபவள் எவ்வளவு குடிப்பாள் ? எவ்வளவு தாங்குவாள் ? என்பது கூடத் தெரியாமல் உனக்கெல்லாம் எதுக்கு கேர்ள் ஃப்ரெண்ட் ? குடி என்று வந்து விட்டால், உனக்கு முட்ட முட்ட குடிப்பதுதான் முன்னுரிமை இல்லையா ?" என எகிறினாள்.

"இங்க ரெஸ்ட் எடுக்க ஏதேனும் ரூம் இருக்கிறதா ?" என்று பேரரிடம் கேட்டாள்.

"ரெஸ்ட் ரூம் இருக்கு," என்றான்.

"ரெஸ்ட் ரூம் இல்லை. ஓய்வெடுக்கும் அறை போல ஏதேனும் உள்ளதா ?" என வினவினாள்.

"இல்லை மேடம்," என்று பேரர் பம்ம,

"உங்க மேனேஜரை கூப்பிடு," என்றாள்.

நொடிகளில் மேனேஜர் வர,

"பெண்கள் மது அருந்தும் இடத்தில் அவசரத்திற்கு ஒரு அறை இருக்க வேண்டும். இங்கே அதைப்போல ஏதேனும் வசதி இருக்கிறதா ?" எனக் கேட்க,

"அது போல ஏதும் இல்லாததால் என் அறையை உபயோகித்துக்கொள்ளுங்கள்" என மேனேஜர் சமயோசிதமாக சொல்ல, "தூக்குங்கள் இவளை. முதலில் அறைக்கு கொண்டு செல்லலாம்," என டீம் லீடர் போல உத்தரவிட்டாள். ஷமித்ராவும் அங்கே இருந்த பெண்களும் தூக்க முயல, அவளைத் தூக்க முடியவில்லை. அவள் அடம் பிடித்தாள். நழுவி நழுவி மீண்டும் அலங்கோலமாக விழுந்தாள்.

இப்போதும் அந்த பாய் ஃப்ரெண்ட் ஏதும் செய்யாமல், "ஷிட் ஷிட்," என்றபடி பல்லைக்கடித்துக்கொண்டு கோபத்துடன் நின்றிருந்தான்.

சற்றே தள்ளி நின்றிருந்த பவுன்ஸர்ஸை அழைத்தாள் ஷமித்ரா. அவர்கள் வந்ததும், "ஆபத்துக்கு பாவமில்லை, இவளைத் தூக்கிக்கொண்டு போய் மேனேஜர் அறையில் விடுங்கள்," என்றதும் பவுன்சரில் ஒருவன் அவளை அலேக்காகத் தூக்கினான். அவள் காதலன் போல, "யூ ஆர் சோ ஸ்வீட்" என முனகியபடி பவுன்ஸரின் கழுத்தை கட்டிக்கொண்டாள். நொடியில் அவள் மேனேஜர் அறைக்கு மாற்றப்பட்டாள்.

"இவளை ரெஸ்ட் ரூம் அழைத்துச் சென்று முகம் கழுவி, இந்த அறையில் விடுங்கள். கொஞ்ச நேரம் படுத்து இருந்தால் தூங்கி விடுவாள். விளக்கை அணைத்து விடுங்கள். தூங்கியதும் காரில் ஏற்றிக்கொண்டு சென்று விடுங்கள்," என்று கூறி விட்டு உடன் இருந்த பெண்களை நோக்கி, "இவளை பாதுகாப்பான இடத்தில் தங்க வையுங்கள். உங்களோடு வைத்துக்கொள்ளுங்கள். எந்தக் காரணம் கொண்டும் இவன் பொறுப்பில் விட்டு விடாதீர்கள்," என்றாள். இவன் என்ற இடத்தில் 'திஸ் புவர் ஆஸ் ஹோல்' என்ற வார்த்தையை உபயோகித்தாள்.

மீண்டும் தன் மேஜைக்கு வந்ததும் சாந்தவி இவளைக் கடிந்து கொண்டாள்.

"உனக்கு எதுக்குடீ இந்த வேலை ?" என்றாள்.

அவளுக்கு பதில் சொல்வதற்குள் ஷமித்ராவின் மொபைல் அடித்தது. சந்தன் தான் அழைத்தது. தொடர்பை எரிச்சலுடன் துண்டித்தாள்.

# 34

சந்தனின் அழைப்பை துண்டித்ததும், மீண்டும் அடித்தது. மீண்டும் துண்டித்தாள் ஷமித்ரா. மீண்டும் அழைப்பு வந்ததும் சைலண்ட்டில் போட்டாள்.

"யாருடீ.. கூப்பிட்டுக்கிட்டே இருக்காங்க ? ஏன் கட் பண்ற ?" என்றாள் சாந்தவி.

"சந்தன் கூப்பிடறான்," என்றாள் ஷமித்ரா.

சந்தனை சாந்தவிக்குத் தெரியும். நேரில் பார்த்ததில்லையேத் தவிர, ஷமித்ரா கூறி இருக்கிறாள். சந்தன் பாய் ஃப்ரெண்ட் என்ற அளவில் தெரியும். லிவிங் டுகெதர் மேட்டர் ஏதும் சாந்தவிக்குத் தெரியாது.

சாந்தவி, ஷமித்ராவின் கல்லூரித் தோழி. வேலைக்குச் செல்லத் தொடங்கிய ஆரம்ப நாட்களில் சாந்தவியுடன் ஹாஸ்டலில் தங்கி இருக்கிறாள் ஷமித்ரா. அதற்குப் பிறகு தனியாக ஷமித்ரா வீடு எடுத்துத் தங்கும் முடிவைச் சொன்ன போது மறுத்தவள் சாந்தவி.

"வீடெல்லாம் எக்ஸ்ட்ரா ப்ரஷர், ரெஸ்பான்ஸிபிலிட்டி. தனியா இருப்பது போல ஃபீல் வரும். ஹாஸ்டல்தான் பெஸ்ட்," என ஹாஸ்டலிலேயே தங்கி விட்டவள். நல்ல ஜாலியான டைப் சாந்தவி. ரொம்ப ப்ராக்டிக்கலான பர்ஸ்னாலிட்டி.

சந்தன் அழைப்பதை சாந்தவியிடம் சொன்னதும், "சந்தன்தானே, எடுத்து பேசேன்டீ, என்ன சிக்கல் ?" என்றாள்.

"இல்ல, இப்ப வேண்டாம்," என்றாள் ஷமித்ரா.

"ம்ம்...எதோ பிரச்சனை. சரி, இப்பவாச்சும் சொல்லு.
ஏன் திடீர்னு ஹாஸ்டல் வந்த ? நீ தங்கி இருந்த வீடு என்ன ஆச்சு ?’’ என்றாள்.

அந்த வீட்டை காலி செய்து விட்டு சந்தனுடன் லிவிங் டுகெதராக ஒரே வீட்டில் இருந்ததையும், சண்டையில் அவன் தன்னை வீட்டை விட்டு வெளியே போகச் சொன்னதையும் தொடர்ச்சியாக கூறி முடித்தாள் ஷமித்ரா.

நடுவே குறுக்கிடாமல் கேட்டுக்கொண்டிருந்த சாந்தவி கடுப்பானாள். "ஏன்டீ, சந்தன் கூட ஒரே வீட்டுக்கு போறதுக்கு முன்னாடி என் கிட்ட ஒரு வார்த்தை சொல்லி இருக்கலாம் இல்ல ? ஏன்டீ இவனுங்களை எல்லாம் நம்பிப் போற ? ஒரு லிமிட் வச்சிக்கத் தெரியாதா ? அவனைத்தான் கல்யாணம் கட்டி வயித்தை தூக்கிக்கிட்டு, புள்ளைய பெத்துக்கிட்டு, அவனுக்கு சமைச்சிப்போட்டு, துணி துவைச்சுக் குடுத்துக்கிட்டு இருக்கலாம்னு முடிவு பண்ணிட்டியா ?" என்று படபடவென பேசிய சாந்தவி, "சாரிடீ உன் ஆளை அவன் இவன்னு பேசிட்டேன். உன்னை வெளிய போன்னு சொன்ன கடுப்புடீ, சாரி எகய்ன்," என்றாள்.

சாந்தவிக்கு ஷமித்ராவை ரொம்பப் பிடிக்கும். இருவருக்கும் பல விஷயங்களில் மாறுபட்ட கருத்து இருக்கும். இருவரும் வெவ்வேறு விதமான பர்ஸ்னாலிட்டி. இருந்தாலும் இருவருக்குள்ளும் நட்பும் அன்பும் அதிகம். ஷமித்ராவை வெளியே துரத்தியதை சாந்தவியால் தாங்க முடியவில்லை. எப்போதும் சாந்தவிக்கு ஆண்கள் மீது பெரிய மரியாதை இருந்ததில்லை. ஒரு லிமிட்டோடுதான் ஆண்களுடன் பழகுவாள். தேவையான போது ஆண்களை பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உடையவள். இதுவரை யாருடனும் எமோஷனல் அட்டாச்மெண்ட் ஆனதில்லை.

சாந்தவி சாரி கேட்டதும்  ஷமித்ரா, "இட்ஸ் ஓகேடீ, கூல்," என்றாள்.

"சரி, வெளியே போகச் சொல்லிட்டு இப்ப ஏன் கூப்பிடறான் ? நைட்டுக்குத் தேவைப்படுதாமா ?" என்று கோபத்தைக் காட்டினாள்.

"எதுக்கு வேணா கூப்பிடட்டும், நான் எடுக்கறதா இல்லடீ," என்றாள் ஷமித்ரா. அதற்குள் பத்துக்கு மேல் மிஸ்ட் கால் வந்து விட்டது சந்தனிடமிருந்து.

"சரி, இப்ப என்ன பண்ணப்போற ? உன் திங்ஸை எல்லாம் எப்ப எடுக்கப் போற ?" என்றாள் சாந்தவி.

"வீக் எண்ட் தான்டீ எடுக்கப் போறேன். எடுத்துட்டு ஹாஸ்டல் வந்துடறேன். கொஞ்ச நாள் இங்க இருந்துட்டு வேற வீடு பார்த்துக்கறேன்," என்றாள் ஷமித்ரா.

"ஏன்டீ, சும்மா சும்மா வேற வீடு ? என் கூடவே இருந்துடு. ஹாஸ்டல் தான் பெஸ்ட். இங்க என்ன குறைச்சல் ? ஜாலியா இருக்கலாம்," என்றவள், "அவன் திரும்ப வந்து கால்ல விழுவான், மனசை மாத்திக்கிட்டு போயிடக்கூடாது ஷமி," என்றாள் சாந்தவி.

"சான்ஸே இல்லை. சந்தன் கூட போகவே மாட்டேன். வெளில போன்னு சொன்னவன் கூட எப்படிடீ போவேன் ? ஆனா எனக்கு ஏனோ ஹாஸ்டல் பிடிக்கலைடீ," என்றாள் ஷமித்ரா.

"அதை அப்புறம் பார்த்துக்கலாம். இவ்ளோ நாள் லிவிங் டுகெதரா இருந்தியே, குழந்தை உருவாகாம இருக்கறதுக்கு என்னடீ பண்ண ?"

"பில்ஸ் எடுத்துகிட்டேன் சாந்து."

"ஏன் நீயே தொடர்ந்து பில்ஸ் எடுத்துக்கணும்? அது ஹெல்தி கிடையாது தெரியுமா ? நிறைய சைட் எஃபக்ட்ஸ் வரும். லாங் ரன்ல நமக்கு நிறைய பிராப்ளம்ஸ் வரும். அவனை காண்டம் போட்டுக்கச் சொல்ல வேண்டியதுதானே ?"

"இல்ல, அது சந்தனுக்கு ஒத்து வரலை. அதான்."

"என்ன ஒத்து வரலை ? இப்படி எல்லாத்துலயும் விட்டுக்கொடுத்துதான்டீ நாம மாட்டிக்கிறோம். சில விஷயத்துல ஆம்பளைங்கக்கிட்ட ஸ்டிரிக்ட்டா இருக்கணும்," என்றாள் சாந்தவி.

இன்னும் சில விஷயங்கள் பேசிவிட்டு பில் செட்டில் செய்தார்கள். போதை இருவருக்கும் நிறைவாக இருந்தது. கேப் புக் செய்து ஹாஸ்டல் வந்து இறங்கினார்கள்.

ஹாஸ்டல் வாசலில் சந்தன் காத்துக்கொண்டு இருந்தான்.

# 35

கேபில் இருந்து லேசாகத் தள்ளாடியபடியே ஷமித்ராவும் சாந்தவியும் இறங்கினார்கள். காத்திருந்த சந்தனை இருவரும் கவனிக்க வில்லை. இருவரும் ஹாஸ்டலுக்குள் செல்வதற்குள், சந்தன் கவனித்து விட்டு ஷமித்ரா அருகில் ஓடி வந்தான். அருகில் வந்ததும் குடித்திருக்கிறாள் என்பது தெரிந்தது. இவ்வளவு நேரம் காத்திருந்து, அவள் வந்ததும் மன்னிப்புக் கேட்டு அழைத்துப் போகலாம் என்றுதான் நினைத்திருந்தான்.

தான் இவ்வளவு நேரம் காத்திருப்பதைப் பார்த்ததும் அவள் எமோஷனலாகிக் கோபம் நீங்கிக் கட்டிக்கொள்வாள் என்று நினைத்து நினைத்துப் பார்த்தபடியேதான் இவ்வளவு நேரம் நின்று கொண்டிருந்தான். புகைத்துப் புகைத்துத் தொண்டை எரிந்து கொண்டிருந்தது. ஆனால் ஷமித்ரா குடித்து விட்டு வந்தது தெரிந்ததும் காதல் பறந்து போய் கோபமும் வெறுப்பும் சடுதியில் தலையெடுத்தன.

கோபத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு, "ஷமி, வா வீட்டுக்கு போகலாம்," என்றான்.

ஷமித்ராவுக்கு சந்தன் இங்கே இவ்வளவு நேரம் நின்று கொண்டிருப்பது தெரிந்ததும் மனம் கொஞ்சம் இளகியது. இளகியதற்கு காரணம் போதையும் ஆகும். ஆனாலும் சந்தன் கடுகடுவென அழைத்த முறை, அவன் வெளியே போ என்று சொன்னதை மீண்டும் நினைவு படுத்திவிட்டது.

முகத்தை கடுமையாக்கிக் கொண்டாள் ஷமித்ரா. லேசான கால்களின் ஆட்டத்தை கட்டுப்படுத்திக்கொண்டு, "நீ கிளம்பு சந்தன். நான் இங்கேயே தங்கிக்கறேன்," என்றாள்.

"ஷமி, சொல்றதைக் கேளு. என் கூட வா. எதுவா இருந்தாலும் காலைல பேசிக்கலாம்," என்ற சந்தன், ஷமித்ராவின் கையைப் பற்றினான்.

"அவதான் போன்னு சொல்றா இல்ல ? ஏன் கையைப் பிடிச்சு இழுத்து பிரச்சனை பண்ற ? கையை விடு இல்ல செக்யூரிட்டியை கூப்பிடுவேன்," என்றாள் சாந்தவி.

அதற்குள் இரண்டு மூன்று பெண்களின் தலை வெளியே தென்பட ஆரம்பித்தது. சந்தன் மடாரென காயப்பட்டான். ஷமித்ரா சாந்தவியை எதிர்த்து ஏதேனும் சொல்வாள் என்று எதிர்பார்த்தான் . ஷமித்ரா ஏதும் சொல்லாததால் காயப்பட்ட சந்தன் ஷமித்ராவின் கையை விடுவித்தான்.

"தோ பாரு, இது எனக்கும் ஷமித்ராவுக்கும் நடுவுல இருக்கும் பிரச்சனை. நீ தேவையில்லாம நுழையாதே, அசிங்கமாயிடும்," என்றான்.

"என்னடா அசிங்கமாயிடும் ? செய்டா, என்ன செய்யறேன்னு பார்க்கறேன்," என்று சாந்தவி எகிறினாள்.

"சாந்தவி, நீ உள்ள போ. நான் சந்தனை அனுப்பிட்டு வரேன்," என்றாள் ஷமித்ரா.

"இல்ல ஷமி, நான் கூட இருக்கேன். இவன் என்ன வேணா பண்ணுவான். வெளில போடின்னு துரத்திட்டு, இப்ப எதுக்கு வந்து நிக்கிறான் ? வேணும்னா துரத்துவான், வான்னா உடனே வந்துடணுமா? நீ என்ன அடிமையா ?" என்று கத்திய சாந்தவி ஷமித்ராவை இழுத்துக்கொண்டு உள்ளே போக எத்தனித்தாள்.

கடைசி நிமிடத்தில் சுதாரித்த சந்தன், பாய்ந்து வந்து ஷமித்ராவைப் பற்றி ஷமித்ரா முன்பு மண்டியிட்டு இரண்டு கைகளையும் பற்றிக்கொண்டான்.

"ஷமி, நீ என்ன வேணாத் திட்டு, அடி. ஆனா கண்டவங்களை பேச வைக்காதே. என்னை மன்னிச்சிடு. கோவத்துல எதோ பேசிட்டேன். அதுக்கெல்லாம் மீனிங்கே இல்லை. சண்டை அப்ப பேசுற வார்த்தைக்கெல்லாம் மீனிங் பார்க்கவே கூடாது. அதுக்கெல்லாம் அர்த்தம் எடுத்துக்கிட்டு இருந்தா எந்த குடும்பமும் நிலைக்காது. என் கூட வந்துடு ஷமி ப்ளீஸ். ஐ லவ் யூ சோ மச் டா குட்டிமா," என்றான்.

ஷமித்ராவுக்கு திகைப்பாகப் போய் விட்டது. "எழுந்திரு சந்தன், மொதல்ல எழுந்திரு," என தூக்கி விட முயன்றாள்.

அதற்குள் வாட்ச்மேன் வந்து விட்டான்.

"இங்க என்ன பிரச்சனை ? எதா இருந்தாலும் தனியா வச்சிக்கோங்க. யோவ், இங்க பிரச்சனை பண்ணிட்டு இருக்காதே. கெளம்பு, இல்லைனா போலீஸை கூப்பிட வேண்டி இருக்கும்," என்றான்.

சில பெண்களும் வெளி வந்து கவனிக்கத் தொடங்கினர். சந்தன் அலுத்துப்போய் மெதுவாக எழுந்தான் .

"இதே நான் உனக்குத் தாலி கட்டிக் கல்யாணம் பண்ணி இருந்தா இப்படி வெளில ஓடி வந்திருப்பியா ஷமி ?" என்று அமைதியாகவும் தீர்க்கமாகவும் கேட்டான்.

"தாலி கட்டி இருந்தா, இன்னும் என்னென்னவோ கொடுமைல்லாம் செய்வீங்கன்னுதான் அவ கட்டிக்கலை," என்று வெடுக்கென்று சொல்லி விட்டு ஷமித்ராவை இழுத்துக்கொண்டு உள்ளே சென்றாள் சாந்தவி.

சந்தன் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு மெதுவாகக் காரை நோக்கி நடந்தான்.

வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த பெண்களில் இருந்த நிகிலாவிற்கு சந்தனை ரொம்பப் பிடித்துப் போனது.

# 36

ஷமித்ராவும் சாந்தவியும் அறைக்குள் சென்றனர். இவர்கள் பின்னால் மற்ற பெண்கள் கிசுகிசுப்பது இருவருக்கும் புரிந்தது. இன்று இரவு முழுக்க ஹாஸ்டல் முழுவதும் இந்தக் கதைதான் ஓடும்.

ஷமித்ரா கொஞ்சம் டிஸ்டர்ப்டாக இருந்தாள். சந்தனை அவமானப்படுத்தி விட்டதாகத் தோன்றியது. போதையில் தெளிவான முடிவு எடுக்க முடியாது என்பது ஷமித்ராவுக்குத் தெரியும். சாந்தவியின் அழுத்தத்தாலும்தான் இப்படி நடந்து விட்டது. சாந்தவி அளவுக்கு மீறி உரிமை எடுத்துக்கொண்டதாக ஷமித்ரா நினைத்தாள். சாந்தவியின் குறுக்கீடு இல்லையென்றாலும் தான் சந்தனுடன் போயிருக்க மாட்டேன் தான், ஆனால் நாகரீகமாக மறுத்துப் பேசி அனுப்பி இருப்பேன் என மனதுக்குள் பேசிக்கொண்டாள்.

"ஏன்டீ, சோகமா இருக்க ? தண்ணி குடிக்கிறியா ?" என்று கேட்டாள் சாந்தவி.

தளர்வாக சாந்தவி கொடுத்தத் தண்ணீர் பாட்டிலை வாங்கினாள் ஷமித்ரா.

"ஷமி கண்ணு, சோகமா இருக்காதடா. நடந்தது எல்லாம் உன் நன்மைக்குத்தான். ரிலாக்ஸா இரு எல்லாம் சரியாயிடும்," என்று சொல்லியபடி ஷமித்ராவை அணைத்துக் கொண்டாள். முதுகில் தட்டிக்கொடுத்து விட்டு, "டிரஸ் சேஞ்ச் பண்ணிக்கிறியா ?" என்றாள்.

ஷமித்ரா, "ஆமாடீ" என்று சொல்லியபடி தன் இரவு உடைகளை தன் பையில் தேடி எடுத்தாள். வெள்ளை கலரில் ஸ்கர்ட்டும், வெள்ளை கலரில் ஸ்லீவ்லெஸ் ஷார்ட் டாப்ஸும் எடுத்துக்கொண்டு பாத்ரூமிற்குள் நுழையப்போனாள்.

"ஏய், ஏன்டீ இதுக்குப் போய் பாத்ரூம் போற ? இங்கேயே மாத்திக்கோ. நமக்குள்ள என்னடீ கூச்சம்," என்று சொல்லியபடி தன் உடைகளை கழட்டிப்போட்டு விட்டு, ஸ்டைலாக நடந்து கப்போர்டில் தனது இரவு உடைகளைத் தேட ஆரம்பித்தாள் சாந்தவி.

"கூச்சம் இல்லைடீ, இப்படியே பழக்கம் ஆகிடுச்சு," என்று சொல்லியபடி பாத்ரூமுக்குள் சென்று கதவை சாத்திக்கொண்டாள். ரெஃப்ரெஷ் ஆகி வெளியே வந்தாள் . ஃபேஸ் வாஷ் போட்டு முகத்தை நன்கு கழுவியதால், முகத்தில் வழிந்து கொண்டிருந்த போதையும் அடித்துச் செல்லப்பட்டிருந்தது. குடித்து விட்டு குளித்து விட்டால் அது ஒரு தனி போதை. மூளையில் மட்டும் போதை இருக்கும். உடல் முழுக்க வெளிக்காட்டிக் கொண்டிருந்த போதை மறைந்து விடும்.

வெள்ளை இரவு உடையில் அழகு மிளிர்ந்தது. மினி ஸ்கர்ட் போடுவதற்கு ஒரு உடல் வாகு வேண்டும்.அது ஷமித்ராவுக்கு இருந்தது. ஸ்கர்ட் என்றால் முட்டிக்குக் கீழே போகக்கூடாது. அதே போல அநியாயத்துக்கும் மைக்ரோ சைஸில் இருக்கக்கூடாது. முட்டியை விட 5 செண்டி மீட்டர் மேலே இருக்க வேண்டும். நடக்கும்போது அவ்வப்போது முட்டி மறைந்து மீண்டும் தெரியவேண்டும். தொடை அப்பட்டமாக தெரியக்கூடாது.

ஆனால் தொடையின் வாளிப்பின் அழகைக் கோடி காட்ட வேண்டும். மேற்ச்சொன்ன அனைத்து இலக்கணங்களோடும் ஸ்கர்ட் அணிந்து வந்தாள் ஷமித்ரா.

ஷமித்ராவிடம் இன்னொரு நல்ல பழக்கம் இருக்கிறது. இரண்டு நாளைக்கொருமுறை கால்களில் இருக்கும் சின்னச் சின்னப் பூனை முடிகளைக்கூட எலக்ட்ரானிக் ரேஸர் மூலம் எடுத்து விடுவாள். எந்த அளவுக்கு முன் ஜாக்கிரதையான ஆள் என்றால், இரண்டு ரேஸர்கள் வைத்திருக்கிறாள். கால்களிலேயே இந்த அளவுக்கு உஷார் என்றால் மற்ற அழகு நாகரீகம் சம்மந்தப்பட்ட விஷயத்தில் எல்லாம் சொல்லவேத் தேவையில்லை.

ஸ்லீவ்லெஸ் போடுபவர்கள் அழகுணர்ச்சியில் கூடுதல் கவனமாக இருக்க வேண்டும். அப்படி கவனமாக இருந்தால்தான் அழகுக்கு அழகூட்டும். ஸ்கர்ட் லேசாக ஆட, முடிகள் பறக்க அழகு தேவதை போல மென்மையாக நடந்து வந்து கட்டிலில் அமர்ந்தாள் ஷமித்ரா.

சாந்தவி அதற்குள் இன்னொரு ரவுண்ட் கலந்து சிப்பிக்கொண்டு இருந்தாள். 'உனக்கு வேணுமா ?' என கிளாஸை சைகையாலேயே ஆட்டிக்கேட்டாள்.

"வேண்டான்டீ போதும்," என்று சொல்லி விட்டுக் கட்டிலில் படுத்து மொபைலை எடுத்து நோண்ட ஆரம்பித்தாள் ஷமித்ரா. சாந்தவி ரெ·ப்ரஷ் ஆகி வந்து மீதி இருந்த ரவுண்டை முடித்தாள்.

டக்கென விளக்கணைத்து விட்டு ஷமித்ரா பக்கத்தில் படுத்துக்கொண்டாள் சாந்தவி. ப்ளூ டூத் ஸ்பீக்கரில் பீதோவனின் இனிமையான இசையை மெல்லமாக ஓட விட்டாள் சாந்தவி.

விளக்கணைத்ததும் ஷமித்ரா மொபைலை அணைத்துவிட்டு கண்களை மூடிக்கொண்டாள்.

ஷமித்ராவுக்கு படுத்ததும் தூக்கம் வராது. இரண்டு முறையாவது புரண்டு படுக்க வேண்டும். அதிலும் இன்று ஏகப்பட்ட சிக்கல்கள். அனைத்தையும் மனம் அசை போட்டுக் கொண்டிருந்தது.

சாந்தவி, ஷமித்ரா அருகில் நெருங்கிப் படுத்துக்கொண்டு, "என் மேல கோபமாடீ ?" என்று கேட்டாள் .

"அதெல்லாம் இல்லடீ, தூங்குடீ," என்றாள் ஷமித்ரா.

"சாரிடீ," என்ற சாந்தவி, ஷமித்ரா மீது ஒரு காலையும் ஒரு கையையும் போட்டுக்கொண்டு தூக்கத்துக்கு ஆயத்தமானாள். ஷமித்ராவுக்கு யாரேனும் கால் போட்டால் பிடிக்காது. தூக்கமும் வராது. இருப்பினும் உடனே ஏதும் சொல்ல வேண்டாம் எனத் தயங்கி தூங்க முயற்சித்தாள்.

பத்துப்பதினைந்து நிமிடம் இருவரும் ஆழ்த்தூக்கத்துக்கு உள்ளே செல்ல முயற்சித்துக் கொண்டிருந்தனர். ஷமித்ராவின் வயிற்றுப் பகுதியில் போட்டிருந்த கையை எடுத்து வந்து கழுத்தில் போட்டாள் சாந்தவி. ஷமித்ரா அரைத் தூக்கத்திற்கு சென்றிருந்தாள். ஷமித்ராவின் கன்னத்தை தடவிக் கொடுத்தாள் சாந்தவி. கொஞ்ச நேரம் கழித்து லேசாக எழுந்தவள் ஷமித்ராவின் கன்னத்தில் முத்தமிட்டாள்.

ஷமித்ரா விழித்துக்கொண்டாள். "என்னாடீ ?" என்று குழப்பமாகக் கேட்டாள். இதற்கு முன்பும் பல தருணங்களில் சாந்தவி, ஷமித்ராவை முத்தமிட்டிருக்கிறாள்.

"ஒன்னும் இல்லடீ, தூக்கம் வரலை. நீ அழகா தூங்கிட்டு இருந்த அதான்," என்று சொல்லிய சாந்தவி, "நீ தூங்குடீ," என ஷமித்ராவின் கண்களைத் தன் கைகளால் மூடி விட்டு தலையை வருடத் தொடங்கினாள்.

ஏசியின் காற்று பட்டு ஷமித்ரா போட்டிருந்த ஸ்கர்ட் லேசாக அசைந்தாடிக் கொண்டிருந்தது. ஷமித்ராவின் ஷார்ட் டாப்ஸ் கொஞ்சம் மேலேறி அவளின் அழகான உள்வாங்கிய குழைவான வயிறையும், சுழல்காற்று உருவாக்கிய சுவடு போன்ற நாபிக்கமலமும் மெல்லிய ஒளியில் மிளிர்ந்துக் கொண்டிருந்தன.

## 37

ஷமித்ரா அழகாகத் தூங்கிக்கொண்டு இருந்ததையும் அவளின் குழைவான வயிற்றையும் பார்த்த சாந்தவிக்கு, 'ச்சே எவ்வளவு அழகாக இருக்கிறாள்!' என்று தோன்றியது. ஷமித்ரா இப்போது தூங்க ஆரம்பித்து விட்டாள். அவளுடைய மார்பகங்கள் மூச்சு விடுவதற்கு ஏற்றவாறு ஏறி இறங்கிக் கொண்டிருந்தது.

லோ கட் டாப்ஸ் போட்டு உறங்கிக்கொண்டு இருந்ததால் மேலே மென்மையான பகுதி கொஞ்சம் தெரிந்து கொண்டு இருந்தது. அதைப் பார்த்த சாந்தவி தன் மார்பகம் எப்படி இருக்கிறது என குனிந்து பார்த்தாள். பின் ஷமித்ரா போலவே படுத்து மூச்சு விட்டு மார்பகங்களை ஏற்றி இறக்கிப் பார்த்தாள்.

அது அவ்வளவாக திருப்தியாகப் படவில்லை சாந்தவிக்கு. ஷமித்ராவின் மார்பகத்தை வீடியோ எடுத்தாள் சாந்தவி. பின் சாந்தவி படுத்துக்கொண்டு மூச்சை ஏற்றி இறக்கி விட்டு தன்னையே வீடியோ எடுத்துக்கொண்டாள். இரண்டு வீடியோவையும் மாறி மாறி பார்த்தாள். கொஞ்சம் சமாதானமாகத்தான் இருந்தது. இருந்தாலும் ஷமித்ரா மார்பகமே அழகாக இருக்கிறது என்ற எண்ணம் லேசாகக் குடைந்தது. விருட்டென எழுந்து கண்ணாடி முன் நின்று மேலாடையைக் கழட்டி தீவிரமாக கண்ணாடியை நோக்கினாள் சாந்தவி. நிமிர்ந்து நின்று நோக்கினாள். தோளை விரித்து வைத்து நோக்கினாள். இரண்டு கைகளாலும் ஏந்திக்கொண்டு போஸ் கொடுத்துப் பார்த்தாள். கொஞ்சம் திருப்தி வந்தது.

மது போதை கொஞ்சம் கொஞ்சமாக இறங்கித் தூக்கத்தை நோக்கி இழுத்துச் சென்றது. மேலாடையை அணிந்து கொண்டு மீண்டும் கட்டிலுக்கு அருகில் வந்த சாந்தவி பாய்ந்து விழுந்தாள் கட்டிலின் மீது. தலையைத் தூக்கி ஷமித்ராவின் இடையைப் பார்த்தவள் ஷமித்ராவின் வயிறின் மீது தலையை வைத்துப் படுத்தாள். ஷமித்ராவின் தூக்கம் லேசான தொந்தரவுக்கு உள்ளானது. ஷமித்ரா முனகினாள். எழுந்த சாந்தவி ஷமித்ராவின் மார்பில் தலை வைத்து இறுக்கிக் கட்டிக்கொண்டு தூங்க ஆரம்பித்தாள். ஷமித்ரா தூக்கத்தில் முனகினாள். சாந்தவியை விலக்க முயற்சித்தாள். அப்படியே திரும்பிப் படுக்க முயன்றாள். சாந்தவி மீண்டும் ஷமித்ராவை முத்தமிட்டாள். இந்த முறை இரண்டு மூன்று முறை தொடர்ந்து முத்தமிட்டாள்.

விழித்துக் கொண்ட ஷமித்ரா, "என்னாடீ பண்ணிக்கிட்டு இருக்க ? தூக்கம் வருதுடீ," என்று கெஞ்சிய படி மீண்டும் படுத்துக்கொண்டாள். ஷமித்ராவின் கால்கள் மீது தன் காலை போட்டுக்கொண்டும் ஷமித்ராவின் மார்பின் மீது தன் கையைப் போட்டுக்கொண்டும் ஒட்டிக்கொண்டு சாந்தவியும் தூங்க ஆரம்பித்தாள்.

பெண்களுக்குள் கட்டிப்பிடித்தல், முத்தமிடுதல் என்பது மிக மிக சாதாரணமாக நடந்து கொண்டு இருக்கிறது. அது கிராமத்து பெண்களாகட்டும், நகரத்துப் பெண்களாகட்டும், தொட்டுப்பேசுதல், கட்டியணைத்தல், மடியில் படுத்துக்கொள்ளுதல், முத்தமிடுதல் எல்லாம் மிக மிக சகஜமாக இருக்கிறது. ஒரே அறையில் இருவரும் உடை மாற்றிக்கொள்ளுதல், ஒன்றாகக் குளித்தல் என சகஜமாக இருக்கின்றனர். பெண்களுக்குள் இந்த அளவுக்கு நெருக்கம் இருந்தாலும் ஏனோ ஆண்கள் அளவுக்கு நட்பு ஆழமாகவும் இல்லை, நீண்ட நாட்கள் தொடர்வதும் இல்லை.

சாந்தவிக்கு ஷமித்ரா மீது ஆசை, பாசம், நட்பு எல்லாம் இருக்கிறது. ஷமித்ராவை சாந்தவிக்கு ரொம்பப் பிடிக்கும். அதனால்தான் இந்த கொஞ்சுதல், முத்தமிடுதல் எல்லாம். ஆனால் சாந்தவிக்கு ஷமித்ரா மீது செக்ஸ் ஆர்வம் இல்லை. சாந்தவி லெஸ்பியனும் இல்லை. சாந்தவிக்கு அதிக பட்சமாக ஷமித்ராவின் மார்பகத்தில் முத்தமிட வேண்டும் என்று ஆசை. ஆனால் தன்னை லெஸ்பியன் என நினைத்துக் கொள்வாள் அல்லது நட்பை விட்டு விலகி விடுவாள் என்று அதை மட்டும் செய்ததே இல்லை.

பெண்களுக்குள் ஒரு எல்லை இருக்கிறது. அதைத் தாண்டினால் இன்னொரு பெண் தவறாகத் தொடுகிறாள் என கண்டு பிடித்து விடுவார்கள்.

சாந்தவிக்கு தூக்கம் சொக்கிக் கொண்டு வந்ததும் நெகிழ்ந்து படுத்தாள் . ஷமித்ரா, சாந்தவியை ஒதுக்கி விட்டு தாராளமாக படுத்துத் தூங்க ஆரம்பித்தாள்.

"எல்லா கேர்ள்ஸும் பை செக்ஸுவல்தான் மச்சி, லெஸ்பியன் பர்செண்டேஜ் மட்டும் பொண்ணுக்கு பொண்ணு மாறும்," என்று சர்வேஷ் தன் நண்பர்களிடம் ஒரு பார்ட்டியில் ஆரவாரமாகச்  சொல்லிக்கொண்டு இருந்தான்.

"உன் ஆளு ஸ்ரவந்தியும் சேர்த்துதான் சொல்றியா மச்சி ?" என்று வஸந்த் கேட்க,

"அஃப்கோர்ஸ், எல்லாரையும் தான் சொல்ரேன். அதான் நேச்சர்," என்றான்.

நொந்து போய் வீடு திரும்பிய சந்தன் வீட்டில் மது இல்லாததால், வெறுப்புடன் நான்கைந்து சிகரெட் புகைத்து விட்டு மொபைலை சைலண்ட் மோடில் போட்டு விட்டு புரண்டுக் கொண்டிருந்தான். ஏதேதோ தோன்றிக் கொண்டிருந்தது. மனதுக்குள் வீராவேசமாக ஷமித்ராவுடன் சண்டையிட்டுக் கொண்டே இருந்தான். தன்னைத் தானே சமாதனப் படுத்திக்கொள்வான். மனதை அமைதியாக வைத்திருக்க முயல்வான். இரண்டே நிமிடங்கள்தான், மீண்டும் எப்போது ஆரம்பித்தான் எனத் தெரியாது. மீண்டும் ஷமித்ராவுடன் வாக்கு வாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருப்பான். ஆனாலும் வைராக்கியமாகக் கண்களைத் திறக்காமல் புரண்டுப் புரண்டுப் படுத்துக்கொண்டு இருந்தான்.

நித்திகா, சந்தனுக்கு நான்கைந்து மெசேஜ்கள் அனுப்பி இருந்தாள்.

'உன்னை எனக்கு மிகவும் பிடிக்கும். நீ செய்யும் ஒவ்வொரு செயலையும் ரசித்துக்கொண்டே இருப்பேன். மது போதை அதிகமானதால் தான் அன்று பார்ட்டியில் உன்னிடம் தவறாக நடந்து கொண்டேன். முத்தமிட்டதற்கு சாரி' என ஆங்கிலத்தில் மெசேஜ் அனுப்பி விட்டு, ஷமித்ராவுக்கு போய் சேர்ந்து விட்டதா என்று பார்த்துக்கொண்டே இருந்தான் வருண். இதில் முத்தம் என்ற ஆங்கில வார்த்தையில், கிஸ் என்பதை மட்டும் கேப்பிடல் லெட்டரில் அடித்து இருந்தான்.

இரவு இன்னும் இரவாகிக்கொண்டு இருந்தது.

## 38

காலையில் ஷமித்ரா திடுக்கிட்டு விழித்தாள். தான் எங்கே இருக்கிறோம் என்றே முதலில் அவளுக்குத் தெரியவில்லை. சில நொடிகள் குழம்பி நிலவரத்துக்கு வந்தாள். சந்தனுடன் சண்டை, அதைத் தொடர்ந்து மது, அங்கே ஒரு களேபரம் என நேற்று பெரிய நாளாக ஆகிவிட்டு இருந்தது ஷமித்ராவுக்கு. வேலை நாட்களில் மது அருந்தினால் மறுநாள் அதிகாலை ஒரு கில்ட்டி ஃபீலிங்கை கொடுத்து விடும்.

அந்த கில்ட்டி ஃபீலிங்கில் இருந்தாள் ஷமித்ரா. இன்று என்னென்ன செய்ய வேண்டும் என்று மனதுக்குள் ஓட்டிப் பார்த்துக் கொண்டாள். மொபைலை எடுத்துப் பார்த்தாள். சந்தனிடம் இருந்து மெசேஜ் ஏதும் இருக்கிறதா என்றுதான் முதலில் பார்த்தாள். வருணின் மெசேஜை படித்து விட்டு யோசித்தாள். இப்போது அவன் மேல் கோபம் குறைந்து இருந்தது. இட்ஸ் ஓகே என்று பதில் அனுப்பினாள். அதை அந்த நேரத்திலேயே பார்த்த வருண் உற்சாகம் பெற்றவனாக பக்கம் பக்கமாக மெசேஜ் தட்ட ஆரம்பித்தான்.

அவசர அவசரமாகக் கிளம்பியதால் தனக்கான துணிகளை கொஞ்சம்தான் எடுத்து வந்திருந்தாள். இன்று மாலை கொஞ்சம் துணிகளும் உள்ளாடைகளும் வாங்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டே, பரபரப்பாக எழுந்து பாத்ரூமுக்குள் சென்றாள். சாந்தவி இன்னும் தூங்கிக்கொண்டு இருந்தாள்.

கிட்டத்தட்ட இதே நேரத்தில் சந்தனுக்கும் விழிப்பு வந்தது. இரவு அமைதியான தூக்கம் இல்லாததால் கண்கள் எரிந்தன. எழுந்ததும் மனம் படபடப்பாக இருந்தது. உடனே இரு சிகரெட் குடிக்க வேண்டும் போல தோன்றியது. வாயை மட்டும் கொப்பளித்து விட்டு, உடனே ஒரு சிகரெட் பற்ற வைத்துக்கொண்டு பால்கனிக்குச் சென்றான். மொபைலை எடுத்துப் பார்த்தான். ஷமித்ராவின் மெசேஜ் ஏதும் இல்லை என்றதும், "போடீ" என்று சன்னமாக சொல்லிக்கொண்டான்.

நித்திகாவின் மெசேஜ்களை பார்த்ததும் வேக வேகமாக சிகரெட்டை இழுத்துத் தூக்கிப் போட்டு விட்டு சோ.ஃபாவில் வந்து அமர்ந்தான்.

'எப்படி இருக்கிறாய் சந்தன் ?'

'அன்று பார்ட்டி முடிந்ததும் மறுநாள் உன்னிடம் இருந்து மெசேஜ் எதிர்பார்த்தேன்'

'ஆன்லைனில் இருக்கிறாயா ?'

'நாளை மாலை ஃப்ரீயா ? ஒரு கா.ஃபி குடிக்கச் சந்திக்கலாமா ?'

இவ்வளவுதான் மெசேஜ்.

உடனே பதிலளித்தான்.

'மிக்க நலம், நீயும் நலமா ? கொஞ்சம் பிஸி ஆகிவிட்டேன். தாமதத்திற்கு மன்னிக்கவும். மதியம் லஞ்சுக்கே வேண்டுமானாலும் சந்திக்கலாம்.' அனுப்பி விட்டு கொஞ்சம் துள்ளலுடன் பல் விளக்கச் சென்றான். பல் விளக்கிக் கொண்டே வாட்ஸ்அப் மெசேஜ் சத்தம் வருகிறதா என அதே கவனத்தில் இருந்தான்.

சத்தம் கேட்டதும் ஓடி வந்து எடுத்துப் பார்த்தான். 'லஞ்ச் வேண்டாம். பொறுமையாக மாலை கா.ஃபி நேரத்திலேயே சந்திக்கலாம்' என்று இருந்தது. விதவிதமான ஸ்மைலிக்களை பறக்க விட்டு, இதயம் போட்ட எமோஜி ஒன்றையும் குத்து மதிப்பாக அனுப்பி வைத்தான்.

டீ குடித்து விட்டு ஒரு சிகரட் குடித்தால் குளிப்பதற்கு ஒரு உந்துதலாக இருக்கும் என்ற நினைப்புடன் டீ போடுகையில் ஷமித்ராவை மிஸ் செய்தான். டீ போடுவது சின்ன வேலைதான், அதிலும் பிளாக் டீ போடுவது போன்ற சுலபமான வேலை உலகத்தில் இல்லை. இருந்தாலும் அதை ஷமித்ரா போட்டுக் கொடுக்கையில் பல்வேறு விதமான காரணிகள் அதனுடன் சேர்ந்துக் கொள்கின்றன.

டீ போடும்போது ஷமித்ராவின் உடல்மொழி, அதை ஜாக்கிரதையாக எடுத்து வந்து கொடுக்கும் பாங்கு, கையில் கொடுக்கும்போது சிந்தும் புன்னகை, முதல் சிப் குடிக்கையில் ரியாக்ஷனுக்காக எதிர்பார்த்து காத்திருக்கும் அவளின் கண்கள், டீ சூப்பர் எனும்போது அவளின் முகத்தில் தோன்றும் பரவசம், பாதி டீ குடித்துக்கொண்டு இருக்கும்போது பக்கத்தில் நெருங்கி அமர்ந்து கொண்டு டீயை வாங்கி அவளும் ஒரு சிப் குடித்து விட்டு, டீயை மீண்டும் சந்தனிடமே கொடுக்கும்போது அவளை மெல்லமாக அணைத்து கொடுக்கும் ஒரு முத்தம் இவை அனைத்தையும் மிஸ் செய்தான் சந்தன்.

வெறுப்பாக டீ போட்டுக் குடித்து விட்டு, புகைத்து விட்டு, குளித்து ரெடியாகி அலுவலகம் செல்லும்போது செக்ரட்டரி எதிர்ப்பட்டார்.

"ஹவுஸ் ஓனர்தான் ஃபாரின்லேர்ந்து வந்துட்டாரே, பேசிட்டீங்களா சந்தன் ?" என்றார்.

சந்தனுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. 'யோவ் அவளே என்னை விட்டுட்டு போயிட்டா. நானே வெறுப்புல இருக்கேன். காலங்கார்த்தால வேலை வெட்டி எதுவும் இல்லாம இதை வந்து நோண்டிகிட்டு' என்ற எண்ண ஓட்டத்துடன், "இந்த வீக்ல பேசிடறேன் சார்," என்று சொல்லியபடியே கார் பார்க்கிங்குக்கு ஓடினான்.

ஷமித்ரா ரெடியாகிக் கிளம்பும் நேரத்தில் சாந்தவியும் ரெடியாகி, "ஹாஸ்டல்லயே பிரேக்ஃபாஸ்ட் சாப்பிட்டுட்டு போலாம்டீ," என்றாள்.

இருவரும் ஹாஸ்டலிலேயே விசித்திரமான அந்த இட்லியை ஸ்பூனால் பிட்டுப் பிட்டு தேங்காய் சட்னி என்ற பெயரில் வெள்ளையாய் ஓடிக்கொண்டு இருந்த திரவத்தில் ஒத்தி ஒத்தி சாப்பிட்டு முடித்தனர்.

சாந்தவியை பிக் அப் செய்து கொண்டு போய் அலுவலகத்தில் விட அஸ்வின் வந்திருந்தான். ஷமித்ரா கால் டாக்ஸி புக் செய்து கொண்டாள்.

## 39

ஷமித்ராவுக்கு அலுவலகத்தில் வேலை அதிகமாக இருந்தது. எப்போது ஷமித்ரா ஃப்ரீ ஆவாள் என வருண், ஷமித்ராவைச் சுற்றிய வண்ணம் இருந்தான். ஷமித்ரா கண்ணில் படுவது போலவே வளைய வந்தான். மாலை டீ பிரேக்கின் போது ஷமித்ராவிடம் வந்து , "ஐம் சோ சாரி, அன்னைக்கு நான் அப்படி நடந்துட்டு இருக்கக் கூடாது," என ஆரம்பித்தான்.

"வருண், யூ செட் சாரி. ஐ அக்சப்ட்டட் இட். சும்மா அதையே ஏன் சொல்லிக்கிட்டு என்னைச் சுத்திச் சுத்தி வர்றீங்க ? லீவ் இட். இனிமே இதைப்பத்தி பேசிக்கிட்டு என்கிட்ட வந்தீங்கன்னா ஆஃபீஸ்ல ரிப்போர்ட் பண்ணிடுவேன்," என்றாள்.

"சாரி சாரி," என்று கூறியவாறு பின் வாங்கிச் சென்றான்.

அவன் விலகியதும் வேறு ஒருவன் வந்து, "ஷமி எனி ப்ராப்ளம் ?" என்றான்.

"நத்திங்," என்று சொல்லியவாறு பாதி காஃபியை வைத்துவிட்டு விலகிச் சென்றாள்.

சந்தனுக்கும் அலுவலகத்தில் வேலை பின்னி எடுத்தது. காலையில் வந்த உடனேயே நித்திகாவைப் பார்த்து விட்டான். அணுக்கமான புன்னகையை இருவரும் பரிமாறிக்கொண்டு அவரவர் இடத்துக்கு சென்றனர்.

சர்வேஷ் வந்து சந்தனிடம் கொஞ்ச நேரம் மொக்கை போட்டுக் கொண்டிருந்தான். நண்பனின் பண்ணை வீடு கிழக்குக் கடற்கரைச் சாலையில் தனியாக இருப்பதாகவும், சென்னைக்கும் பாண்டிக்கும் நடுவில் இருப்பதாகவும், அவனும் ஸ்ரவந்தியும் செல்ல இருப்பதாகவும் கூறி, "நீயும் ஷமித்ராவும் ஜாயின் பண்ணிக்கறீங்களா ?" என்று கேட்டான்.

சந்தனுக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை. "போறப்ப சொல்றேன்டா," என்றான்.

"மொத்தம் நாலு கப்பிள்ஸ் தங்கலாம்டா. நாம ரெண்டு கப்பிள்ஸ் அது இல்லாம ரெண்டு கப்பிள்ஸ்," என இருவருக்கும் பொதுவான நண்பர்களின் பெயர்களைச் சொன்னான். "நீ கன்ஃபார்ம் பண்ணிட்டா நல்லா இருக்கும்," என்றான்.

"நான் கண்டிப்பா வரேன். ஷமித்ரா அவ ஊருக்கு போகணும்னு சொல்லிட்டு இருக்கா," எனப் பொய்ச் சொல்லி, "கேட்டுச் சொல்றேன்," என்றான்.

மீண்டும் இருவரும் வேலையில் மூழ்கினார்கள்.

சந்தன், ஷமித்ராவின் ஃபேஸ்புக் மற்றும் வாட்ஸப் ப்ரொஃபைலை போய்ப் பார்த்தான். ஏதாவது ஸ்டேட்டஸ் மெசேஜ் மாற்றி இருக்கிறாளா என்று. மாற்றம் ஏதும் இல்லை.

மாலை சர்வேஷிடம் வேறு பொய் சொல்லிவிட்டு, காஃபி ஷாப்பில் சென்று நித்திகாவைச் சந்தித்தான் சந்தன்.

"தேங்க்ஸ் ஃபார் கமிங்," என்று ஃபார்மலாக ஆரம்பித்தாள் நித்திகா.

நித்திகாவையே ஆர்டர் செய்யச் சொன்னான்.

அவள் ஆர்டர் செய்த கோல்ட் காஃபியை குடித்ததும், "எப்படி இருக்கு ?" என்று ஆர்வமாகக் கேட்டாள், என்னவோ அவளே தயார் செய்தது போல்.

"ரியலி ஃபெண்டாஸ்ட்டிக்," என்றவன், "சாரி அன்னைக்கி உங்களை குரூப்ல ஆட் பண்ணினதுக்கு," என்றான். "நோ இஷ்யூஸ். அதனால தானே இன்னைக்கி நாம காஃபி சாப்பிடறோம்," என்று கண் சிமிட்டினாள்.

கொஞ்சம் ஆ◌ஃபீஸ், கொஞ்சம் பர்ஸனல் பேசினார்கள். பர்ஸனல் விஷயங்களில் இருவருமே பொய்யை சகட்டுக்கு பகிர்ந்து கொண்டு இருந்தார்கள். இருவருக்குமான காமன் கிரவுண்ட் சரிவர கிடைக்காததால் தடுமாறினார்கள்.

நித்திகாதான் பேச்சைத் தொடர வேண்டி, "இப்ப நீங்க ◌ஃப்ரீயா ?" என்றாள்.

"◌ஃப்ரீதான்," என்று சந்தன் சொன்னதும், "◌ஃபீனிக்ஸ் மால் போலாமா ?" என்றாள்.

"ம்ம்.." என்று சந்தன் குழப்பமாக ஆமோதித்ததும், "அங்க சின்னதா ஷாப்பிங் பண்ணனும்," என்றாள்.

இருவரும் கிளம்பினார்கள். சந்தனின் காரில் ஏறிக்கொண்டாள் நித்திகா. சந்தன் கியர் போடும்போது அவ்வப்போது நித்திகாவின் கையோ அல்லது தொடையோ தானாக பட்டுக்கொண்டு இருந்தது. அது கொஞ்சம் சுகமாக இருக்கவே, சந்தன் அடிக்கடி கியரை மாற்றி மாற்றி ஓட்டிக்கொண்டு போனான். நித்திகாவின் பர்◌ஃப்யூம் வாசமும் கிறக்கமாக இருந்தது.

ஷமித்ரா வேலை முடித்து சில உடைகள் வாங்கலாம் என ◌ஃபீனிக்ஸ் மாலுக்கு சென்றாள்.

# 40

ஃபீனிக்ஸ் மாலுக்குள் நுழைந்ததும், ஸ்பீடோ ஷோ ரூமுக்கு அழைத்துச் சென்றாள் நித்திகா. ஷமித்ரா மேல் மாடியில் இருக்கும் மேக்ஸில் துணி எடுத்துக்கொண்டு இருந்தாள்.

"ஸ்பீடோ ஷோ ரூம் சென்னையில் இங்கே மட்டும்தான் இருக்கிறது," என்றாள் நித்திகா. இரண்டு செட் நீச்சல் உடைகளும் காகிள்ஸும் வாங்கினாள். பில் போட்டாள்.
சந்தன் பணம் கொடுக்க முற்பட்டபோது மறுத்து விட்டாள். அப்போது சந்தனின் கையைப் பிடித்தாள். மென்மையாக இருந்த நித்திகாவின் கைகளில் ஏசியை மீறி வியர்வை இருந்தது.

"எதாச்சும் ஃபிலிம் போலாமா ?" என்றாள்.

சந்தனும் யோசித்தான். "ஏதும் வேலை இல்லை, போலாமே," என்றான்.

இருவரும் மேக்ஸ் ஷோரூமை தாண்டிச் சென்றனர். ஷமித்ரா உள்ளே துணி எடுத்து டிரையல் பார்த்துக்கொண்டு இருந்தாள். சரியாக மேக்ஸ் ஷோ ரூமை தாண்டும் போது சந்தனுக்கு ஷமித்ரா ஞாபகம் வந்தது. எங்கே என்ன செய்து கொண்டு இருப்பாள் ? நாம் ஏன் இப்போது இவளோடு சுற்றுகிறோம் என்று குழப்பத்துடன் நித்திகாவுடன் சென்று கொண்டிருந்தான்.

ஒரு ஆங்கிலப் படத்துக்கு டிக்கட் இருந்தது. உள்ளேயும் கூட்டம் பெரிதாக இல்லை. படம் இன்னும் போடாததால் சந்தன் எழுந்து போய் பாப்கார்னும் கோக் காம்போவும் வாங்கி வந்தான்.

படம் ஆரம்பித்ததும் படத்தைப் பற்றி சில ஜோக்குகள் அடித்தாள் நித்திகா. அப்போது சந்தன் சீட் பக்கம் சாய்ந்து காதருகில் சொன்னாள். சந்தனும் தன் பங்குக்கு முகத்தை அவள் அருகில் சாய்த்ததில் சில சமயங்களில் கன்னங்கள் ஒட்டிக்கொண்டன. சில நேரங்களில் அவளின் உதடே ஈரத்துடன் சந்தனின் கன்னத்தில் லேசாக வருடின.

சந்தனும் அவ்வப்போது நித்திகாவிடம் ஏதோ சொல்ல நெருங்க அவளும் இவன் அருகே வந்தாள். நல்ல அட்டகாசமான கேசத்தின் மணத்தை உணர்ந்தான் சந்தன். அவளை அப்படியே இழுத்து அவளின் கேசத்துக்குள் புகுந்து கொள்ள வேண்டும் போல தோன்றியது சந்தனுக்கு. நறுமணங்கள் உறவை ஆரம்பித்து வைப்பதிலும், ஒருவரைப் பற்றிய முதல் பிம்பத்தை உருவாக்குவதிலும் முக்கிய பங்காற்றுகின்றன.

சந்தன் படத்தைப் பற்றி ஏதேனும் கூற நித்திகாவின் அருகில் செல்லும் போது, அதற்கென்றே காத்திருந்தவள் போல நித்திகா அருகில் வந்தாள். சந்தன் நித்திகாவின் காதை மிக மிக அருகில் பார்க்க முடிந்தது.
அதில் ரகசியம் சொல்வது போல பேசுகையில், நித்திகா சிரிக்கையில், முகம் குலுங்குவதால் காது சந்தன் உதட்டில் லேசாக பட்டு விலகியது.

இருவரும் ஒன்றும் தெரியாதது போல உரசிக்கொண்டு இருந்தார்கள். ஒரு ஹாலிவுட் சினிமாவுக்குள் நல்ல இந்திய நாடகம் ஓடிக்கொண்டு இருந்தது. "ரொம்பக் குளிருது," என்று நித்திகா லேசாக சந்தன் தோளுக்கருகே சாய்ந்து கொண்ட போது இடைவேளை வந்தது. லேசாக வெட்கமாக ஆகிப்போனது நித்திகாவுக்கு. விலகிக் கொண்டாள்.

இடைவேளை முடிந்து படம் ஆரம்பித்ததும் தயக்கமில்லாமல் சந்தன் மீது சாய்ந்து கொண்டாள். கால் மீது கால் போட்டு அமர்ந்து இருந்ததால், ஒரு கால் சந்தன் அருகில் அந்தரத்தில் ஆடிக்கொண்டு இருந்தது. அவ்வப்போது சந்தனின் கால்கள் நித்திகாவின் பாதங்களில் பட்டு சிலீரென்றது.

இருவரும் ஒவ்வொரு செகண்டையும் தற்செயலாகப் படுவது போல எப்படி பட்டுக்கொள்வது என்ற வேலையில் மும்முரமாக இருந்தார்கள். நித்திகா சந்தன் மீது லேசாகச் சாய்ந்து அமர்ந்து இருந்ததால்
சந்தன் பார்வைக்கு நித்திகாவின் மார்பகங்கள் மெல்லிய இருட்டில் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டு இருந்தது கிளர்ச்சியைத் தூண்டியது. சிரமப்பட்டு அடக்கிக்கொண்டான்.

ஒரு முறை அவளை மிக அருகே அழைத்து காதில் பேசும்போது கட்டுப்பாட்டை மீறி முத்தம் கொடுக்க முனைந்து விட்டான். கடைசி நேரத்தில் உதட்டை இழுத்துக் கொண்டான் எனினும் உதடுகள் பட்டு விட்டன. நித்திகாவுக்கு முத்தம் விழுந்ததா இல்லையா என சரியாகத் தெரியவில்லை எனினும் ஜிவ்வென்று ஆனது . இந்த விளையாட்டு எவ்வளவு நேரம் நீடிக்கும் என இருவருக்கும் சுமையாக இருந்த நேரத்தில் படம் முடிந்தது.

# 41

ஷமித்ரா மேக்ஸ் ஷோ ரூமில் சில துணிகளை எடுத்து முடித்த பிறகு, அடுத்ததாக மார்க்ஸ் அண்ட் ஸ்பென்ஸர்ஸ் சென்றாள். தற்சமயம் அவளுக்கு உள்ளாடைகள் கண்டிப்பாகத் தேவை. ஆனாலும் தன்னிடம் இல்லாத புது டிசைன்ஸ் வந்துள்ளதா என ஆராய்ந்தாள்.

ஷமித்ராவுக்கு இரும்பு வளையம், ஒயர் கம்பி போன்ற ஹார்ட்வேர் சமாச்சாரங்கள் இடம்பெற்றிருக்கும் பிரேசியர்கள் அறவே பிடிக்காது. சாஃப்ட் அண்ட் கம்ஃபர்ட், அதே சமயத்தில் எடுப்பாகவும் அழகாகவும் காட்டும் பிரேசியர்களே அவள் விருப்பம். இயற்கை ஷமித்ராவுக்கு வாரி வழங்கியிருப்பதால் சரியாகத் தன்னுடைய அளவுக்கே வாங்குவாள். 2 இன்ச் எக்ஸ்ட்ராவாக வாங்கி உண்டியல் குலுக்கும் வேலையெல்லாம் கிடையாது.

நார்மலாக வாங்கும் ஸ்டைலில் மூன்றும், பிகினி டைப்பில் ஒன்றும் எடுத்துக்கொண்டாள். வர வர, சொற சொற, லேஸ் வைத்தது, கதவு ஜன்னல் வைத்த பேண்டீஸ் எல்லாம் எடுக்காமல் சாட்டினை ஒத்த மென்மையான துணியால் செய்த, லைட் கலரில் 6 எடுத்துக்கொண்டாள்.

பில்லிங் போகலாமா இன்னும் வேறு ஏதேனும் பார்க்கலாமா என்று யோசித்துக்கொண்டு இருக்கையில் உயர் ரகத்தில் உடையும், உடமைகளும் அணிந்த ஒருவன், ஷமித்ராவிடம் வந்து, "ஹாய்," என்றான் . ஷமித்ராவும் தயக்கமான குரலில், "ஹாய்," சொன்னாள்.

அவன் கையில் ஒரு ஷாப்பிங் பேக் இருந்தது. ஸ்லிம் ஃபிட் ஜீன்ஸ், எட்ஹார்டி க்ளாஸ், அர்மானி வாட்ச், ப்ளாட்டினம் பிரேஸ்லெட் + செயின், க்ளோஸாக டிரிம் செய்யப்பட்ட கன்னங்கள், குறும்பும் பணக்காரத்தனமும் உடலெங்கும் உறைந்துக் கிடந்தது.

இவன் ஹாய் சொன்னால் எந்த பெண்ணும் பதிலுக்கு ஹாய் சொல்லியே ஆக வேண்டும். அந்த கமாண்டிங் அவன் மொத்த பர்ஸ்னாலிட்டியால் வந்தது. என்னதான் மனம், அறிவு என்று பெண்கள் பஜனை செய்தாலும் ஒருவன் சிகப்பாக, பணத்தால் அபிஷேகம் செய்து கொண்டு, பர்ஸ்னாலிட்டியாக வந்து நின்றால் பெண்களிடம் அதற்கான ரெஸ்பான்ஸே வேறு.

பெண்கள் வேண்டுமென்றே இதைப் போன்ற ஆட்களுக்கு பாஸிடிவ்வாக ரெஸ்பான்ஸ் கொடுப்பதில்லை. அவர்களை அறியாமலேயே தோற்றமும், உடையும், மிடுக்கும் ரெஸ்பான்ஸ் கொடுக்கச் சொல்லி இன்ஃப்ளுயன்ஸ் செய்து விடுகிறது.

"ஐ ஹாவ் சம் கிஃப்ட் வவுச்சர். எனக்கு இப்ப தேவைப்படாது. இந்த மாசமே எக்ஸ்பைரி ஆயிடும். இஃப் யூ டோண்ட் மைண்ட் நீங்க யூஸ் பண்ணிக்கிறீங்களா ?" என்றான்.

"ஓ ...தேங்க் யூ. ஆனா எனக்குத் தேவையான பணம் என்கிட்ட இருக்கே. நீங்களே யூஸ் பண்ணிக்கலாமே ?" என்றாள் ஷமித்ரா.

"இல்லீங்க, இங்க ஆம்பளை டிரஸ்ஸஸ் ரொம்பக் கம்மி. எல்லாத்தையும் எடுத்துட்டேன். நெக்ஸ்ட் வீக், அப்ராட் போறேன். இது எனக்கு யூஸ் ஆகாது. வேஸ்டாதான் போகும். ப்ளீஸ் எடுத்துக்கோங்க," என்றான்.

ஷமித்ரா தயங்கி நிற்கையில், "ஓ சாரி, ஐ ஆம் மதுரன், அதி மதுரன். கையை நீட்டினான்."

ஷமித்ராவும் மதுரனும் கை குலுக்கிக் கொண்டனர். ஷமித்ராவிடம் கிஃப்ட் கூப்பன்ஸை கொடுத்தான்.

வாங்கிப் பார்த்தாள். இருபதாயிரம் ரூபாய்களுக்கான கூப்பன்ஸ்.

"அய்யோ, ட்வெண்ட்டி தவுஸண்ட்ஸ்க்கு இருக்கு ?"

"யெஸ், நீங்க இன்னர்ஸ் செலக்ட் பண்ணிட்டீங்கன்னா, வாங்க மத்த டிரஸ்ஸஸ் செலக்ட் பண்ணலாம்," என்று கூறிவிட்டு சில உடைகளை தேர்ந்தெடுக்க ஆரம்பித்து விட்டான்.

"இது நல்லா இருக்கா பாருங்க. இதை டிரையல் பாருங்க," என இடைவெளியே இல்லாமல் எடுத்துக்கொடுத்துக் கொண்டிருந்தான்.

ஷமித்ராவுக்கு வியப்பாக இருந்தது. யாருடா இவன் ? 20 ஆயிரம் ரூபாய் !!.....டிரையல் ரூமுக்கு உடைகளோடு ஓடினாள்.

அதி மதுரன் பெரிய கோடீஸ்வரன் எல்லாம் இல்லை. அப்பா பிஸினஸ் மேன். மதுரன் இன்னும் ஊர் சுற்றிதான். அவ்வப்போது அப்பாவின் பிஸினஸை பேருக்கு பார்த்துக் கொள்வான். எஸ்டேட், விவசாய நிலங்கள் அதிகம் உள்ளது. அதில் வரும் வரி இல்லா வருமானத்தில் ஐயா மஞ்சள் குளிப்பார். ஜாலியான ஆள்.

நண்பர்களோடு ஃபீனிக்ஸ் மால் வந்து, ஷமித்ராவைப் பார்த்து, நண்பர்களிடம், "இன்னிக்கி இவ கூட டின்னர் சாப்பிடறேன்," என பந்தயம் கட்டி, ஷமித்ராவை பின் தொடர்ந்து அவள் மார்க்ஸ் அண்ட் ஸ்பென்ஸர் வந்ததும் அவசரமாய் கிஃப்ட் கூப்பன் வாங்கி அடித்து விட்டு, இப்போது ஷமித்ரா டிரையல் பார்க்கும்போது, மெசேஜ் அடித்துக்கொண்டு இருக்கிறான் — 'இதுவரை சக்ஸஸ். ஆனா பொண்ணு சூப்பர். நிஜமா லவ் பண்ணிடுவேன் போல இருக்கு.'

# 42

படம் முடிந்து எழுந்து வெளியேச் செல்கையில் கூட்டத்தினூடே சந்தனின் கைகளை பிடித்துக்கொண்டாள் நித்திகா. சில நிமிடங்களில் விட்டு விட்டாள். அந்த செய்கைக்கு பதில் மரியாதையாக வெளியே வந்ததும், "இந்தப் பக்கம் வாங்க," என்று சொல்லி சந்தனும் நித்திகாவின் கையைப் பற்றினான். இந்தக் கைப்பற்றுதலும் வினாடிகளில் முடிவுக்கு வந்தது.

இருவருக்கும் ஆசை இருக்கிறது. ஆனால் உறவு ஃபாஸ்ட் ஃபுட் போல இவ்வளவு வேகமாக மலர்வது இருவருக்குமே ஒரு மாதிரி நாடகத்தனமாக இருந்தது. கையைப் பற்றிக்கொள்தல் எல்லாம் அன்பு காதலாகி பாசம் கொட்டிய பிறகு வர வேண்டியது அல்லவா? அதனால்தான் உடலின் உந்துதலால் பற்றிக்கொண்டாலும் இருவரும் உடனேயே விடுவித்தும் கொள்கின்றனர்.

இருவரும் க்ரவுண்ட் ஃப்ளோர் வந்து, எலீட் டாஸ்மாக் வாசலில் தயங்கி நின்று உள்ளே புகுந்தான் சந்தன். வெளியே நின்றிருந்த நித்திகாவை உள்ளே வா என்பது போல சைகை காட்டினான். தயங்கித் தயங்கி உள்ளே வந்த நித்திகாவிடம், "உனக்கு என்ன பிடிக்கும் ?" என்றான்.

அவள் யோசித்துக்கொண்டு நிற்கையில் தனக்குத் தேவையான பாட்டில்களை எடுத்தான். ஒரு ஒயின், ஒரு லிக்யூர், ஹென்னஸி கோனியாக் எடுத்துக்கொண்டு பில்லிங் முடித்து, காரை எடுத்துக்கொண்டு வெளியே வந்து கிண்டி ரேஸ்கோர்ஸ் காம்பவுண்டை ஒட்டிக் காரை நிறுத்தி, நித்திகாவை உள்ளேயே இருக்கச் சொல்லிவிட்டு வெளியே வந்து சிகரெட் பற்ற வைத்தான்.

புகைத்துக்கொண்டே, 'ஏன் இவளுடன் சுற்றுகிறோம் ? அடுத்து என்ன செய்யப்போகிறோம் ? ஷமித்ரா என்ன செய்து கொண்டு இருப்பாள் ?' என்று யோசித்துக்கொண்டே, ஷமித்ரா ப்ரொஃபைலை எடுத்துப் பார்த்தான்.

காருக்குள் வந்து அமர்ந்து கொண்டு ஓட்ட ஆரம்பித்தான்.
எங்கே போகிறான் என அவளும் கேட்க வில்லை, இவனும் சொல்ல வில்லை. டின்னர் ஒன்றாக சாப்பிட்டு விட்டு நித்திகாவை டிராப் செய்வதுதான் சந்தன் பிளான்.

பாதி தூரம் ஓட்டிக்கொண்டு இருக்கையில் சந்தனுக்கு ஃப்ளாஷ் அடித்தது. ரொமாண்ட்டிக்கான ரெஸ்டாரண்ட் செல்லலாமே என்று. ரொமாண்டிக் என்றால், இருவர் அந்த ரெஸ்டாரண்ட்டுக்கு வந்தால், இயல்பாகவே இருவரும் ஒட்டிக்கொண்டு அமர்வது போல சீட்டிங் இருக்க வேண்டும். ரெஸ்டாரண்ட் என்வைரான்மெண்ட்டே இருவருக்கும் நெருக்கத்தை உருவாக்க வேண்டும். தி பார்க் அக்வா ரெஸ்டாரண்ட் உடனே நினைவில் வந்தது. காரை வேகமாக அதற்கு விட்டான்.

தி பார்க்கின் நீச்சல் குளத்திற்கு பக்கத்தில் இருப்பது அக்வா. நீச்சல் குளத்தை சுற்றியும் வட்ட வட்டமாக சோஃபா உயரம் குறைவாக போடப்பட்டு இருக்கும். மேலே குடை. சம்மணமிட்டோ, கால் நீட்டியோ உட்கார்ந்து கொள்ளலாம். பக்கத்து பக்கத்தில் அமர்ந்தால் இயல்பாகவே நெருக்கம் வரும். சேரில் அமர்வதை விட முதல் முறை ரெஸ்டாரண்ட்டுக்கு வரும் ஜோடிகளுக்கு இந்த சீட்டிங் சிறந்தது.

காலணிகளை அவிழ்த்துப் போட்டுவிட்டு அமர்ந்தார்கள். இருவருக்கும் இடையில் சிறிய இடைவெளி இருந்தது. அந்த இடைவெளியை களையும் விதமாக பேரர் ஒரு மெனு கார்டை தந்தார். "மெனு பாரு வா," என்றதும் அருகில் வந்து ஒட்டிக்கொண்டாள் நித்திகா.

ஒரு flaming lamborghini ferrari காக்டெயிலும், ஒரு acapulco bikini காக்டெயிலும், ஒரு ஃப்ரூட் சாலட்டும், ஒரு ' aqua's signature char grilled chicken breastம் ஆர்டர் செய்தான்.

காக்டெயிலை சின்னஞ்சிறு சிப்பாக சிப்பியதும் மலர்ச்சியும் புத்துணர்ச்சியும் வந்தது. தயக்கங்கள் அகன்றன. ஏதோ தூசி இருப்பது போல தன் கர்ச்சீஃபால் நித்திகாவின் கன்னத்தைத் துடைத்து விட்டான். அவள் பேசிக்கொண்டு இருக்கும்போது, இரு இரு என்று சொல்வது போல பக்கத்தில் அமர்ந்திருந்தவளின் தொடையைத் தட்டினான்.

சந்தன் ஜோக் அடித்தபோது நித்திகா அவனின் கன்னத்தைத் தட்டினாள். இன்னொரு காக்டெயில் ஆர்டர் செய்யப்பட்டது . சின்னச் சின்னத் தொடுதல்கள் மூலம் நெருங்கினார்கள். இரண்டாவது காக்டெயில் குடிக்கும்போது நித்திகாவின் தோளில் கை போட்டுக்கொண்டு இருந்தான் சந்தன். தன் காக்டெயிலை சந்தனுக்கு ஊட்டி விட்டுக்கொண்டு இருந்தாள் நித்திகா.

உடைகளை தேர்ந்தெடுத்தாலும் ஷமித்ராவுக்கு வியப்பாகத்தான் இருந்தது. பில்லிங் போட்டவுடன் நன்றி சொன்னாள். "அதெல்லாம் எதுக்குங்க ? சரியான ஆளுக்குத்தான் போய் சேர்ந்திருக்கு. நீங்க இல்லன்னா வேற யாருக்காவது குடுத்து இருப்பேன். ஆனா திருப்தியா இருந்திருக்காது," என்றான். "நான் தான் உங்களுக்கு நன்றி சொல்லனும்," என்று பணிவாகக் குனிந்து எழுந்து சிரித்தான் மதுரன்.

ஷமித்ராவும் சிரித்தாள்.

பை சொல்லி விட்டு கிளம்பலாம் என ஷமித்ரா எத்தனித்த வேளையில், "உங்களுக்கு கார் டிரைவிங் தெரியுமா ?" என்றான் மதுரன்.

"ம்ம்..தெரியுமே ! ஏன் ?"

"ஒரு உதவி, உங்களுக்கு நேரம் இருந்தால் செய்யுங்கள்." இதை மிக மிக மரியாதையுடன் சொன்னான் மதுரன்.

"சொல்லுங்க என்ன உதவி ?"

"நான் கிண்டியில ஒரு டிராவல்ஸ்ல ஒரு டிக்கட் வாங்கணும். ஜஸ்ட் 2 மினிட்ஸ்ல வாங்கிடுவேன். ஆனா அங்க கார் பார்க் பண்ண முடியாது. நீங்க வந்தீங்கன்னா, ஜஸ்ட் டு மினிட்ஸ் கார்ல உட்கார்ந்துகிட்டு லைட்டா மூவ் பண்ணிட்டு இருந்தீங்கன்னா நான் வாங்கிட்டு வந்துடுவேன்," என்றான்.

தவிர்க்கவே முடியாமல், "ஓகே," சொன்னாள் ஷமித்ரா. ஒரு உதவி ஒரு ஆடவனிடம் வாங்கிய பின், அவன் கேட்கும் எதையும் பெண்களால் மறுக்க முடிவதில்லை.

சமயங்களில் ஆடவன் ஒருவன் செய்த சின்னஞ்சிறு உதவிக்காக எல்லாம் அவன் கட்டி அணைப்பதையும, முத்தமிடுவதையும் அனுமதிக்கும் பெண்கள் கூட உண்டு. "பாவமா இருந்திச்சி, அதனால அலவ் பண்ணினேன்," என்று சொல்லும் தியாகச்சுடர்களும் இருக்கிறார்கள்.

ஷமித்ரா ஓகே சொன்னதற்குக் காரணம் கிஃப்ட் கூப்பன்ஸ் மட்டுமல்ல, மதுரன் மிகவும் நாகரீகமாக நடந்து கொண்டது, அதைவிட முக்கியமான காரணம் மரியாதையாக நடந்து கொண்டது. எங்கும் மரியாதை இல்லாமல் நடத்தப்பட்டே பழகி விட்ட பெண்களுக்கு யாரேனும் மரியாதை காட்டி நடந்து கொண்டால் பிடித்துப் போய்விடுவது இயல்புதான். இந்த சமயத்தில் மரியாதை, போலி மரியாதை என்றெல்லாம் பிரித்துப் பார்க்க நேரமிருப்பதில்லை. இங்கே அணுகுமுறை முக்கியமாகப் போய் விடுகிறது.

இருவரும் கார் பார்க்கிங் சென்றனர். ஆடி க்யூ 3. புத்தம் புதிய கார். உள்ளே ஏறியதும் நறுமணம் தூக்கியது. அவ்வளவு சுத்தமாக இருந்தது. ஸ்டைலாக, அந்தக் காரை பொம்மை கார் ஓட்டுவது போல பதவிசாக ஓட்டினான். கிண்டியில் டிராஃபிக்கான ஓர் இடத்தில் நிறுத்தி விட்டு, ஷமித்ராவை டிரைவர் இருக்கையில் அமர வைத்து விட்டுச் சென்றவன், இரண்டு நிமிடங்களில் ஓடி வந்து ஏறிக்கொண்டான்.

"நீங்களே ஓட்டறீங்களா ?" என்றான்.

"ஓட்டலாம். புது கார், கொஞ்சம் தடுமாற்றமா இருக்கு," என்றாள்.

"பரவால்ல ஓட்டுங்க. 10 நிமிஷத்துல பழகிடும்," என்றான்.

சமாளித்து ஓட்டினாள் ஷமித்ரா.

சந்தன் கார் மற்றும் வேறு சில கார்கள் ஓட்டி இருக்கிறாள். கோவையில் வீட்டில் இருக்கும் ஸ்விஃப்ட் ஓட்டி இருக்கிறாள். ஆனால் இந்தக் கார் வேறு விதமான ஓட்டும் அனுபவத்தைக் கொடுத்தது. ரோட்டின் மேடு பள்ளங்களே தெரியவில்லை. ஏதோ பனிச்சாலையில் வழுக்கிக்கொண்டு செல்வது போலத் தோன்றியது.

இதுவரை ஓட்டிய கார்களெல்லாம கட்டை வண்டி போலத் தோன்றியது. சிறிது நேரம் ஓட்டிவிட்டு தான் இறங்கிக்கொள்ளலாமே என்று தோன்றியதும், "நான் இங்கே எங்கேயாவது இறங்கிக்கிறேன்," என்றாள்.

"இப்பதான் ஓட்ட ஆரம்பிச்சி இருக்கீங்க. கொஞ்ச தூரம் டிரைவ் பண்ணுங்க. ரியலீ யூ கேன் என்ஜாய் தி டிரைவ். நிஜமாவே நீங்க நல்லா ஓட்டறீங்க. இன்னும் கொஞ்சம் ஸ்பீட் போகலாம்," என்றான்.

அந்தக் கடைசி வாக்கியம் ஷமித்ராவைத் தூண்டியது. ஆக்ஸிலேட்டரை மிதித்தாள். கார் வழுக்கிக்கொண்டு சென்றது. திருப்பினாலும், பிரேக் அடித்தாலும் சொன்ன பேச்சைக் கேட்டது. அப்படியே ஓட்டிக்கொண்டு மவுண்ட் ரோடு எல் ஐ சி வரை வந்து விட்டாள்.

"ஒன் மோர் ரெக்வெஸ்ட்," என்றான் மதுரன்.

"என்ன ?" என்றாள் ஷமித்ரா.

"இன்னைக்கி எனக்கு பர்த் டே !"

"ஈஸ் இட் ? மெனி மெனி ஹேப்பி ரிட்டர்ன்ஸ் ஆஃப் தி டே."

"தேங்க் யூ. இன்னிக்கி பர்த் டே வை முன்னிட்டு நான் குடுக்கும் டின்னரை என் கூட சாப்பிடணும்," என்றான் மதுரன்.

ஷமித்ரா பதில் சொல்வதற்குள், "ஜஸ்ட் 20 மினிட்ஸ் ப்ளீஸ்," என்று பாவமாக முகத்தை வைத்துக்கொண்டு புன்சிரிப்பை தவழ விட்டபடி கேட்டான்.

பர்த்டே என்று சொல்லி விட்டாலே பெரும்பாலும் பல பெண்கள் மறுப்பு ஏதும் சொல்வதில்லை. என்ன கேட்டாலும் செய்கிறார்கள். புதிதாக அறிமுகப்படுத்திக்கொள்ளும் போது இன்று எனக்கு பிறந்த நாள் என்று சொன்னால், பெண்களுடன் நெருக்கமாவது சுலபமாகி விடுகிறது. இதற்காகவே வருடத்திற்கு 150 நாட்கள் பிறந்தநாள் கொண்டாடும் ஆட்களெல்லாம் இருக்கிறார்கள்.

பிறந்தநாள் என்று மதுரன் சொல்லி விட்டதால் ஷமித்ராவும், "ஓகே," என்று சிரித்தபடி ஆமோதித்தாள் .

# 44

மூன்று காக்டெயில்கள் அக்வாவில் முடித்ததும், மிகவும் நெருங்கி இருந்தனர் சந்தனும் நித்திகாவும். அங்கே பில் கொடுத்துவிட்டு கிளம்பினார்கள். இப்போது இருவரும் நெருக்கமாகக் கையைக் கோர்த்துக்கொண்டு நடந்து சென்றனர்.

காரில் செல்கையில் வழியில் நிறுத்தி உணவுகளைப் பார்சல் செய்து கொண்டான் சந்தன். நித்திகா சொல்லும் இடத்திலோ அல்லது அவளின் இடத்திலோ கொண்டு போய் டிராப் செய்வதுதான் சந்தனின் பிளான். நித்திகாவே சொல்லட்டும் என்று அமைதியாக காரை ஓட்டிக்கொண்டு இருந்தான்.

நித்திகா சந்தன் மீது சாய்ந்து கொண்டு இருந்தாள். இப்போது முடிவெடுக்க வேண்டிய நேரம் வந்து விட்டது. "எங்க நித்திகா உன்னை டிராப் செய்யணும் ?" என்றான் சந்தன்.

"துரத்துறதுலயே குறியா இரு," என்றாள் நித்திகா.

சந்தன் விழித்துக்கொண்டான். காரை தன் வீட்டை நோக்கிச் செலுத்தினான். இந்த செக்ரட்டரி கண்ணில் மாட்டக்கூடாதே என்ற கவலை வேறு வந்து விட்டது. காரை வீட்டுக்கு அருகில் கொஞ்ச தூரத்தில் பார்க் செய்து விட்டு, நடந்து போய் நிலவரத்தை பார்த்து வந்தான்.

தான் முதலில் ஃப்ளாட்டுக்குள் சென்று விட்டு பின் சற்று நேரம் கழித்து நித்திகாவை வரச்சொல்லலாம் என்று தோன்றியது. ஆனால், முதன்முறை வீட்டுக்கு வருபவளிடம் எப்படி அப்படி சொல்வது என அந்த ஐடியாவை நிராகரித்து இருவரும் ஒன்றாக சென்றார்கள். செக்யூரிட்டி மட்டும் தலை தூக்கிப் பார்த்தார்.

ஒருவழியாக செக்ரட்டரி கண்ணில் படாமல் உள்ளே வந்து கதவைச் சாத்திக்கொண்டான். கதவைச் சாத்தியதும் பால்கனி கதவை திறந்தான். இருவரும் பால்கனிக்குச் சென்றார்கள். இயல்பாக பின்னால் இருந்து அணைத்துக்கொண்டாள் நித்திகா.

ரெ.ஃப்ரஷ் செய்து கொண்டு, மீண்டும் வாங்கி வந்த லிக்கரை இருவரும் இரண்டு ரவுண்ட் அடித்தார்கள்.
காக்டெயில் போதையுடன் இந்த இரண்டு ரவுண்ட் போதையும் சேர்ந்து சுழற்றி அடித்தது. சந்தன் மியூசிக் மெதுவாக போட்டான். நித்திகாவுக்கு லேசாக போதை ஏறியது. எழுந்து நின்று கொண்டு, "கம் சந்தன் டான்ஸ் வித் மீ," என்றாள்.

சந்தன் எழுந்து அவளருகே சென்றதும் அவளே சந்தனை அணைத்துக்கொண்டு லேசாக ஆட ஆரம்பித்தாள். கொஞ்ச நேரம் ஆடியதும் இருவரும் லேசாக முத்தமிட்டுக்கொண்டு முத்தப்பசி எடுத்தவர்கள் போல உதட்டு முத்தம் கொடுத்துக்கொள்ளத் தொடங்கினர்.

நித்திகா, சந்தனை விளையாட்டாகத் தள்ளுவது போல பெட் ரூமுக்கு தள்ளி விட்டுக்கொண்டே சென்றாள். சந்தனை படுக்கையில் தள்ளினாள்.

சந்தனுக்கு என்னவோ போல இருந்தது.

ஸ்டைலாக தன் ஜீன்ஸையும் டாப்ஸையும் களைந்து இன்னர்ஸுடன் சந்தன் பக்கத்தில் ஊர்ந்து கட்டியணைத்து முத்தமிட்டாள் நித்திகா.

அவளை கீழே தள்ளி சந்தன் மேலே வந்தான். முத்தமிட முயலுகையில், மீண்டும் அவனைக் கீழேத் தள்ளி நித்திகா மேலே வந்தாள்.

கண்களைச் சுழற்றியபடி, "இட்ஸ் மை டே," என்றாள்.

சந்தனுக்கு எந்த முன் ஏற்பாடும் இல்லை. நித்திகாவுடன் செக்ஸ் என்றெல்லாம் எதிர்பார்க்கவேயில்லை. கட்டிப்பிடிக்கலாம், அதிக பட்சம் முத்தமிடலாம் என்றுதான் இருந்தான். இவள் என்னடாவென்றால் இவளே எல்லாவற்றையும் செய்கிறாளே என்று யோசித்தான்.

சந்தனின் உடைகளை நித்திகாவே களைந்ததை சந்தன் ரசிக்கவில்லை. விளக்கு எறிந்து கொண்டு இருக்கையிலேயே எந்த கூச்சமும் இல்லாமல் நித்திகாவால் உடை களைய முடிந்தது. அவளுக்கு வேண்டியதை அவள் செய்தாள். தனக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டாள்.

சந்தன் ஒரு சைலண்ட் பார்ட்னராக இருக்க வேண்டி வந்தது. அவளே எல்லாத்தையும் முடித்து வைத்தாள்.
உச்சம் முடிந்ததும் அவன் மீது மயங்கிச் சரிந்து வெறி கொண்டவள் போல முத்தமிட்டாள். சந்தனுக்கு எரிச்சலாக இருந்தது. என்ன நடந்தது என்றே தெரியவில்லை. ஒரு திருப்தியுமில்லை. வெறுமையாக இருந்தது, வலித்தது. அவளைத் தள்ளி விட்டு விட்டு பால்கனிக்கு ஓடிச் சென்று சிகரெட் பிடிக்க வேண்டும் போல் இருந்தது.

மதுவும் செக்ஸும் சரிவராது. அதிலும் முதன்முறை உறவில் ஈடுபடும் போது மது கூடவே கூடாது. மது உறவின் நேரத்தை நீட்டிக்கும் என பலர் உறவின் போது மதுவை எடுத்துக் கொள்கின்றனர்.மூளை மறுத்து விடுவதால் உறவின் நேரம் நீடித்தாலும், உணர்வுகள் மழுங்கி விடுகின்றன.

தொடர்ந்து மது எடுத்துக்கொண்டு உறவில் ஈடுபட்டால் எரெக்டைல் டிஸ்ஃபங்க்ஷனில் கொண்டு போய் விட்டு விடும். அன்பு, பாசம், காதல் என்ற வழியில் வளர்ந்து காமத்தில் நிலைபெறும் போதுதான் உச்சகட்ட பரவசமும் நிம்மதியும் கிடைக்கும். இவையேதும் இல்லாமல் திடீரென ஒருவருடன் படுக்கையில் விழுவது மனதைக் குழப்பி, வெறுமையையே கொடுக்கும்.

அதிலும் ஈருடல் ஓருயிர் என காதலும் காமமும் கசிந்துருகி ஒருவருடன் உச்சகட்ட இன்பத்தில் திளைத்து விட்டு இன்னொருவருடன் வெறும் உறவில் மட்டும் ஈடுபடும் போது மனமும் உடலும் ஒத்துழைக்காது.

சந்தன் இப்படித்தான் எரிச்சலில் தவித்துக் கொண்டிருந்தான்.

"இதுவரைக்கும் எல்லாரும் என்னை ஏமாத்திட்டானுங்கடா. நீயாச்சும் கடைசி வரைக்கும் ஏமாத்தாம இருப்பியா பேபி. ஐ லவ் யூ சோ மச்," என்று கூறி விட்டு, சந்தனின் மேல் படுத்துக்கொண்டு அவன் கழுத்தில் முகம் புதைத்து தேம்ப ஆரம்பித்தாள் நித்திகா.

# 45

ஷமித்ரா ஆமோதித்ததும் கார் அண்ணா சாலையில் இருக்கும் பெரும் பணக்காரர்கள் மட்டும் செல்லும் கிளப்புக்குச் சென்றது. ஷமித்ரா இது போன்ற க்ளப்களுக்கு இதுவரை சென்றதில்லை. உள்ளே நுழைந்ததும் அந்த க்ளப் அழகான குட்டி நகரம் போல் காட்சியளித்தது. இவ்வளவு பரபரப்பான நகரத்துக்கு இடையே இவ்வளவு ரம்மியமான ஒரு இடத்தை ஷமித்ரா எதிர்பார்க்கவில்லை.

கார் ரிஸப்ஷன் அருகே நின்றதும் வாலட் பார்க்கிங்கிற்கு ஆள் வந்து பவ்யமாய் வாங்கிச்சென்றான்.

இருவரும் உள்ளே சென்றதும், மதுரனின் நண்பர்களும் இன்னொரு காரில் வந்து இறங்கி உள்ளே நுழைந்தனர்.

மதுரன் ஷமித்ராவை பாருக்கு அழைத்துச் சென்றான். டீஜே இசையை தெறிக்க விட்டுக்கொண்டு இருந்தான். கூட்டம் பரவலாக இருந்தது. மது அருந்திக்கொண்டு தத்தமது டேபிள்களுக்கு அருகிலேயே மெதுவாக ஸ்டெப் போட்டுக்கொண்டு இருந்தனர். டேன்ஸ் ஃப்ளோரில் லைட் ஜொலித்துக்கொண்டு இருந்தது. ஆனால் இன்னும் யாரும் நடனம் ஆட ஆரம்பிக்கவில்லை.

மதுரனை கோட் சூட் போட்ட ஒரு ஆசாமி பவ்யமாய் அழைத்துக்கொண்டு சென்று ஒரு டேபிளை ஒதுக்கிக்கொடுத்தார். ஷமித்ரா இதையெல்லாம் கவனித்துகொண்டே, லேசான தயக்கத்துடன் அமர்ந்தாள். டின்னர் என்று சொல்லிவிட்டு இங்கே அழைத்து வந்திருக்கிறானே என்று யோசித்துக் கொண்டிருந்தாள்.

பெண்களுக்குப் பொருத்தமான  வோட்கா, ஜிஞ்சர் பீர், லெமன் மற்றும் புதினா கலந்து செய்யப்பட்ட 'மாஸ்கோ மூல்' என்ற காக்டெயிலை ஷமித்ராவை கேட்காமலேயே ஆர்டர் செய்தான். ஷமித்ராவும் மறுக்க முடியாமல் குடிக்க ஆரம்பித்தாள். க்ரில்ட் சிக்கன் விங்க்ஸ் உடன் சாலட் வந்தது.

டிஜே மிகத் திறமைசாலியாக இருந்தான். கூட்டத்தின் மூடை ஏற்றிக்கொண்டே இருக்கும்படி பாடல்களை களைந்து தெறிக்க விட்டான். இசையின் இன்ஃப்ளுயன்ஸாலும், கூட்டாத்தின் ஹோ.. ஹோ.. என்ற சத்தத்தாலும் ஷமித்ராவும் உற்சாகமான மனநிலைக்கு வந்தாள். மூன்றாவது காக்டெயில் குடித்துக் கொண்டிருக்கும்போது, அறிவிப்பு வந்தது.

நீல கலர் டாப்ஸ் அணிந்த பெண் மற்றும் கருப்பு கலர் சட்டை அணிந்த ஆண் இருந்தால் ஆட வரலாம். உங்களுக்கு மிகப்பெரிய பரிசு காத்திருக்கிறது.

சில நிமிடங்கள் அமைதி. சின்னச் சின்ன சலசலப்பு. அந்த கலர் உடை அணிந்த யாரும் இல்லை. மீண்டும் அறிவிப்பு வந்தது.

கருப்பு வெள்ளை உடை அணிந்த பெண்ணும், பிளாக் ஜீன் அணிந்த ஆணும் ……….

ஷமித்ராவிற்கும் மதுரனுக்கும் பொருந்தியது. ஷமித்ரா கண்கள் விரிந்தன. ஒரு ஸ்பாட் லைட், இவர்கள் மேல் ஒளி பாய்ச்சியது. மற்ற அனைவரும் கை தட்டினார்கள். மதுரன் எழுந்து ஸ்டைலாக ஷமித்ராவை நோக்கி கையை கொடுத்தான். ஷமித்ரா ஆப்ஷனே இல்லாமல் தன் கையை மதுரனுக்கு கொடுக்க, அவளை மென்மையாக இழுத்துக்கொண்டும் ஸ்டெப் போட்டுக்கொண்டும் டேன்ஸ் ஃப்ளோரை நோக்கிச் சென்றான். பாடல் உரத்துக் குதிக்க ஆரம்பித்தது.

உண்மையில், மதுரனின் நண்பர்கள் அறிவிப்பாளரிடம் மதுரன் உடை கலரையும் ஷமித்ரா உடை வண்ணத்தையும் சொல்லி அழைக்கச் சொல்லி இருந்தார்கள். மதுரனும், நண்பர்களும் இங்கே ரெகுலராக வருபவர்கள் என்பதால் இது சாத்தியமானது. பணமும் கொடுப்பார்கள். முதலிலேயே இவர்களின் கலரை சொன்னால் சந்தேகம் வரும் என்பதால் முதலில் இல்லாத கலரை சொல்லி, பிறகு மதுரன் — ஷமித்ரா கலர் அறிவிப்பு செய்யும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள்.

## 46

மதுரன் ஷமித்ரா கையை மட்டுமே பிடித்து மரியாதையான தூரத்தில் சுழன்று ஆடிக்கொண்டு இருந்தான். ஷமித்ரா நன்கு என்ஜாய் செய்து ஆடிக்கொண்டு இருந்தாள். கூட்டம் கைத்தட்டி உற்சாகப் படுத்தியதும் மதுரன் ஷமித்ராவுக்கு அருகில் நெருங்கி வந்து எதிரே மயிரிழை தூரத்தில் நின்று கொண்டு ஆடினான். ஒரு நல்ல பீட்டுக்கு டக்கென்று ஷமித்ராவின் இடையை மென்மையாக பற்றித் தன்னருகே இழுத்துச் சுற்றி விட்டு விலகினான்.

பாடல் சத்தம் குறைக்கப்பட்டு, மற்றவர்களையும் சேர்ந்து ஆட அறிவிப்பு அழைத்தது. மேலும் அந்த அறிவிப்பு ஷமித்ராவின் நடனத்தை புகழ்ந்தது. மற்றவர்களையும் ஷமித்ராவின் நடனத்துக்காக கைத்தட்டி உற்சாகப் படுத்தும்படி கேட்டுக்கொண்டது.

"இந்த இரவை இனிமையாக்கியதற்கு, ஷமித்ராவுக்கு மிக்க நன்றி," என்ற அறிவிப்பு பலத்த கரகோஷத்துடன் வெளிப்பட்டது. "தி பிளாக் அண்ட் வொயிட் ஏஞ்சல்," என்று ஷமித்ராவை அறிவிப்பு விளித்தது. ஷமித்ரா மீது ஸ்பாட் லைட் தொடர்ந்து அடித்தது.

ஷமித்ராவுக்கு சிலிர்த்தது. இந்த புகழ்ச்சி, மற்றவர்களின் கைத்தட்டல், உற்சாகத்தின் உச்சகட்டத்துக்கு சென்றுக் கொண்டிருந்தாள் ஷமித்ரா. இந்த நேரத்தில், நன்றி தெரிவிக்கும் விதமாக அன்புடன் மதுரனைப் பார்த்தாள் ஷமித்ரா. கில்லாடியான மதுரன், அவள் கண்களைக் கண்டு கொண்டான். மலர்ச்சியாக இருக்கிறாள். நெகிழ்ந்து இருக்கிறாள். தன் மீது லேசான அன்பு துளிர்க்க ஆரம்பித்து இருக்கிறது என்பது புரிந்த அந்தக் கணத்தை இழக்கத் தயாராக இல்லை.

உடனே அவளை நெருங்கி நாகரீகமான ஒரு முத்தத்தைக் கன்னத்தில் பதித்தான். அவளுக்கு யோசிக்க இடம் கொடுக்காமல் அடுத்த ஸ்டெப் போட்டபடி அவளைச் சுற்றி இழுத்துத் தன்னருகே கொண்டு வந்தான். வந்த வேகத்துக்கு, போதை கொடுத்த கிளர்ச்சி மற்றும் தன்னை அனைவரும் கொண்டாடி இருந்த மகிழ்ச்சியில் ஷமித்ராவும் மதுரனின் கன்னத்தில் முத்தமிட்டாள். உடனே ஷமித்ராவை இழுத்து அணைத்துக் கொண்டான். அணைத்தபடியே நடனமாடினான்.

அப்போது இருவருக்கும் இரண்டு காக்டெயில் கொண்டு வந்து கொடுக்கப்பட்டது. ஆடிக்கொண்டே குடித்தார்கள். மதுரன் ஷமித்ரா காதுகளில், "யூ ஆர் ரியலி ஸ்டன்னிங் பர்ஸ்னாலிட்டி. க்யூட் லிட்டில் ஏஞ்சல். ஐ லவ் யூ டியர்," என்றான்.

என்ன சொல்வது என்று ஷமித்ராவுக்குத் தெரியவில்லை. "தேங்க்யூ," என்று மட்டும் சொன்னாள். நடனம் தொடர்ந்து கொண்டே இருந்தது. அவ்வப்போது மறுக்க முடியாத வண்ணம், தோதான கோணத்தில் ஷமித்ரா வரும்போதெல்லாம் மதுரன் சின்னச் சின்ன முத்தங்கள் கொடுத்துக் கொண்டிருந்தான். சமயங்களில் தன் கன்னத்தை ஷமித்ராவின் உதட்டுக்கு அருகில் கொண்டு சென்றான். ஷமித்ராவும் அவ்வப்போது முத்தமிட்டாள்.

இன்னொரு ரவுண்ட் காக்டெயில் வந்தது. அதை பாதி குடித்ததும் ஷமித்ராவுக்கு மயக்கம் வருவது போல் இருந்தது. முதலில் நடனத்தை நிறுத்தி விட்டு,

"எக்ஸ்க்யூஸ் மீ," என்று சொல்லி விட்டுத் தன் இருக்கைக்குச் சென்று அமர்ந்தாள். மயக்கமும் தலை சுற்றலும் அதிகரித்தது. ரெஸ்ட் ரூம் சென்று முகம் கழுவினாள். நிற்க முடியாத வண்ணம் கால்கள் தளர்ந்தன. சுதாரித்து வாய்க்குள் கையை விட்டு வாந்தி எடுக்க முயன்றாள். முடியவில்லை. கண்கள் இருட்டிக்கொண்டு வந்தன. சுவரைப் பிடித்தபடி வெளியே வந்தாள்.

மதுரன் ரெஸ்ட் ரூம் வாசலிலேயே தயாராக நின்றான். அவளை அணைத்துத் தோளில் சாய்த்துக்கொண்டு மெல்லமாக வெளியேறினான்.

## 47

ஷமித்ராவைக் கைத்தாங்கலாக தோளில் சாய்த்துக்கொண்டு வெளியேறியதை யாரும் பெரிதாக கவனிக்கவில்லை. பாரை விட்டு வெளியேறி நீளமான வராண்டாவில் நடந்து லிஃப்ட் மூலம் அந்த கிளப்பில் மதுரன் பெயரில் பதிவு செய்யப்பட்டிருந்த அறைக்குச் சென்றான்.

ஷமித்ரா ரெஸ்ட் ரூமில் வாந்தி எடுக்க முயற்சித்துக் கொண்டிருந்தபோது, மதுரனின் நண்பர்கள் மதுரனிடம் ஓடி வந்தனர். அப்போது நடந்த கான்வர்சேஷன்……

"மாம்ஸ், ஷமித்ராவுக்கு குடுத்த காக்டெயில்ல டிரக் கலந்துட்டோம். அதான் மயக்கமா இருக்கும். நீ ரூமுக்கு அள்ளிட்டு போயி மேட்டரை முடி," என்றனர்.

"டேய் ஏன்டா, என்னைக் கேட்காம பண்ணினீங்க ?"

"இல்ல, இந்த ஃபிகர் ராயலா ஹை க்ளாஸா இருக்கா. சாதாரணமா மடங்க மாட்டா, அதான் மச்சி."

"ச்சீ ..இல்லடா. எனக்கு அவளை ரொம்பப் பிடிச்சிருக்கு. பாவம்டா, தலையை பிடிச்சிக்கிட்டு உள்ள போயிருக்கா. அவளே எனக்கு கிஸ்லாம் குடுத்தா. அப்படியே பொறுமையாவே போய்க்கிட்டு இருக்கட்டும்டா."

"ஓ…லவ் பண்றியா மச்சி ?"

"லவ்வா என்னன்னு எல்லாம் தெரியலை.
ஆனா இவளை ரொம்ப பிடிச்சிருக்கு. இவ எனக்கு மத்த பொண்ணுங்க மாதிரி இல்லை."

"மச்சி, அந்தப் பொண்ணு வெளிய வரா ....பாத்துக்கோ"

நண்பர்கள் விலகி ஓடினர்.

அறைக்கதவைத் திறந்து கொண்டு, ஷமித்ராவைப் படுக்க வைக்க உள்ளே அழைத்துச் சென்றான்.

மயக்கத்திலேயே ஷமித்ரா, "என் ரூமுக்கு போகணும், சாந்தவிக்கு கால் பண்ணனும்," என முனகினாள். மயக்கத்தில் இன்னும் அழகாக இருந்தாள் ஷமித்ரா. மயக்கத்தில் இருந்து வெளியே வர கடுமையாக போராடிக்கொண்டு இருந்தாள்.

படுக்கையில் படுக்க வைத்தான் மதுரன்.

"நோ, ஐ ஹேவ் டூ கோ டூ மை ரூம்," என்று சொல்லிக்கொண்டு இருந்தாள் ஷமித்ரா .

தன் உடையை மாற்றிக்கொண்டு, முகம் கழுவிக்கொண்டு வந்தான் மதுரன். ஷமித்ரா இப்போது மயக்கத்தின் அடி ஆழத்துக்கு சென்று ஏதோ சொல்லிக்கொண்டு இருந்தாள். அவளின் மெல்லிய உதடுகள் ஸ்லோமோஷனில் அசைந்து கொண்டு இருந்தன.

மதுரனுக்கு உள்ளே இருந்த நல்லவன் ஒளிந்து கொள்ள, கெட்டவன் பிரம்மாண்ட உருவம் எடுத்தான். இப்போது இவளை முத்தமிட்டால் தெரியவா போகிறது ? அதிலும் அந்த அசையும் உதடுகளை கண்டபோது பித்தம் தலைக்கேறியது.

ஷமித்ராவின் பக்கத்தில் படுத்துக்கொண்டு அவளின் மார்பின் மேல் படர்ந்து உதடுகளில் மென்மையாக முத்தமிட்டான். ஷமித்ராவுக்கு உணர்வே இல்லை. மீண்டும் அவளின் சன்னமான மேலுதட்டை கவ்வினான். மென்மையாக சுவைத்தான்.

இப்போது ஷமித்ரா தலையை சிலுப்பினாள். ஷமித்ராவின் பல் மதுரனின் உதட்டை லேசாக கிழித்தது. அதைக் கண்டு கொள்ளாமல் ஷமித்ராவின் கீழுதட்டை வேகமாகப் பற்றி அழுந்த முத்தமிட்டுக்கொண்டு இருந்தான்.

ஷமித்ரா தலையை சிலுப்பியபடியும், கைகளை காற்றில் கோலமிட்டபடியும் இருந்தாள்.

சற்று நிறுத்தி மூச்சு வாங்கி எழுந்த மதுரனை ஷமித்ராவின் மார்பகங்கள் மீண்டும் அழைத்தன. மனதில் இருந்த நியாய உணர்வுகள் அனைத்தையும் கொன்று போட்ட மதுரன், ஷமித்ராவை தன் மடியில் போட்டுக்கொண்டு அவளின் டாப்ஸை கழட்டினான். உள்ளாடையோடு ஷமித்ராவை பார்த்ததும் பித்தம் தலையைச் சுற்றி அடித்தது.

அவளைக் கட்டிப்பிடித்துக் கொண்டான். அவளின் உள்ளாடையை அவிழ்க்க முயலும் போது ஷமித்ராவின் கைப்பையில் இருந்த மொபைல் அடித்தது. சாந்தவிதான் அழைத்துக்கொண்டு இருந்தாள். அந்த போனை எடுத்து கட் செய்துவிட்டு படுக்கைக்கு வந்தான் மதுரன். அதற்குள் ஷமித்ரா கீழே விழுந்து இருந்தாள்.

எங்கே அடிபட்டது என்று கூடத் தெரியவில்லை. முழு மயக்கத்துக்குச் சென்றிருந்தாள். மூக்கில் கை வைத்துப் பார்த்து நிம்மதியடைந்தான் மதுரன். அவளைத் தூக்கி கட்டிலில் போட்டுவிட்டு, மீண்டும் அவளின் டாப்ஸை போட்டு விட்டு போர்த்தி விட்டான்.

ஜன்னல் கதவைத் திறந்து சிகரெட் பிடித்தான்.

அதிகாலை ஐந்து மணி சொச்சத்துக்கு ஷமித்ராவுக்கு விழிப்பு வந்தது. எங்கே இருக்கிறோம் என்றே தெரியவில்லை. பக்கத்தில் தூங்கிக்கொண்டு இருந்த மதுரனை பார்த்ததும் நினைவுகளை மீட்டெடுத்தாள். திடுமென பதற்றம் வந்து தொற்றிக்கொண்டது. கால்கள் நடுங்கின. வயிறு சுண்டி இழுத்தது. தலை கிண் கிண்ணென்றது.

உடைகளை சோதித்துக்கொண்டாள். லேசான திருப்தி வந்தது. மதுரன் மேல் பெரும் கோபம் எழுந்தது. குளியலறை சென்று முகம் கழுவிவிட்டு வந்தாள். மதுரன் இன்னும் தூங்கிக்கொண்டு இருந்தான். தன் கைப்பையையும், உடைமைகளையும் எடுத்துக்கொண்டு அறையைத் திறந்து கொண்டு வெளியேறினாள். வெளியேறும் போது, "ப்ளடி பாஸ்டர்ட்," என்ற வார்த்தை வாயில் இருந்து உதிர்ந்தது. மொபைல் ஆப் மூலம் கால் டாக்ஸி புக் செய்து ஹாஸ்டல் வந்து சேர்ந்தாள்.

சாந்தவி தூக்கக்கலக்கத்தில் கதவைத் திறந்து விட்டு மீண்டும் தூங்கிப்போனாள். அலுவலகத்துக்கு விடுமுறை மெயில் அனுப்பி விட்டு இழுத்துப் போர்த்திக்கொண்டு படுத்துக்கொண்டாள்.
மனம் படபடத்துக் கொண்டே இருந்தது. கொஞ்ச நேரம் தூங்க வேண்டும்

என்று 1 2 3 4 எண்ண ஆரம்பித்தாள்.

சாந்தவி கிளம்பி அலுவலகம் செல்லும்போது ஷமித்ராவை எழுப்பினாள். "கொஞ்சம் தலைவலி," என்று சொல்லி விட்டு திரும்பிப் படுத்துக்கொண்டாள் ஷமித்ரா.

நித்திகாவுடன் அன்றைய இரவு மரண அவஸ்தையாக கழிந்தது. "என்னை மறந்துட மாட்டியே, ஏமாத்திட மாட்டியே," என்றே புலம்பிக்கொண்டு இருந்தாள். கட்டிப்பிடித்துக்கொண்டே தூங்க முயற்சித்தாள். சந்தன் விலகிப் படுத்தாலும் வந்து கட்டிக்கொண்டாள்.

காலையில் அவளது ஹாஸ்டலில் இறக்கி விடும்போதும், "போக மனசே இல்லை," என்று சொல்லி விட்டு காருக்குள்ளேயே கட்டிப்பிடித்து முத்தமிட்டாள்.

அவள் இறங்கிச் சென்றதும் விடுதலையான உணர்வுடன் காரை ஓட்டிக்கொண்டு வந்து ரோட்டோர டீக்கடையில் நிறுத்தி, ஒரு டீ குடித்தான். சுதந்திரமாக ஒரு சிகரெட் பிடித்தான். ஷமித்ராவுடன் பேச வேண்டும் போல் இருந்தது. கால் அடித்தான். முழு ரிங் அடித்து கட் ஆனது.

*

ஷமித்ரா மீண்டும் எழுந்த போது 11 மணி. தலையில் அடித்துக்கொண்டாள். மொபைலை பார்த்தாள். 11 மிஸ்ட் கால்கள். சாந்தவி அடித்து இருந்தாள். மதுரன் 9 மிஸ்ட் கால்கள், சந்தன் ஒரு மிஸ்ட் கால்.

சந்தன் கால் அடித்து இருந்தது ஏனோ ஆறுதலாக இருந்தது.

உடனடியாக மதுரனை அழைத்தாள். எடுத்தவுடன், "யூ இடியட். ப்ளடி சீட்டர். எனக்கு டிரிங்க்ல என்னமோ கலந்து குடுத்து இருக்கீங்க. இதுவரைக்கும் எனக்கு இப்படி ஆனதே இல்லை. இதுக்கு மேல எனக்கு கால் பண்ணி தொந்தரவு பண்ணினா போலீஸ்ல கம்ப்ளெயிண்ட் பண்ணுவேன். என்னை மயக்கத்துல நீ ரூமுக்கு கூட்டிட்டு போனது எல்லாம் சீசிடீவில ரெக்கார்ட் ஆகி இருக்கும். இத்தோட நிறுத்திக்கோ. உன் பொறுக்கித்தனம் கண்ட்டினியூ ஆச்சுனா பெரிய அளவில் புகார் கொடுத்துடுவேன்," என்று கூறினாள்.

"சாரி ஷமி, சாரி ஷமி, நான் சொல்றதைக் கொஞ்சம் கேளேன்," என்று மதுரன் கெஞ்சிக்கொண்டு இருக்க, "வைடா ஃபோனை, ஃப்ராடு நாயே," என்று கூறி கட் செய்தாள்.

சந்தனுக்கு ஃபோன் அடித்தாள்.

சந்தன் இரண்டாவது ரிங்கிலேயே எடுத்தான்.

"ஹலோ, மிஸ்ட் கால் பார்த்தேன், என்ன விஷயம் ?" என்றாள்.

‘‘உடம்பு சரியில்லையா ? குரல் ஒரு மாதிரி இருக்கு ?’’

‘‘லைட்டா கோல்ட், வேற ஒன்னும் இல்லை. அப்புறம் நாளைக்கு உன் வீட்டுக்கு வரேன். வந்து திங்க்ஸையெல்லாம் எடுத்துக்கறேன். எத்தனை மணிக்கு வந்தா உனக்கு வசதியா இருக்கும் ?’’

‘‘எப்ப வேணா வா, நான் ஃப்ரீதான். இன்னைக்கு நைட்டே கூட வர்றதுன்னா வாயேன்."

‘‘இல்ல, காலைல 11 மணிக்கு வரேன். பை பை."

கட் செய்து விட்டு இருவரும் மொபைலை வெறித்துப் பார்த்துக்கொண்டு இருந்தனர்.

## 49

இன்றைய இரவு ஷமித்ரா மற்றும் சந்தன் இருவருக்குமே கொடூரமானதாக இருந்தது. இருவரும் ஒருவரை ஒருவர் மிஸ் செய்தார்கள். நித்திகா தொடர்ந்து சந்தனுக்கு மெசேஜ் அனுப்பி எரிச்சல் மூட்டிக்கொண்டு இருந்தாள். சந்தனுக்கு உடனே ஓடிச்சென்று ஷமித்ராவை அணைத்துக்கொள்ள வேண்டும் போல் இருந்தது. அதன் மூலம் மட்டுமே நித்திகாவுடனான கெட்ட கனவில் இருந்து அவனால் வெளி வர முடியும்.

ஷமித்ராவை சாந்தவி தொல்லை செய்து கொண்டே இருந்தாள். "ஏன் நேத்து நைட்டு வரலை?" இந்த ஒரு கேள்வியையே வெவ்வேறு விதமாக கேட்டுக்கொண்டு இருந்தாள்.

முந்தைய நாள் அனுபவம் ஷமித்ராவுக்குள் ஒரு குற்றவுணர்ச்சியை ஏற்படுத்தி இருந்தது. தான் ஏன் ஒரு ஸ்ட்ரேஞ்சர் உடன் சென்றேன்? எது என்னை மயக்கியது ? அல்லது இயக்கியது ? தானும் ஒரு லக்ஸூரி கார், க்ளப் என்றவுடன் வாயடைத்துப் போய்விட்டேனா ?

அவனை ஏன் நான் முத்தமிட்டேன்? அவன் அணுகுமுறையா ? சந்தனின் மேலிருந்த கோபமா ? அவன் மரியாதையாக நடந்து கொண்டதா ? அவன் பர்ஸ்னாலிட்டியா ? போதையா? புகழ்ச்சியா ? ஏன் அவனுடன் அவ்வளவு தூரம் சென்றேன் என புழுங்கிக்கொண்டே இருந்தாள்.

இருவரும் நள்ளிரவுக்கு மேல் கண் அயர்ந்தனர்.

மறுநாள் காலை பதினோரு மணிக்கு சந்தனின் ஃப்ளாட் காலிங் பெல்லை அடித்தாள் ஷமித்ரா. டிரிம் செய்து கொண்டு குளித்து முடித்து ஃப்ரெஷ்ஷாக இருந்த சந்தன் கதவைத் திறந்தான்.

உள்ளே வந்த ஷமித்ரா உடனடியாக தன்னுடைய பொருட்களை எடுத்து ஒரு இடமாக அடுக்க ஆரம்பித்தாள்.

"எதாவது குடிக்கிறியா ஷமி ?" என்றான் சந்தன்.

"இல்லை வேண்டாம், தேங்க்ஸ்," என்ற ஷமி, "காலி பாக்ஸ் இல்லைன்னா பெரிய பை இருந்தா குடேன், சின்னச் சின்னப் பொருட்களை அதுல போட்டுக்குவேன்," என்றாள்.

"நீயே எடுத்துக்கிட்டு போகப்போறியா ஷமி ?" என்றான் சந்தன்.

"இல்லை, பேக்கர்ஸ் அண்ட் மூவர்ஸ் சொல்லி இருக்கேன். மதியம் 1 மணிக்கு வந்துடுவாங்க. நான் ஜஸ்ட் அரேஞ்ச் பண்ணி வச்சிட்டா ஈஸியா இருக்கும் அதான்."

"எங்க போற ஷமி ?"

"ஹாஸ்டலுக்குத்தான்."

"இவ்ளோ திங்க்ஸையும் வைக்க இடம் இருக்கா அங்க ?"

"ஒரு ஸ்டோர் ரூம் இருக்கு. அதுல தேவையில்லாததை போட்டுடுவேன். தேவையானதை மட்டும் ரூம்ல வச்சிப்பேன். அதெல்லாம் பேசிட்டேன்."

"கண்டிப்பா போய்த்தான் ஆகணுமா ஷமி ?"

வேலையை நிறுத்திவிட்டு சில செகண்ட்ஸ் அமைதியாக இருந்தாள். "நீதான் போகச் சொன்ன. போயிடறதுதான் நல்லது."

"நான் போகச் சொன்னேன்னு போறேன்னு சொல்றியே, அப்ப நான் இருக்கச் சொன்னா இருக்கனும்தானே, அதானே லாஜிக் ? இங்கேயே இருந்துடு ஷமி ப்ளீஸ்."

ஒருக்கணம் திகைத்த ஷமித்ரா, "நீ போகச் சொன்னா போறதுக்கும் இருக்கச் சொன்னா இருக்கறதுக்கும் நான் என்ன அடிமையா சந்தன் ?"

"அதேதான் நானும் சொல்றேன். நான் சொல்றதை கேட்காதே. நான் உன்னை போன்னு கோவத்துல சொன்னதை ஏன் நீ கேக்கற? நான் சொன்னதை கேட்டு வெளில போகாதே. தோ பாரு ஷமி, சத்தியமா சொல்றேன், கோவத்துல என்ன சொல்றதுன்னே புரியாம எதோ உளறிட்டேன். அதுவும் உன் மேல இருக்கும் பொஸஸிவ்நெஸ்தான்."

"இந்த பொஸஸிவ்நெஸ்ஸே சுத்த ஏமாத்து வேலை. பொஸஸிவ்நெஸ்ஸை வச்சி பொண்ணுக்கு எதாவது கேரிங்கா செய்யறீங்களா ? சந்தேகப் படறதையும், திட்டுறதையும் பொஸஸிவ்நெஸ்ஸுன்னு சொல்லி சமாளிக்கிறீங்க," என்றாள்.

சந்தன் காயப்பட்டான்

# 50

"ஷமி ப்ளீஸ், நிஜமாவே பொஸஸிவ்நெஸ்தான். இன்னொருத்தன் கூட நெருக்கமா இருக்கும் ஃபோட்டோவைப் பார்த்தா யாருக்கும் கோவம்தான் வரும். நான் இன்னொரு பொண்ணு கூட நெருக்கமா இருக்கும் போட்டோவைப் பார்த்தா உனக்கு கோவம் வராதா ?"

"வரும், ஆனா நிச்சயமா உன்னை மாதிரி கத்த மாட்டேன். என்னன்னு உன் கிட்ட விளக்கம் கேட்பேன். வீட்டை விட்டு வெளில போன்னு சொல்ல மாட்டேன்."

"நான் சொன்னது தப்புதான் ஷமி. திரும்ப சொல்றேன், அது மீனிங்க்லெஸ் வேர்ட். கோவத்துல சும்மா உளறியது. இது உன் வீடு ஷமி. உன் வீட்ல இருந்து உன்னை யாராவது வெளில போன்னு சொன்னா, நீ போயிடுவியா ?"

"சீ.. சந்தன், சும்மா செண்ட்டிமெண்ட்டா பேசாதே. இது உன் வீடுதான். நான் இங்க வந்தது என் தப்புதான். நீ எப்ப வேணா வெளில போடீன்னு சொல்ல முடியும். அந்த மாதிரி ஒரு சிச்சுவேஷன் இனி என் லைஃப்ல வரக்கூடாது. அவ்ளோதான்."

"ஷமி, நான் உன்னைக் கட்டிப் பிடிச்சிக்கலாமா ?"

"இதையெல்லாம் ஏன் கேட்டுக்கிட்டு இருக்குற ? அவ்ளோ டிஸ்டன்ஸா ஃபீல் பண்றியாடா ?"

சட்டென மலர்ந்த சந்தன், உடனடியாக ஷமித்ராவை பாய்ந்து அணைத்துக்கொண்டான். அந்த பாய்ச்சலின் விசை தாங்காமல் ஷமித்ரா தடுமாற, இருவரும் கீழே விழுந்தனர். லேசாக அடிபட்டது. அந்த வலியை பொருட்படுத்தாமல், அணைப்பை விட்டால் விலகல் வந்து விடப்போகிறது என்ற பயத்தில் அணைத்துக்கொண்டே கிடந்தனர்.

"ஷமி, ஷமி ஐ லவ் யூ சோ மச் ஷமி. நீ இல்லன்னா செத்துப் போயிடுவேன் போல இருக்கு ஷமி," என்ற சந்தன், "நீ இல்லைன்னா என்னென்னவோ தப்புத் தப்பா நடக்குது டீ," என்று சொல்லி விட்டு ஷமித்ராவின் கழுத்தில் முகம் புதைத்து அழ ஆரம்பித்தான்.

"அழாதடா என் செல்லம். ஏன்டா அழற ? நான் உன் ஷமிதான்டா. உன்னை விட்டு விலகினா எனக்குமே என்னமோ ஆயிடுதுடா. என்னென்னவோ நடக்குதுடா. லவ் யூ மை பேபி," என ஷமித்ராவும் லேசாகக் கலங்கினாள்.

காதலர்களுக்குள் சண்டை வந்தால் வெறும் சொற்களால் எந்த சமாதனத்தையும் ஏற்படுத்த முடியாது. வாதப் பிரதிவாதங்களுக்கு முடிவே கிடையாது. ஒரு அணைப்பு, ஒரு முத்தம் அல்லது ஒரு தேம்பல் எப்பேர்ப்பட்ட சண்டையையும் மனத்தாங்கல்களையும் முடிவுக்கு கொண்டு வந்துவிடும். ஈகோவை விட்டு சரணாகதி அடைந்து விட்டால் அனைத்தும் முடிந்து விடும். உறவு முன்னை விட இன்னும் பலம் பெறும்.

சண்டையின் போது யார் முதலில் அணைப்பது ? யார் முதலில் முத்தம் கொடுப்பது ? யார் மீது தவறு இருப்பினும், யார் வேண்டுமானாலும் அணைக்கலாம். இதிலெல்லாம் கணக்கு பார்த்துக்கொண்டு இருக்கக் கூடாது. கடந்த நான்கு முறை நான் தான் அணைத்தேன், இந்த முறை அவள் அணைக்க வேண்டும் என்ற பிடிவாதக் கணக்குகள் கதைக்கு ஆகாது. 100 முறை ஆனாலும் ஒருவரே அணைத்தால்தான் என்ன ? அது எவ்வளவு பெரிய விஷயம் ? எவ்வளவு பெரிய கொடுப்பினை ?

எழுந்து இருவரும் உட்கார்ந்து கொண்டு கண்களைத் துடைத்துக்கொண்டனர்.

"ஷமி, எனக்கு ஒரு டீ போட்டுக் குடேன்," என்றான் சந்தன்.

ஷமித்ரா எழுந்து டீ போட்டுக் கொண்டு வந்தாள்.

டீ குடித்துக்கொண்டே, "ஷமி, நான் உன்கிட்ட ஒன்னு சொல்லணும். மறைக்கிறதுக்கு மனசு வரலை. சொன்னா நீ எப்படி எடுத்துப்பியோ, ஆனாலும் சொல்லாம இருக்க முடியலை," என்றான்.

"என்னடா ? சொல்லுடா. என்கிட்ட சொல்லாம யார் கிட்ட போய் சொல்லுவ ?"

"என் ஆ.ஃபீஸ்ல நித்திகான்னு ஒருத்தி இருக்கா. சும்மா அவ கூட ஃபிலிமுக்குத்தான் போனேன். அப்படியே டிரிங்ஸ் சாப்பிட்டோம். அப்புறம் அவளை வீட்ல டிராப் பண்ணலாம்னு பாத்தா, இங்க நம்ம வீட்டுக்கே வந்துட்டா."

"சரி, அப்புறம் ?"

"அப்புறம் ....அவ என்னை ஹக் பண்ணினா, கிஸ் பண்ணினா...."

"ம்ம்"

"அப்புறம் என்னைப் படுக்கைல தள்ளி ....என்ன பண்ணினான்னே தெரியலை. போதையா இருந்துச்சு. அப்புறம் எதோ பண்ணினா...ஒரு மாதிரி வெறுமையா ஆகிடிச்சு. தலை வலிக்க ஆரம்பிச்சிடிச்சு. ரொம்ப கில்ட்டி ஃபீலா ஆகிடிச்சு, குட்டிமா. சாரிடா....."

"அவ உன்னை என்னென்னமோ பண்ணினா, நீ ஒன்னுமே பண்ணலையா ?"

## 51

"நீ அவளை ஒன்னுமே பண்ணலையா," என ஷமித்ரா கேட்டதும், சந்தனுக்கு அவமானமாகப் போய் விட்டது.

"இல்ல ஷமி, நான் சும்மா லைட்டா ஹக் பண்ணினேன். ஏன் பண்ணினேன்னு தெரியலை. சாரி டீ."

ஹானஸ்ட்டாக ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற அளவில் முடிவெடுத்த சந்தன், தான் விரும்பி செய்த செயல்களை மறைத்தான். நித்திகாவைப் பலி கொடுப்பது மூலம் ஷமித்ராவுடன் உறவு நிலைக்கும் என்றால், பலி கொடுப்பது தவறே இல்லை என்பது அவன் எண்ணம்.

"சரி ஓப்பனா சொன்னியே, அதுவே போதும். என்கிட்ட எதையும் மறைக்கக்கூடாது. அதான் எனக்கு வேணும். ஏன்டா, நீங்க ரெண்டு பேரும் இண்டர்கோர்ஸ் பண்ணிக்கிட்டீங்களா ?"

இதை சாதாரணமாகக் கேட்டாலும், ஷமித்ராவுக்கு மனம் துடித்துக் கொண்டிருந்தது. அவன் இல்லை என்று சொல்ல வேண்டும் என ஆசைப்பட்டாள்.

"இல்லடீ, சரியா சொல்லத் தெரியலை. நான் எதுவும் பண்ணலை. நான் போதைல இருந்தேன். அவதான் என்னை பெட்ல தள்ளினா. அப்புறம்….."

"சரி, ஓகே போதும். அதை நான் தெரிஞ்சுக்க விரும்பல."

"அதான், அதுக்கு மேல ஏதும் நடக்கல. பெட்ல தள்ளினா, நான் விழுந்துட்டேன். அவளும் பக்கத்துல வந்து படுத்துகிட்டா. என்னா நடந்துச்சுன்னே தெரியலை. அடுத்த 5 நிமிஷத்துல நான் தூங்கிட்டேன்."

இங்கு தெரிந்தே புளுகினான் சந்தன். ஷமித்ராவும் தெரிந்தே ஏமாற ஆசைப்பட்டாள்.

"சாரி குட்டிமா," என்று மறுபடியும் சொல்லிய சந்தன், ஷமித்ராவை அணைத்துக்கொண்டான். அவனை மடியில் படுக்க வைத்துக்கொண்ட ஷமித்ரா, "முந்தாநாள் எனக்கு ஒரு இன்சிடண்ட் நடந்துச்சு கன்னுக்குட்டி," என்றாள்.

விலுக்கென்று எழுந்த சந்தன், கோரமாகப் போகும் தன் முகத்தை சாந்தமாக வைத்துக்கொண்டு, "சொல்லு குட்டிமா," என்றான்.

மதுரனை சந்தித்தது, காரில் சென்றது, க்ளப்புக்கு சென்றது என அனைத்தையும் சொன்ன ஷமித்ரா,

"அங்க டிரிங்ஸ் சாப்பிட்டேன்டா."

"சரி.."

"அப்புறம், என் டிரஸ் கலரைச் சொல்லி டேன்ஸ் ஆட அனௌன்ஸ்மெண்ட் வந்ததால ஆடினேன்."

"ஓகே"

"அப்ப மதுரன் கொஞ்சம் நெருக்கமா ஆடி கிஸ் பண்ணினான்."

"எங்க உதட்டுலயா ?"

"இல்ல, கன்னத்துல. அப்புறம் .....சாரி டா, நானும் லைட்டா அவனை கிஸ் பண்ணினேன்."

"நீ ஏன் குட்டி அவனை கிஸ் பண்ணின ?"

"தெரியலைடா. போதையா ? உன் மேல இருந்த கோபமான்னு தெரியலை. என்னமோ பண்ணிட்டேன்."

"ஒரு தடவைதான பண்ணின ?"

"இல்லடா, ரெண்டு மூணு தடவை இருக்கும்."

"ப்ச்...சரி ஓகே , அப்புறம்?"

"மூட் அவுட் ஆகதடா செல்லம்."

"இல்லடீ, நீ சொல்லு."

"அப்புறம், டிரிங்ஸ்ல என்னமோ கலந்து குடுத்துட்டானுங்க போல இருக்கு. எனக்கு மயக்கம் வந்துடிச்சு. அவன் ரூமுக்கு என்னைக் கூட்டிட்டு போய்ட்டான்."

"அய்யோ, என்ன பண்ணினான் ? ரேப் பண்ணிட்டானா ?"

"இல்லடா. கொஞ்சம் நல்லவன் போலிருக்கு. அதெல்லாம் பண்ணலை. மயங்கிக் கிடந்தேன். காலைல எழுந்ததும் ஓடி வந்துட்டேன்."

"அப்பா ....உனக்கு ஒன்னும் ஆகலையே, அதுவே போதும் குட்டி," என்ற சந்தன், "குட்டிமா ஒன்னு கேட்கட்டுமா ?"

"கேளுடா."

"நீ அவனை லவ் பண்ணுனியா ?"

"ச்சீ இல்லடா."

"ஒரு செகண்ட் கூட லவ் பண்ணலை இல்லை?"

"சத்தியமா ஒரு செகண்ட் கூட லவ் பண்ணலைடா. நீ நித்திகாவை கொஞ்சமாச்சும் லவ் பண்ணுனியா ?"

"பிராமிஸா ஒரு செகண்ட் கூட லவ் பண்ணலை. எப்பவும் உன்னைத்தான் லவ் பண்ணிட்டே இருந்தேன். உன்னைத் தவிர யாரையும் என்னால லவ் பண்ண முடியாது குட்டிமா. ஐ லவ் யூ !"

இருவரும் இறுக்கமாக அணைத்துக்கொண்டனர்.

காலிங்க் பெல் அடித்தது. சந்தன்தான் போய்த் திறந்தான்.

ஃப்ளாட் செக்ரட்டரி, ஹவுஸ் ஓனர் மற்றும் வீட்டை காலி செய்ய வந்திருக்கும் பேக்கர்ஸ் அண்ட் மூவர்ஸ் ஆட்கள் நின்று கொண்டு இருந்தார்கள்.

முற்றித் தொடரும். இதன் தொடர்ச்சி

உயிர்மெய் – 2 Sexiest Hangover Love Story